# அவளுக்கு ஏன் சாப்பிட்டோம் என்றே தோன்றிற்று...












ஒரு தேக்கரண்டி ஈனோ ஒரு டம்ளர் ஜலத்தில் போட்டால் உடனே பொங்கி கரைந்து நேர்த்தியான, புத்துணர்ச்சியளிக்கும் பானமாக மாறும். தளதளக்கும் ஈனோ 'ப்ரூட் ஸால்ட்' இதத்தையளித்து சமன மூட்டகூடியது. வயிற்று கோளாறுகளிலிருந்து உடனடியாக நீடித்த நிவாரணமளிக்கிறது. ஜீரணசக்தியை சரியாக்குகிறது.






ஈனோ சீக்கிரத்தில் அவளுக்கு குணமளித்தது

# ஈனோ 'ப்ரூட் ஸால்ட்'

'ஈனோ', 'ப்ரூட் ஸால்ட்', என்ற வார்த்தைகள் ரெஜிஸ்டர்ட் ட்ரேட் மார்க்குகள்

பீச்சம் (இந்தியா) பிரைவேட் லிமிடெட்

JWT-ENO.1043

# கல்கி பொருளடக்கம்

பிலவ, சித்திரை 11 ❋ ஏப்ரல் 23, 1961



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

# புகையிலையின் வரலாறு... 3



புகையிலையைப்பற்றிய அறிவும் உபயோகமும் அமெரிக்காவிலிருந்து ஐரோப்பாவிலும், இங்கிலாந்திலும், பிற நாடுகளிலும் பரவியது. உருளைக் கிழங்கு, தக்காளி இனத்தைச் சேர்ந்த அதனை 1508-ல் போர்ச்சுக்கேசியர் தம் நாட்டிற்குக் கொணர்ந்தனர். அதுமுதல் புகையிலை இந்திய மண் மீது தழைத்து வந்துள்ளது. இந்தியாவில் இன்று புகையிலை உற்பத்திக்குப் பிரதானமான மாகாணங்கள்: பம்பாய், பீகார், ஆந்திரம், வங்காளம், சென்னை, மைசூர் ஆகியவையே.

Panama

20

Specially blended for a cool and pleasant smoke from selected Virginia Tobacco leaves

CIGARETTES




பம்பாய்—57.

**பனாமா**

**ஒரு நல்ல சிகரெட்—**
**இறுதிவரை இன்பமூட்டுவது**

பாரதத்தில் இத்தகைய
தேசிய ஸ்தாபனங்களில்
மிகப் பெரியது.

GT.703 TM

Greens' Advtg.



மலர் 20 | இதழ் 38

தமிழ்த்திரு நாடுதன்னைப்— பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார்

# இலங்கைத் தமிழர்களின் போராட்டம்

இலங்கை பெடரல் கட்சியார் நடத்தும் சாத்துவிகப் போராட்டம் இன்னும் தீவிரமாகி யிருக்கிறது. தமிழர் பெரும்பான்மையோராக வாழும் வடக்கு, கிழக்கு மாகாணங்களில் பெடரல் கட்சியார் தனிப்பட்ட தபால் இலாக்கா நடத்தத் தொடங்கி யிருக்கின்றனர். அவர்கள் வெளியிட்ட பத்து சதம் ஸ்டாம்புகள் முதல் நாளே ஐயாயிரம் விற்கப்பட்டனவாம். இலங்கைவாழ் தமிழ் மக்கள் தங்கள் கொள்கையில் எவ்வளவு உறுதியுடன் நிற்கிறார்கள் என்பதை இலங்கை சர்க்கார் இப்பொழுதாகிலும் புரிந்துகொள்ள வேண்டும்.

இன்றைய இலங்கைத் தமிழர்களின் குறைந்தபட்ச கோரிக்கை இதுதான்: இன்றைய பிரதமரின் கணவர் வாக்களித்தபடி 'தமிழ் நியாயமான அளவுக்கு ஆட்சி மொழியாக இருக்க வேண்டும்.' இது சிங்களவர், தமிழர் யாவரும் சேர்ந்து ஒப்புக் கொண்ட திட்டம். இலங்கை பார்லிமெண்ட் ஒப்புக்கொண்ட திட்டத்தை, தம் கணவர் வாக்களித்ததை, அவர் லட்சியங்களை அமுல் நடத்தப் போவதாகச் சொல்லிக் கண்ணீர் விட்டு, அழுது புலம்பி மக்களின் அனுதாபத்தையும், வோட்டுக்களையும் பெற்றுப் பதவிக்கு வந்துள்ள ஸ்ரீமதி பண்டாரநாயகா கைவிடுவது நியாயமா ?

ஸ்ரீமதி சிறிமாவோ பண்டாரநாயகா, காமன்வெல்த் மகாநாடு முடிந்து இலங் கைக்குத் திரும்பி வந்தவுடன் இந்தப் போராட்டத்துக்குச் சமாதானமான முடிவு ஏற்படும் என்று ஈழத்துத் தமிழர்கள் எதிர்பார்த்தார்கள். ஆனால் அவர் வந்ததும் வராததுமாக இலங்கை வானொலியில் வெளியிட்ட அறிக்கை அனைவருக்கும் பெருத்த ஏமாற்றமாக இருந்தது. அதுமட்டுமல்ல, சிங்களவரைத் தமிழருக்கு எதிராகத் தூண்டி விடுவதாகவும் இருந்தது. நல்ல வேளையாகச் சிங்களவர் இதுவரை அமைதியையே கடைப்பிடித்து வருகின்றனர். அவர்களும் தமிழர்களின் கோரிக்கையில் நியாயம் இருப்பதை உணர்ந்து வருகின்றனர் என்பதே இதன் பொருள். சிங்களச் சார்புள்ள இலங்கைப் பத்திரிகைகள்கூட, சர்க்காரின் பிடிவாதத்தை வன்மையாகக் கண்டித்து வருகின்றன. இப்படி எல்லாப் பக்கமும், இலங்கை ஆட்சியாளரின் போக்குக்குக் கண்டனங்கள் தெரிவிக்கப்படுகின்றன.

ஆனால் ஆட்சியிலிருக்கும் ஸ்ரீமதி பண்டாரநாயகாவோ வேண்டுமென்றே உண்மையைத் திரித்துக் கூறும் வகையில் பேசி வருவது வருத்தத்துக்குரிய விஷயம். மொழியின் அடிப்படையிலே நாட்டைப் பிரிக்கத் தாம் ஒரு நாளும் சம்மதிக்க முடியாது என்று பேசியிருக்கிறார் அவர்.

பெடரல் கட்சியார் தமிழர்கள் வாழும் பிரதேசத்தில் இலங்கை சர்க்காருக்குட்பட்ட மாகாண ஆட்சிதான் கேட்கிறார்கள். இதனை நாட்டுப் பிரிவினை கோருவதாகச் சொல்வது விஷமப் பிரசாரமாகும். ஸ்ரீமதி பண்டாரநாயகா அவர்களே இந்த அநியாயமான பிரசாரத்தைச் செய்வது, அவருக்கோ, அவர் பதவிக்கோ பொருத்தமானதல்ல. விரைவில் அவர் தமது பிடிவாதத்தை விட்டு, பெடரல் கட்சியார் கோரிக்கைக்குச் செவிசாய்த்து அழகிய சிங்களத் தீவில் அமைதியை நிலைநாட்டுவார் என்று எதிர்பார்க்கிறோம்.

# ருஷ்யாவின் சாதனை

விஞ்ஞான உலகில் மற்றொரு மகத்தான சாதனை புரிந்து ருஷ்ய மக்கள் புகழ் பெற்று விட்டார்கள். வான வெளியில் இதுவரை யாரும் போகாத உயரத்துக்கு ஒரு மனிதனை அனுப்பி, உயிரோடு திரும்பப் பெற்று விட்டார்கள். புத்தாண்டு தினத்தில் இந்த அதிசயச் செய்தியைக் கேள்விப்பட்ட அனைவரும் புது யுகத்துக்கு, புதுமுறை வாழ்வுக்கு இது ஓர் ஆரம்பம் என்று மகிழ் வெய்தி யிருக்கின்றனர்.

இதில் ஒன்றும் பொருளில்லை. மனிதனுடைய ஆசைக்கும் விஞ்ஞான யந்திர சாதனங்களுக்கும் வரம்பில்லை தான். அற்புத சாதனை என்பதில் சந்தேகமில்லை. ஆயினும் மக்களுக்குள்ள பரஸ்பர பயத்தையும் யுத்தங்களையும் நாசகர சாதனங்களையும் நிறுத்தி விட முடியவில்லை. ஒருபுறம் அற்புத சாதனை, மற்றொரு புறம் தோல்வியாக இருந்து வருகிறது.

வானவெளிக் கப்பலில் சென்ற யூரி காகரின் ஒன்றே முக்கால் மணி நேரம் வானவெளியில் சுற்றிவிட்டுத் திரும்பி வந்திருக்கிறார். அவர் மேலெழும்பிய உச்ச உயரம் 187 மைல் என்று சொல்லப்படுகிறது. கண்ணுக்குக் காணப்படும் பிரபஞ்சத்தில் அதாவது நட்சத்திர மண்டலங்கள் உட்பட்ட பிரபஞ்சத்தில் இந்த 187 மைல் எம்மாத்திரம்? ஏழு சமுத்திரங்களுக்கும் ஒரு நீர்த்துளிக்குமுள்ள சிறுமையைக் காட்டிலும் சிறியதாகும். மணிக்கு 18,000 மைல் வேகத்தில் இந்த ருஷ்ய வானவெளிப் பிரயாணி பறந்ததாகச் சொல்லுகிறார்கள். நாம் ஒவ்வொருவரும் -வாசகர்கள் உள்பட- மணிக்கு 72,000 மைல் வீதம் தினமும் இரவும் பகலும் சூரியனைச் சுற்றிக்கொண்டு வருகிறோம். இப்படி மணி ஒன்றுக்கு 72,000 மைல் வேகத்தில் சுற்றுவது நம்முடைய உணர்வைத் தீண்டாமல் தன்பாட்டுக்கு நடக்கிறது.



யூரி காகரின்

இந்தச் சாதனையை ருஷ்யா முதன் முதலில் செய்தது என்பதற்காகக் கம்யூனிஸ கொள்கையினால்தான் இது முடிந்தது என்று கம்யூனிஸ்ட் கட்சிக்காரர்கள் பறைசாற்றுவார்கள். கம்யூனிஸத்துக்கும் இதற்கும் சம்பந்தம் கிடையாது. மனிதனின் விஞ்ஞான அறிவும் ஆற்றலுமே இதைச் சாதித்தன.

# கண்ட்ரோல் பூதம் திரும்புமா?

புத்தாண்டு தினத்தன்று சிம்ஸன் தொழிலாளர் விழாவில் கலந்துகொண்ட திரு டி. டி. கே. அவர்கள் உணவு தானிய கண்ட்ரோல்களை ரத்து செய்ததைப் பற்றிக் கண்ணீர் சிந்தியிருக்கிறார். கண்ட்ரோல் இருந்தபோது அரிசி படி 10 அணுவுக்கு விற்றதாம். கண்ட்ரோல் எடுத்த பிறகு 12 அணுவாயிற்றாம். இப்போது ஒரு ரூபாய்க்கு விலை ஏறி விட்டதாம். இதற்குக் காரணம் கண்ட்ரோல் எடுபட்டதுதான் என்று கூறியிருக்கிறார். கண்ட்ரோல் இருப்பதற்கும் இல்லாததற்கும், விலை ஏறுவதற்கும் ஏறாததற்கும் ஒரு சம்பந்தமுமில்லை. காங்கிரஸ் ஆட்சியின் திட்டங்களினாலும், பண வீக்கத்தினாலும் எல்லா விலைகளும் ஏறிக்கொண்டு வருவது உலகமெல்லாம் அறிந்த விஷயம்! காங்கிரஸ் ஆட்சியின் பெயரில் சொல்லப்படும் குற்றச்சாட்டுகளுக்கு ஏதாவது பிதற்றி மக்களின் மூளையைக் குழப்பி, சமாதானப்படுத்தலாம் என்று பார்க்கிறார்கள்.

கண்ட்ரோல் அரிசி படி பத்தணுவுக்கு விற்கும். ஆனால் ஆறு அவுன்ஸ் அரிசி வீதம் கொடுப்பார்கள். அதுவும் புழுத்து, மட்கி, துர்நாற்றம் வீசும் அரிசியைத்

## சேதி தெரியுமா? < சாமா >




### பாழும் கிணறு




உணவுக் கண்ட்ரோலை எடுத்தது தவறு--டி.டி.கே



தான் ரேஷன் கடைகளில் மக்களுக்குக் கொடுத்தார்கள். இந்த அரிசியாவது ஒரு வாரத்துக்குக் காணுமா என்றால் காணாது. மூன்று நாட்களில் தீர்ந்துவிடும். பிறகு ரூ. 1-6-0 விதம் கறுப்பு மார்க்கெட்டில் வாங்கிப் பாக்கி நான்கு நாட்களுக்கு மக்கள் உண்டு வந்தார்கள்.

இப்படி மக்கள் அரிசிக்காகப் பட்ட தொல்லை கொஞ்சநஞ்சமல்ல! இந்த உணவு தானிய கண்டரோல் காரணமாகக் கிராமத்து விவசாயி முதல் நகரத்தில் பணம் கொடுத்து 'ரேஷன் அரிசி வாங்கியவன்வரையில் பட்ட கஷ்டங்கள் சொல்லி மாளாது. இந்தக் கஷ்டங்களினால்தான் 1952ல் நடந்த தேர்தலில் காங்கிரஸ் படுதோல்வியடைந்தது. பலப் பல உதிரிக் கட்சிகள் சட்டசபையில் புகுந்தன. கம்யூனிஸ்ட்டுகள் பெருவாரியாக இருந்தனர்.

1952ல் உணவு ரேஷன் எடுக்கப்பட்டதும் மக்கள் ஆறுதலடைந்து பெருமூச்சு விட்டனர். மக்கள் உள்ளங்களில் மகிழ்ச்சி பொங்கிற்று. அடுத்த தேர்தலில் காங்கிரசுக்கே வோட்டளித்தனர்.

அப்போது காங்கிரஸ் பதவிக்கு வந்து எட்டு ஆண்டுகள் ஆகியிருந்தன. ஆனால் இன்னமும் தாங்கள் எதனால் பதவிக்கு வந்தோம் என்பதை மறந்து உணவு தானிய கண்ட்ரோலைப் பற்றி இப்படிப் பேசுகிறார்கள்.

காங்கிரஸ் போகிற போக்கில் மறுபடியும் அரிசி கண்ட்ரோலும் ரேஷனும் வருமென்பதற்கு டி. டி. கே. அவர்களுடைய பேச்சு ஒரு முன்னறிவிப்பு ஆகும்.

## குறைகளுக்குக் குறைவற்ற சர்க்கார் துறை

சர்க்கார் எடுத்துக் கொண்டு நடத்தும் தொழில்களின் நிலை எவ்வளவு கீழ்த்தரமாக இருக்கிறது என்பது நாளுக்கு நாள் வெட்ட வெளிச்சமாகி வருகிறது.

'உணவும், உடையும் எக்கேடு கெட்டுப் போகட்டும்; உருக்குத் தொழிலை முதலில் வளர்ப்போம்' என்று கம்யூனிஸ பாணியில் அறைகூவும் நம் பிரதமர் அவர்கள் அந்தத் தொழிலாவது நேராக நடக்குமாறு பார்த்துக் கொண்டிருக்கலாம். சென்ற ஆண்டில் சர்க்கார் உருக்கு ஆலைகளில் ஒரு கோடியே பத்தொன்பது லட்சம் ரூபாய் நஷ்டம் ஏற்பட்டது என்று படிக்கும்போது நம் நெஞ்சம் ஊது உலையாகத்தான் எரிகிறது. நாட்டில் உருக்கின் உபயோகம் பெருகியபடி இருக்கும்போது இவ்வாறு நஷ்டம் ஏற்படக் காரணம் உற்பத்தி முறையிலுள்ள ஊழலும், கோளாறும், கவனக் குறைவும்தான். இதெல்லாமாவது சீர் திருந்தக் கூடும். ஆனால், இதோடு கச்சாப் பொருள், எரிபொருள் இவற்றின் தட்டுப்பாட்டையும் காரணம் காட்டுவதுதான் மேலும் வேதனையும், ஆத்திரமும் அளிக்கிறது. உற்பத்திக்கு மிக அவசியமான இந்த இரு அம்சங்களைக்கூட முதலில் சரி செய்து கொள்ளாமல் திட்டம் தொடங்குவது எவ்வளவு அறிவற்ற காரியம்?

சிந்திரி உர உற்பத்தி சாலையிலும் இவ்விரண்டு அம்சங்களைக் காரணம் காட்டி உற்பத்திக் குறைவுக்குச் சமாதானம் சொல்லப்படுகிறது. 1958-59ல் ஒரு கோடி ரூபாய்க்கு மேல் லாபம் சம்பாதித்த இந்த உர ஆலைக்குச் சென்றஆண்டு 25 லட்ச ரூபாய் லாபம்தான் கிடைத்திருக்கிறதாம். ஏக காலத்தில் எட்டு ஜெனரேட்டர்களும் பழுதாகி உள்ளனவாம். இவையெல்லாவற்றையும் செப்பனிட வேண்டி, உற்பத்தியே தாற்காலிகமாக நிறுத்தப்பட்டிருக்கிறது. அதாவது கோடி கோடியாகச் செலவிட்ட பொதுப் பணம் ஒரு பயனுமின்றி முடக்கப்பட்டுத் தூங்குகிறது.

இங்கே நம் நெய்வேலி பழுப்பு நிலக்கரித் திட்டத்தைப் பற்றிக் கேட்கவே வேண்டாம். நிலக்கரி எடுப்பது, கரிக் கட்டி தயாரிப்பு, அனல் விசை நிலையம், உரத் தொழிற்சாலை என்று அத்திட்டத்தில் பல அம்சங்களைச் சேர்த்தும், இவற்றைச் சரியானபடி ஒருங்கிணைக்காததால் ஒன்றுமே உருப்படியாக முன்னேறவில்லை. முதலில் செய்த செலவு மதிப்பீடோ உயர்ந்தபடியே இருக்கிறது. இதுவரையில் நாற்பது கோடி ரூபாயை விழுங்கி ஏப்பம் விட்டிருக்கிறது இந்தத் திட்டம். வேலை ஏன் இப்படித் தாமதமாகிறது என்று கேட்டால் அந்நியச் செலாவணிச் சிக்கல்களைக் காரணம் காட்டுகிறார்கள். அந்நியச் செலாவணி கிடைக்காததால் பாதிக்கப்படும் திட்டங்களெல்லாமே தென் இந்தியாவில்தான் உள்ளன என்னும் பரவலான அபிப்பிராயம்நிலவுகிறது. இருக்காதா? இரண்டாம் திட்டத்திலேயே இடம் பெற்றிருக்க வேண்டிய தாம்பரம் - விழுப்புரம் மின்சார ரயில் திட்டம் இந்தக் காரணத்துக்காகத்தானே தள்ளிப் போடப்பட்டது? உள்நாட்டிலேயே ரயில் சாதனங்கள் தயாராகும் வரையில் இந்தத் திட்டத்தைத் தொடுவதற்கில்லை என்றல்லவா முடிவு செய்திருக்கிறார்கள்?

[அந்நாட்களில் சேலம் விஜயராகவாச்சாரியார் என்றாலே மக்கள் தலைநிமிர்ந்து நிற்பர். அவரது தேசத்தொண்டு மகத்தானது; வீரமும் தீரமும் பொருந்தியது. காங்கிரஸ் தோன்றுவதற்கு முன்பே அதிகார வர்க்கத்தை எதிர்த்துப் போராடிய தீரர். பின்னர் காங்கிரஸின் போராட்டங்களில் கலந்து கொண்டார். 1920 ல் நாகபுரியில் நடந்த காங்கிரஸ் மகாநாட்டில் கலந்துகொண்டு, ஒத்துழையாமை இயக்கத்தின் லட்சியம் சுயராஜ்யமாக விளங்க வேண்டும் என்றார். அதற்குக் காந்திமகான் தமது பூரண ஆதரவை அளித்தார். இன்று நமது அரசியல் நிர்ணயச் சட்டம் நமக்கு அளித்துள்ள ஜீவாதார உரிமைகளை ஆதியில் வகுத்துக் கொடுத்தவர் சேலம் விஜயராகவாச்சாரியார்தான். இப்பெரியார் அமரரான நாள் ஏப்ரல் 19ம் தேதி. அவரை நினைவுகூர்ந்து, அவரது தூயகுண நலன்களைப் பெற முயல்வோமாக.]

# சேலம் தந்த சீலச் செல்வர்

காஸா சுப்பாராவ்

துன்பமும் துர்ப்பாக்கியமும்தான் மக்களின் இயல்பான பான்மையை வெளிக்கொண்டு வருகின்றன. வாழ்க்கையில் ஏற்படும் துயரம் தரும் அனுபவங்களினால் அலைக்கழிக்கப்பட்ட பலவீனர்கள் உள்ளம் சோர்ந்து அழிவு நோக்கித் தலைகுப்புற விழுகிறார்கள்; அவர்களைப்பற்றிய நினைவுகளும் அழிந்து போகின்றன. இதே அனுபவங்கள் ஆத்ம பலம் பெற்றவர்களுக்கு வரப்பிரசாதமாக அமைகின்றன. அவை, ஏதோ ஒரு விந்தையான முறையில், பல ஆண்டுகள் பாடுபட்டுப் பெறக்கூடிய பெரும் பெயரையும் புகழையும் அவர்களுக்கு விரைவில் ஈட்டித் தந்து விடுகின்றன. இவ்வாறு இடுக்கண்களுக்கு ஈடு கொடுத்தே, விறுவிறு வென உயர்நிலை அடைந்து ஒப்பற்ற வான நட்சத்திரமாக விளங்கித் தனிச் சிறப்புப் பெற்ற தென்னிந்தியத் தலைவர்களில் ஸ்ரீ ஸி. விஜயராகவாச்சாரியாருக்கு ஒப்பாக வேறொருவர் கிடையாது.



மங்களூரில் ஆசிரியராக இருந்த அவர், வக்கீல் தொழிலில் ஈடுபடுவதற்காகச் சேலத்துக்கு வந்தார். இரண்டாண்டுகளுக்குப் பின்னர், தமது முப்பதாவது வயதில் அங்கு பொன்னுசாமிச் செட்டியார் முதலிய எழுவருடன் பெரியதொரு இந்து - முஸ்லீம் கிளர்ச்சியில் சம்பந்தப் படுத்தப்பட்டார். கோர்ட்டில் அவரை விசாரித்து, பத்தாண்டுக் கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டது. ஸ்ரீ விஜயராகவாச்சாரியார் தமது தண்டனையை எப்படி ஏற்றார் என்பது பற்றி அனுபவம் வாய்ந்த ஒரு பத்திரிகை நிருபர் இவ்வாறு எழுதினார்:

"என் பதின்மூன்றாண்டு அனுபவத்தில் நான் எத்தனையோ கைதிகளைப் பார்த்திருக்கிறேன். தம் கழுத்தைச் சுற்றிச் சுருக்குக் கயிறு மாட்டப்படும் நிலையிலிருக்கும் கைதிகளைக் கூடக் கண்டிருக்கிறேன். எனினும் வக்கீல் விஜயராகவாச்சாரியார் அவர்களைப் போல் சோகமே உருவமாக நின்ற ஒருவரை நான் என்றுமே பார்த்ததில்லை."

இவ்வளவு மனமுறிவு அடைந்து துயரத்தில் ஆழ்ந்து போன அவர் தாமாகவே தமது இயற்கையான திட்பத்தால் அத்துயரை உதறி வெளிப்பட்டு மேலெழுந்த பான்மையை என்னவென்பது! தாம் நிரபராதி என்று நிரூபித்து, விடுதலை பெற வேண்டுமெனப் பிடிவாதமாகச் சங்கல்பம் செய்து கொண்டு உழைத்தார். கடைசியில் அவரது அப்பீலை விசாரித்த ஹைகோர்ட் அவரை விடுதலையும் செய்தது. ஆனால் அவரோ தமது சுகத்தைக் கொண்டு மட்டும் திருப்தி பெறுபவரல்ல. இடர்களின் எல்லையில் நின்றபடியே, அவர் தம்முடன் குற்றம் சாட்டப்பட்ட மற்ற சகாக்களும் விடுதலையாகும் வரை தளராது போராடினார். இந்த மாபெரும் செயலை வெற்றிகரமாகச் சாதித்ததற்காகப் பல பொதுமேடைகளிலிருந்து அவரைக் குறித்து ஆரவாரப் பாராட்டுக்கள் எழுந்தன. அதுவே அவரை ஒரு தேசிய வீரராக்கியது. எல்லா இதயங்களிலும் அவர் தம்மிடம் ஒரு பக்தி வெறியையே தூண்டிவிட்டார். ஆலயம் எடுப்பித்து அதில் அவரது சுவர்ண விக்கிரகத்தைப் பிரதிஷ்டை செய்ய வேண்டுமென்று கூடப் பரவசப்பட்டுப் பேசியவர்கள் உண்டு. குற்றச்சாட்டு, தண்டனை இவை அவரை ஒரு மேகமாகக் கவிந்து கொண்டிருந்தபோது, அரசாங்கம் அவரைச் சேலம் நகரசபை அங்கத்தினர் பதவியிலிருந்து நீக்கிவிட்டது. அவரோ, எந்த விஷயத்தையும் இறுதிவரையில் தொடர்ந்து,

நிறைவுகாணும் தம் விசேஷ குணத்துக்கேற்ப அரசாங்கத்தின்மீதே மான நஷ்ட வழக்குத் தொடுத்தார் : வெற்றியும் கண்டார்.

ஸ்ரீ விஜயராகவாச்சாரியார், தம் கவனத்தை ஈர்த்த விஷயங்களுக்காகக் கடுமையாக உழைத்தார். பலாபலன்களை நுணுகிச் சீர்தூக்கிப் பார்த்த பின்பே அவர் தம் கருத்துக்களை உறுதி செய்து கொள்வார். எந்த ஒரு மனப்போக்கையோ, அபிப்பிராயத்தையோ மேலெழுந்தவாரியாகப் பார்த்து அனுசரிப்பதென்பது அவருக்கு இயலாத காரியம். மனப்பூர்வமான, தீவிரமான ஈடுபாடுகளுக்குப் பின்பே அவர் தமது கருத்துக்களை உருவாக்கிக் கொண்டார் ; அதன்பின் அவற்றுடன் உறுதியாக இணைந்திருந்தார். 'இதர முறைகளை'ப் பின்பற்றுவதற்கு ஆற்றல் பெற்றிராததால்தான் • அநேக வெகுமானங்களை அவர் இழக்க வேண்டியதாயிற்று. நடைமுறை மாறக்கூடாது என்ற தம் எண்ணத்தை மாற்றிக் கொள்வதற்கில்லை என்பதற்காகவே, மத்திய சட்டசபையின் சபாநாயகராகத் தம்மைப் பிரேரிக்க இருந்ததை ஏற்க அவர் மறுதலித்தார். அவரது நண்பரொருவர் பேச்சுவாக்கில், ஸ்ரீ ஆச்சாரியார் போன்ற சுதந்திரச் சிந்தனைத் திறனும், செயல் திறனும் வாய்ந்தவர்கள் அதிகாரச் சார்பற்ற முறையில்தான் பொது வாழ்வுக்குத் தேவைப்படுகிறார்கள் என்று கூறியது அவர் மனத்தில் பதிந்துவிட்டது. அதன் காரணமாக, அவர் தம்மைத் தேடி வந்த கொச்சி ராஜ்ய திவான் பதவியையும் உதறித் தள்ளினார்.

தாம் பழகிய யாவரிடமும் அவர் ஆழ்ந்த மரியாதையையும், மனமுவந்த நட்பையும் தோற்றுவித்தார். இப்போதெல்லாம், சமூக அந்தஸ்து ரம்மியமாக இருக்க வேண்டுமென்பதற்காகப் பிரத்தியேகக் கருத்துக்களைத் தூரத் தள்ளி விடுகிறார்களே! ஸ்ரீ ஆச்சாரியார் முன்னேற்றத்துக்காகவோ, சமூகத்தில் சௌக்கியமான இடம் பெறுவதற்காகவோ தம் கருத்துக்களை ஒருபோதும் விட்டுக் கொடுத்ததில்லை. எந்தச் சூழ்நிலையிலும் தமது கருத்தின் வலிவைச் சற்றும் தளர்த்தாத தனியொரு மனிதராகத் திகழ்ந்தார் அவர். அவருடன் செல்பவர்கள் தமது நிலையை நன்கு உணர்ந்திருந்தனர். மரபுக்கு மாறுபட்ட முற்போக்காளரும்கூட, அவர் பண்டைய வாழ்க்கை நெறிமுறைகளில் பற்றுக் கொண்டிருந்தது பற்றித் தாபப்பட்டது கிடையாது.

திடமான நேர்மைக்காக ஐரோப்பியர்கள் அவரை விரும்பினார்கள். ஜஸ்டிஸ் கட்சிக்காரர்கள், ஆசாரத்தைத் துணிவுடன் கடைப்பிடித்ததற்காக அவரை நேசித்தனர். தீரம் வாய்ந்த சீலத்துக்காக முஸ்லீம்களும் அவரிடம் அன்பு பாராட்டினர். இப்படிப் பலதரப்பட்ட கோஷ்டிகளிலும் அவரிடம் பட்சம் பூண்டவர் ஏராளம்.

தனிப்பட்ட முறையில் ஆங்கிலேயர்கள் நீதி உணர்ச்சி மிக்கவர் என்பதில் ஸ்ரீ ஆச்சாரியாருக்கு மிகவும் நம்பிக்கை. ஹார்டிஞ்ச் பிரபுவுக்கு அவர் செய்துகொண்ட அப்பீலின் மீதுதான் பாய் பரமானந்த் மற்றும் பத்துப் பேருடைய உயிர்கள் காப்பாற்றப்பட்டன.

சில சமயங்களில் கடின சுபாவமுள்ளவராகத் தோன்றினாலும் ஸ்ரீ ஆச்சாரியார் குழைந்து வந்து பழகும் வசீகரத்தோடு, யாரும் சுலபமாக அடையக் கூடியவராக விளங்கினார். தீரரெனினும் அவர் கடுமையானவரல்ல; குழைவுடன் மரியாதை செய்பவரெனினும், அவரது இந்தக் குழைவு பலவீனத்தில் பிறந்ததல்ல. அவர் அந்தரங்க சுத்தமுள்ள தேசபக்தர் ; தீங்கிழைக்கப்பட்டோருக்காக உத்வேகத்துடன் போராடிய வீரர் ; விவேகத்துடனும், உணர்ச்சி வசப்படாமலும் ஆழ்ந்து எண்ணமிடும் சிந்தனையாளர் ; கொள்கைகளைச் சற்றும் இளக்கி விடாதவரெனினும், பிறரைக் கவர்ந்திழுக்கும் நண்பர் ; மெத்தக் கற்ற பண்டிதர்; அன்புக்குகந்த ஆத்மா. முதுபெரும் கிழார் என்ற புகழ்ச் சொல் அவருக்கே மிகவும் பொருத்தம். அவர் போன்ற கம்பீர புருஷர்கள் இன்று மிகவும் துர்லபமாகி வருகின்றனர்.

## வீர நாரியர் மரபிலே

குன்றாத நெஞ்சுரமும், சமயோசிதமும் கொண்ட பெண்கள் இன்றும் இத்தமிழகத்தில் உள்ளனர் என்பது சென்ற வாரம் தெரிய வந்தது.

சென்னை ஏழு கிணற்றுப் பகுதியில் வசிக்கும் ராஜம்மா என்ற இருபத்தேழு வயதுப் பெண்மணி இம்மாதம் 11-ந் தேதி அதிகாலையில் தம் வீட்டில் புகுந்து திருட முயன்ற ஒரு மனிதரைத் தாமே பிடித்துச் சுவரோடு அழுத்தி வைத்தபடி, உரக்கக் கத்தித் தம் கணவர், தந்தை இவர்கள் உதவியுடன் போலீஸில் ஒப்புவிக்க வழிகோலியிருக்கிறார். கொள்ளை ஒன்றைக் குறித்துப் போலீஸார் தேடி வரும் இந்த நபரைப் பிடிப்பதற்கு ஒரு தமிழ்ப் பெண்மணியின் தீரம் உதவியது என்பதில் பெருமிதம் அடைகிறோம்.

இதேபோல் இம்மாதம் 12-ந் தேதி மயிலாப்பூரில் ஒரு கல்லூரி மாணவி பகல் வேளையில், தம் நெக்லேஸைக் கவர்ந்த ஓர் ஆளைத் துரத்திச் சென்று, பின்னர் வேறிருவர் உதவியோடு பிடிக்கச் செய்திருக்கிறார். "சாத்திரங்கள் பல கற்பராம், சவுரியங்கள் பல செய்வராம்" என்ற அமரகவியின் தீர்க்க தரிசன வாக்கை மெய்ப்பித்த அந்த மாணவிக்கும் நமது பாராட்டுக்களைத் தெரிவித்துக் கொள்கிறோம்.



and
after
a
hot
steamy
bath...
cool-
softly
perfumed




Binaca®
TALC

# ஜயந்திகளைக் காத்த ஜயந்தி

ராமபிரான் அவதரித்த ராம நவமியையும் கண்ணன் பிறந்த கோகுலாஷ்டமியையும், விக்னேசுவரர் தோன்றிய விநாயக சதுர்த்தியையும் இன்று நாம் கொண்டாடுகிறோம் என்றால் அதற்குக் காரணம், இவை மூன்றுமல்லாத வேறொரு ஜயந்திதான். இந்து மதம் என்பதே அழிந்து போய், ராமனையும் கிருஷ்ணனையும் நாடு மறந்துவிடக்கூடிய ஒரு நிலை ஏற்பட்ட போது இந்த ஜயந்தி நிகழ்ந்தது. பரமேசுவரனே ஸ்ரீ சங்கராச்சாரியராக அவதரித்து, சநாதன தருமத்தைப் பிற மதங்கள் அடித்துச் செல்லாதபடி தடுத்துக் காத்தருளினார்.

இந்த ஏப்ரல் 20ந் தேதி, ஸ்ரீ சங்கர ஜயந்தித் திருநாளன்று, அம்மகாபுருஷரின் செயற்கரிய சாதனைகள் யாவும் மனத்தில் நிழலாடுகின்றன.



எண்ண எண்ண அதிசயமாகத்தான் இருக்கிறது. ஸ்ரீ சங்கரர் தனியொரு மனிதர்; அரச பலமோ, ஆள் கட்டோ கிடையாது; செல்வப் பெருமையும் இல்லை; வசதிகளும் இன்று போல் இல்லாத காலம்; எதிரிகளோ கணக்கற்றவர். நிராகரணம் செய்வதற்கு எழுபத்திரண்டு மதங்கள் கள்ளிப் புதர்கள் போல் காடு மண்டிக் கிளர்ந்திருந்தன; இத்தனைக்கும் ஈடு கொடுத்து, நாடு முழுதும் நான்கு முறை வலம் வந்து இந்து சமயத்தை அசைக்க முடியாதபடி நிலைநாட்டினார் - அதுவும் தாம் வாழ்ந்த முப்பத்திரண்டே ஆண்டுகளுக்குள் நிலைநாட்டினார் ஸ்ரீ சங்கரர். இதை அற்புதம் என்று வியந்து போற்றுவதைத் தவிர வேறொன்றும் செய்யத் தெரியவில்லை.

இந்த அற்புதத்திலும் அற்புதம் என்னவென்றால், ஸ்ரீ சங்கராச்சாரியர்கள் அற்புதம் ஒன்றுமே செய்யவில்லை என்பது தான். அறிவுக்குப் புறம்பான செயல்களைத்தானே அற்புதம் என்கிறோம்? ஆசாரியரோ அறிவுக்குப் புறம்பான அற்புதம் ஏதும் நிகழ்த்தாமல், தமது அறிவுத் திறனாலேயே அல்லவா இந்த மகோன்னத காரியத்தைச் சாதித்தார்?

காரியத்துக்கு அப்பாற்பட்ட பரம்பொருளானவர் காரியம் சாதித்தார். கருமம் மட்டுமின்றி ஞானம், பக்தி ஒவ்வொன்றுமே உருவெடுத்து வந்தாற் போல், பலதரப்பட்ட மக்களுக்கு ஏற்றபடி பலவித சாதனா மார்க்கங்களை ஏற்படுத்தித் தந்தார். மனித குலத்தின் சகல பிரிவினரிடமும் அளப்பரும் கருணைகொண்ட ஸ்ரீ சங்கரரின் சமரச மனப்பான்மையைப் போல் வேறெங்குமே காண முடியாது.

ஸ்ரீசங்கரர் அறிவுக்கடலான அத்வைத ஸ்தாபகர் மட்டுமல்ல. அறிவுக்குச் செல்வங்களை நல்கும் சிந்தனைச் சுரங்கங்களைத் திறந்துவைத்த அவரே பரம்பொருளின் அழகுத் தத்துவத்திலும் இளைத்து அதை நாமும் பருகச் செய்திருக்கிறார். தமது நூல்களால், இந்த அறிவு, மனம் இரண்டையுமே இசைத்து ஆத்மாவில் லயிக்கச் செய்கிறார். ஸ்ரீ ஆதிசங்கரர் வடமொழியில் அருளிய தோத்திரங்கள், ஞானியருக்குள் தேர்ந்த ஞானியாக விளங்கிய ஸ்ரீ ஆசாரியரைக் கவிகளுக்குள் சிறந்த மகா கவியாகவும் நமக்குத் தரிசனம் செய்து வைக்கின்றன.

இப்பேர்ப்பட்ட ஒரு மகானும் தமிழ் மகனார்தாம் என்று நாம் பெருமை கொள்ளலாம். ஸ்ரீ ஆசாரியர்கள் தமிழில் சில உலாக்கள்கூட இயற்றி யிருப்பதாகச் சொல்லுகிறார்கள். ஆனால் அவை நமக்குக் கிடைக்கவில்லை. அதனாலென்ன? அவர் வடமொழியாம் வாடாமொழியில் செய்த சிவ பாதாதி கேசாந்த ஸ்தோத்திரத்திலிருந்தே ஒரு பாடலை நரை பழுத்த துறைத் தீந்தமிழின் ஒழுகு நறுஞ் சுவையில் இதோ அளிக்கிறோம்.

ஒருமானைக் கரங்கொண்ட
பெருமானுக் கருகிருக்கும்
உமைமானுக் கடியார்கள்
கணக்கற்றோர்
பெருஞான மவர்க்கருளக்
கருணைவிழி பிறழ்ந்துலவும்
போதருகில் அருள்பொலியும்
விழிஞானம்
தரமாக மனங்கொண்டு
கற்றுணர மேற்றுணித்
தழலாடும் கழலாடி
கையரங்கில்
சிறுமானும் நடமாடிச்
சிவஞானி மனமாரக்
களிக்கின்ற தென்சொல்வ
தென் சொல்வதே!

நம்மாழ்வார் பாடிய

# பக்தி நெறி

ராஜாஜி

## 67

இனி திருவாய்மொழியின் கடைசிப் பத்து. ஆழ்வாருடைய சரீர சம்பந்தத்தை அறுத்து எம்பெருமான் அவரை ஏற்றுக் கொண்டதைச் சொல்லும் இந்தப் பத்துப் பாசுரங்கள் பிரபந்தத்துக்குப் பத்து சிகரங்களாக விளங்குகின்றன. ஆழ்வாருடைய விடாய் அதாவது எம்பெருமானைச் சேர விரும்பும் அவருடைய தாகம், பெரிது அதைவிடப் பெரும் விடாய் ஆழ்வாரைத் தன்னுடன் சேர்த்துக் கொள்ள வேண்டும் என்று எம்பெருமான் பட்ட விடாய் என்கிறார் ஈடு வியாக்யாதா.

பக்தர்களின் ஆசையைக் காட்டிலும் பகவானுடைய ஆசை, பக்தர்களை அடைய வேண்டும் என்கிற ஆசை, மிகப் பெரிது. பகவான் நம்மைப் பிடிக்கப் பார்க்கிறான். உலக வாழ்க்கையால் தூண்டப்பட்டு நாம் அவனுக்கு அகப்படாமல் ஓடிப் போகிறோம். அவன் நம்மைத் துரத்தித் துரத்தி வருகிறான். நாம் சிக்கினால் போதும். அவன் பிடித்துக் கொள்வான். பகவானுடைய அவா ராமசந்திரன் சீதாதேவியைத் தேடிக் காடும் மலையும் கடலும் கடந்து சென்ற அவாவைப் போன்றது. பக்தர்களுடைய அவா அந்த சீதாதேவியின் ஆசையைப் போன்றது.

**முனியே! நான்முகனே! முக்கண்-**
**அப்பா! என் பொல்லாக்**
**கனிவாய்த் தாமரைக் கண்**
**கருமாணிக்கமே! என் கள்வா!**
**தனியேன் ஆர்உயிரே! என்தலை**
**மிசையாய் வந்திட்டு,**
**இனிநான் போகல் ஒட்டேன்—**
**ஒன்றும் மாயம்செய்யேல் என்னையே.**

ஹரியும், பிரமனும் சிவனும் மூவரையும் கூவி இறைஞ்சுகிறார். நீயே மூவரும் என்று நாராயணனைக் கூவுகிறார். பதினோராவது பாடலில் சொல்லப்படுகிறபடி, "அவா அறச் சூழ் அரியை, அயனை, அரனை அலற்றி, அவா அற்று, வீடு பெற்ற குருகூர்ச் சடகோபன் சொன்ன "மையாகும் இந்தப் பத்துப் பாசுரங்கள்.

பொல்லா மாணிக்கம் - தொளைக்கப் படாத மாணிக்கம்; என் கள்வா - என் உயிரைத் திருடும் கள்வனே!

எனக்குத் தெரியாது என் சம்மதத்தைப் பெறாமலே என்னைத் திருடிய கள்வா!

உன் மாயங்கள் போதும் இனி என்னை அழைத்துக் கொள் என்று இறைஞ்சுகிறார்.

தனியேன் ஆருயிரே - இவ்வுலக விஷயங்களில் உலக மக்களோடு பொருந்தாமையைக் கருதி 'தனியேன்' என்கிறார். "பிராட்டி அசோக வனத்தில் அரக்கிகள் நடுவே இருந்தாற் போலே காணும் இவருக்கு இவ்வுலக மக்கள் நடுவே இருக்கிற இருப்பு" என்பது ஈடு வியாக்கியானம்.

போகல் ஒட்டேன் என்று சீர்ப்பந்திக்கும் உரிமையோடு ஆழ்வார் சொன்னதற்கு ராமாயணத்தில் பரதன் ராமசந்திரனுக்குச் சொன்னதை ஈடு வியாக்கியாதா அழகாக எடுத்துக் காட்டுகிறார்:

"உணவு இல்லாதவனாய், ஒளியிழந்த முகத்தவனாய், செல்வம் இல்லாத ஒரு பிராமணனைப் போல், எவ்வளவு காலம் நீ என்னிடம் இரக்கம் கொள்ளாமல் இருப்பாயோ, அவ்வளவு காலம் பர்ணகுடியின் முன் நான் படுக்கிறேன்" என்றான் பரதன்

அன்பும் விரக்தியும் சேர்ந்து இந்த உரிமையைப் பரதனுக்கு அண்ணன் ராமசந்திரன் விஷயத்தில் தந்தது அதைப்போல் ஆழ்வாருக்கும் அவருடைய அன்பும் விரக்தியும் எம்பெருமான் விஷயத்தில் தந்தது.

* * *

அடுத்த பாசுரத்தில் உரிமையை இன்னும் பலமாகக் கோருகிறார். உன்

மேல் ஆணை, பிராட்டி மேல் ஆணை, என்னை அழைத்துக்கொள், நான் இனிப் பொறுக்க முடியாது என்கிருர்.

மாயம் செய்யேல் என்னை; உன்
திருமார்வத்து மாலைநங்கை

வாசம்செய் பூங்குழலாள்
திருஆணை; நின்ஆணை கண்டாய்;

நேசம்செய்து உன்னேடு என்னை
உயிர்வேறுஇன்றி ஒன்ருகவே

கூசம்செய்யாது கொண்டாய்;
[என்னைக்
கூவிக்கொள்ளாய் வந்து, அந்தோ!

மார்வத்து மாலை நங்கை - உன் மார்பில் அதற்கு ஒரு மாலை போல் அலங்கரிக்கும் ஸ்ரீதேவி.

உன்னேடு என்னை உயிர் வேறு இன்றி ஒன்ருகவே கூசம் செய்யாது கொண்டாய் - கூச்சம் இல்லாமல் அதாவது நான் எவ்வளவு சிறியவன் என்பதைப் பொருட்படுத்தாமல் என்னை உன்னேடு அத்வீதியமாக என் உயிர் தனிப்பட்டு நிற்காமல் அந்த அளவில் என்மேல் அன்பு கொண்டாய்.

சாஸ்திர அனுபவம் போதாது, குண னுபவமும் போதாது. நியானுனுபவம் போதாது வந்து கிட்டி என்னை அழைத்துக்கொண்டு போய்விடு என்கிருர்.

* * *

கூவிக்கொள்ளாய்வந்து, அந்தோ!—
என் பொல்லாக்கரு மாணிக்கமே!

ஆவிக்குஓர் பற்றுக் கொம்புநின்
அலால், அறிகின்றிலேன்யான்;

மேவித்தொழும் பிரமன், சிவன்,
இந்திரன் ஆதிக்கு எல்லாம்

நாவிக் கமலமுதல்—கிழங்கே!
உம்பர் அந்த அதுவே!

பொல்லா - தொளையாத (மாணிக்கம்)

தவிர 'பொல்லா' என்கிற அடை அன்பு மிகுந்தபோது திருஷ்டி தோஷம் வராமைக்காகச் சொன்னது. வட மொழியிலும் "பத்ரம் தே" என்று ஆங்காங்கு இம்மாதிரி துஷ்ட தேவதைகளின் செயலை விலக்கச் சொல்வதை வால்மீகி ராமாயணத்தில் காணலாம்.

பற்றுக் கொம்பு - கொடி வளர்ந்து ஏறுவதற்கு வைக்கப்படும் கொம்பு.

கிழங்கு - மூல காரணம்.

உம்பர் — தேவர்கள், நித்ய ஸூரிகள்.

"அந்த அதுவே" என்பதில் அது என்பது பரம்பொருள். 'அந்த' என்பது சிறந்ததும் நியாணிக்கத் தக்கதுமான பொருள் என்பதைக் குறிக்கிறது.

'அது' என்று தமிழில் ஆழ்வார் சொன்னது சுருதியில் 'ஸ' என்றும் 'தத்' என்றும் வழங்கும் வடமொழி யில் இந்தச் சொற்களின் பொருள் பரம்பொருள்.

'தத்ஸத்'
'ஸஹநாவவது'
'ஸஹௌபுனக்து'

என்கிற சுருதி மந்திரங்களில் வரும் 'ஸ' 'தத்' இந்தச் சொற்கள் குறிக்கும் பரம்பொருளை ஆழ்வார் தம் பாசுரத் தில் 'அது' என்று சொல்லுகிருர்.

உபநிஷத்துக்களில் சொல்லப்பட்ட பிரம்மம் அல்லது பரம்பொருளும் நாராயணனே என்கிருர்

(அடுத்த இதழில் நிறைவுறும்)

ஏப்ரல் 21உ முதல்

சென்னை
காஸினோ
பிராட்வே
உமா • ராம் (கோடம்பாக்கம்)
மற்றும்
தென்னாடெங்கும்

விஜயா
பிலிம்ஸ்

# புனர்ஜென்மம்

சங்கீதம் - T. சலபதி ராவ் • ஒளிப்பதிவு - வின்சென்ட்
ஸ்டுடியோ - விஜயா - வாஹினி

திரைக்கதை
வசனம்
ஸ்ரீதர் • டைரக்‌ஷன் R.S. மணி

தயாரிப்பு
N.S. திரவியம்

ELEGANT

# மணிபல்லவம்

## 28 வேலும் விழியும்

ஓவியனின் அந்த வார்த்தைகளை மறுபடி நினைத்தாலும் மனம் கொதித்தது இளங்குமரனுக்கு. 'எவ்வளவு துணிவு இருந்தால் அவன் என்னிடம் அப்படிக் கூறியிருப்பான்.' "ஒரு காலத்தில், இன்று அலட்சியம் செய்யும் இதே பெண்ணின் சிரிப்புக்கு நீங்கள் தோற்று நின்றால்கூட நான் ஆச்சரியப்பட மாட்டேன்."--

'யாரைப் பார்த்து யார் சொல்லுகிற வார்த்தைகள் இவை? மணிமார்பனுடைய வயதென்ன? நிலை என்ன? என்னுடைய அநுதாபத்தைப் பெற்றவன் எனக்கே அறிவுரை கூற முன் வருவதா? சுரமஞ்சரி என்னும் பெண் காவிரிப்பூம் பட்டினத்திலேயே பேரழகியாக இருக்கலாம். வேறெவருக்கும் இல்லாத பெருஞ் செல்வத்துக்கு உரிமை பூண்டவரின் மகளாக இருக்கலாம். ஆனால் அவளுடைய அழகுக்கு மயங்கி நிறையிழக்கும் ஆண் பிள்ளையாக நான் இருக்க வேண்டுமென்ற அவசியமில்லையே! அழகையும் அதனால் ஏற்படும் கவர்ச்சி மயக்கத்தையும் அநுபவித்துப் பார்ப்பதில் ஒரு சுகம் இருக்கிறதென்று வைத்துக் கொண்டாலும் அந்தச் சுகத்தைப் பெண்ணின் சிரிப்பிலும், கண்களிலும்தான் தேட வேண்டும் என்பதில்லையே! பூக்களின் மலர்ச்சியிலும், கடலின் அலைகளிலும், மேகந் தவழும் மழைக்காலத்து வானத்தில் முழுமதி மறைந்தும், மறையாமலும், உலா வருவதிலும் அழகைத் தேடி அநுபவித்துக் கொள்ளத் தெரியும் எனக்கு. உலகத்தைப் படைத்தவன் வஞ்சகமில்லாமல் எல்லாப் பொருள்களிலும் தான் அழகை வைத்திருக்கிறான். மனிதர்கள் தாம் அந்த அழகு மிகச் சில பொருள்களில் மட்டும் இருப்பதாக நினைத்துத் தவித்துக் கொண்டிருக்கிறார்கள். நானும் அப்படித் தவிப்பவன் என்று இந்த ஓவியன் நினைத்துக் கொண்டான் போலிருக்கிறது. 'அப்பாவி ஓவியனே! பெண்ணின் சிரிப்பில் மட்டும்தான் உலகத்து அழகுகளெல்லாம் ஒளிந்து கொண்டிருப்பதாக நீ வேண்டுமானால் நினைத்துக் கொண்டிரு. ஆனால் இளங்குமரனையும் சேர்த்து அவ்விதமாக நினைக்காதே'- நான் இவ்வளவு சிறிய மயக்கங்களுக்காக என் மனத்தை இழந்துவிடச் சித்தமாயில்லை! வாழ்க்கையில் பெரிய இலட்சியங்கள் எனக்கு இருக்கின்றன. இப்போது நான் தவித்துக் கொண்டிருப்பது சுரமஞ்சரியின் அழகு முகத்துக்காகவும் சிரிப்புக்காகவும் அல்ல; என் தாயின்



அன்பு முகத்தையும், சிரிப்பையும் காண்பதற்காகத்தான் நான் அல்லும், பகலும் ஏங்கித் தவித்துக் கொண்டிருக்கிறேன். மற்றவர்களைத் தெரிந்து கொண்டு அவர்கள் சிரிப்புக்கு மயங்குவதற்கு முன்பே 'நான் யார்' என்று எனக்குத் தெரிய வேண்டும். இவ்வளவு வலிமையான உடலையும், மனத்தையும் வைத்துக் கொண்டு, 'நான் யார்? எனக்கு அன்னையும், தந்தையுமாக இருந்து என்னை உலகுக்கு அளித்தவர்கள் யார்?' என்பவற்றை இன்னும் தெரிந்து கொள்ளாமல் இருக்கிறேனே. என்னிடம் வந்து பெண்ணின் சிரிப்புக்குத் தோற்பதைப் பற்றிப் பேசுகிறாயே, அப்பனே?

இளங்குமரன் இவ்வாறெல்லாம் மீண்டும் நினைத்துப் பார்த்த போதுதான், ஓவியனை அறைந்து அவமானம் செய்து அனுப்பியதில் தவறு ஒன்றுமில்லை என்றே தோன்றியது. 'விவரம் தெரிந்த பிள்ளையாயிருந்தால் இப்படி அசட்டுத்தனமாகப் பேசி என் ஆத்திரத்தை வளர்த்து அறை வாங்கிக் கொண்டு போயிருக்க வேண்டாம்' என்று ஓவியனிடம் சிறிது இரக்கமும் கொண்டான் அவன்.

இன்னும் அவனுடைய வலது கையில் தாழம்பூ மணம் கமழ்ந்து கொண்டிருந்தது. அந்தக் கையால்தான் சுரமஞ்சரியின் மடலை அவன் தீண்டினான்.படித்த பின் கசக்கி எறியவும் முயன்றான். நீலநாகர் படைக்கலச் சாலையின் மரங்களடர்ந்த முற்றத்தில் கடற்காற்றின் சுகத்தை நுகர்ந்து கொண்டே இளங்குமரன் கட்டிலின் மேல் சாய்ந்து உறங்க முயன்று கொண்டிருந்த சமயத்தில் புரண்டு படுக்கும் போதெல்லாம் கையிலிருந்து இந்தத் தாழம்பூ மணம் பரவி அவன் உறக்கத்தைத் தடைசெய்தது. வெறுப்போடு எழுந்து சென்று கைகளை நன்றாகக் கழுவிவிட்டு வந்து படுத்துக் கொண்டான் அவன். அவளைப் பற்றிய நினைவு நெஞ்சில் மட்டுமல்லாமல் கைகளிலும் மணக்கக் கூடாதென்று வெறுப்போடு அவற்றைத் தன்னிலிருந்து பிரித்தான் அவன்.

ஆனால் மறுநாள் காலையில் முதல் நாளிரவு மனத்திலிருந்தும், கையிலிருந்தும் சேர்த்துக் கழுவிய இதே நினைவுகளை மீண்டும் இளங்குமரனை நினைக்கச் செய்து விட்டார் நீலநாக மறவர். வானம் கண்விழிக்கும் வைகறைப் போதில் இளங்குமரனின் பவழச் செஞ்சுடர் மேனியில் இளம்பொன் வெய்யில் பட்டு அவன் கண்கள் மலர்ந்தபோது அந்த விழிப்பையே எதிர்பார்த்துக் காத்துக் கொண்டு நிற்பவர்போல் அவனுடைய கட்டிலருகில் நீலநாக மறவர் நின்று கொண்டிருந்தார். கண்களைத் திறந்ததும் அவர்முகத்தில் தான் விழித்தான் இளங்குமரன். உடனே வாரிச் சுருட்டிக் கொண்டு துள்ளியெழுந்து அடக்கமாக நின்றான். தான் விழித்துக்கொள்வதற்கு முன்பே அவர் தனக்காகத் தன் கட்டிலருகே வந்து நின்று கொண்டிருக்க வேண்டுமென்று அவனுக்குத் தோன்றியது. நீராடி ஆலமுற்றத்துச் சிவன் கோயிலில் வழிபாட்டையும் முடித்துக் கொண்டு மாணவர்களுக்குப் படைக்கலப் பயிற்சி அளிப்பதற்கேற்ற கோலத்தில் இருந்தார் நீலநாகமறவர். சிரிப்பும் இன்றிச் சீற்றமும் இன்றி வெறுப்பும் இன்றி வேட்கையுமின்றி இளங்குமரன் முகத்தையே இமையால் உற்றுப் பார்த்துக் கொண்டு நின்றார் அவர். அவருடைய கைகள் வேலைப்பாடு அமைந்ததும் புதியதாகப் படைக்கலச் சாலையிலேயே வடிக்கப்பட்டதுமாகிய சிறிய வேல் ஒன்றை அலட்சியமாகச் சுழற்றிக் கொண்டிருந்தன.

அவர் தன்னிடம் ஏதோ கேட்கப் போகிறாரென்று எதிர்பார்த்துக் கொண்டு நின்றான் இளங்குமரன். அவருக்கு முன் நிற்கும்போது இருக்க வேண்டிய பணிவும், குழைவும் அவன் நின்ற தோற்றத்திலேயே தெரிந்தன.

"தம்பி! இந்த வேலின் நுனி இளம் பெண்ணொருத்தியின் அழகிய கண் போன்று இருக்கிறதல்லவா?" என்று தொடர்பில்லாமல் பேச்சைத் தொடங்கினார் அவர். இளங்குமரன் சிறிது நேரம் அவருக்கு என்ன மறுமொழி கூறுவதென்று தோன்றாமல் தயங்கி நின்றான். அவர் அவனை விடவில்லை. மீண்டும் தூண்டிக் கேட்கலானார் :

"உன்னைத்தான் கேட்கிறேன் தம்பி! வார்த்து வடிந்து கூர்மையாய்த் தோன்றும் இந்த வேலின் நுனி இளநங்கை ஒருத்தியின் நீள்விழியை நினைவூட்டுகிறது இல்லையா?"

"கவிகள் அப்படிச் சொல்லித் தங்களையும் உலகத்தையும் சேர்த்து ஒன்றாக ஏமாற்றிக் கொண்டு வந்திருக்கிறார்கள். வேல் விழி, மீன் விழி, மான் விழி என்று உவமை சொல்லி வேலையும் மீனையும், மானையும் பார்க்க நேர்ந்த போதும்கூட, பெண்களின் கண்களைத் தவிரத் தங்களுக்கு வேறெதுவும் நினைவு வரவில்லை என்கிற சொந்தப் பலவீனத்தை ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். பாடியும் நிரூபித்திருக்கிறார்கள்."

இளங்குமரன் இவ்வாறு கூறியதும் சலனமற்றிருந்த நீலநாக மறவரின் முகத்தில் சிரிப்பின் சாயல் தென்பட



லாயிற்று. அந்தச் சிரிப்பை ஒளித்து மறைக்க அவர் முயன்றும் அதன் சாயல் முகத்தில் வெளிப்பட்டுவிட்டது. மேலும் அவர் அவனைக் கேட்கலானார்:

"உவமை கூறுவதைக் கவிகளின் பலவீனமென்று நீ சொல்கிறாய், தம்பி! ஆனால் கவிகள் அதையே தங்களுடைய பலம் என்கிறார்கள். கவிதையின் அணிகளில் ஒன்றாகவும் உவமையைக் கணக்கிடுகிறார்களே. உவமை இல்லாவிட்டால் வருணனை அமையுமா?"

"வேறொரு விதமாகக் கணக்கிட்டால் அதிகமான பலமே பலவீனமாக முடியும். அளவுக்கு மீறின பலமே ஒரு பலவீனம்தான்! வேலின் நுனியில் வீரம் பிறக்கிறது. பெண்ணின் விழிக்கடையில் வீரமும் ஆண்மையும் அழிகின்றன. வீரத்தையும் ஆண்மையையும், அழிக்கின்ற இடத்தை வீரமும், ஆண்மையும் பிறக்கின்ற இடத்துக்கு உவமை சொல்வது எப்படி ஐயா பொருந்தும்?"

"ஆண்மை என்ற வார்த்தைக்கு நீ என்ன பொருள் புரிந்து கொண்டிருக்கிறாய், தம்பீ?"

"ஆளும் தன்மை என்று பொருள் புரிந்து கொண்டிருக்கிறேன்."

"எதை ஆளும் தன்மையோ? உடம்பையா, மனத்தையா, புலன்களையா? அல்லது வேலையும், வாளையும், வில்லையும் எடுத்து ஆளும் தன்மையா? உன்னிடமிருந்து நான் இதைத் தெளிவாகத் தெரிந்து கொள்ள ஆசைப்படுகிறேன் தம்பீ!" என்றார் நீலநாகமறவர்.

"எல்லாவற்றையும் ஆளும் தன்மையைத் தான் நான் சொல்லுகிறேன்."

"அதாவது வீரம் அல்லது ஆண்மை என்பது வில்லையும், வேலையும் எடுத்து ஆள்வது மட்டுமன்று, எல்லாவற்றையும் தன் வசப்படுத்தி ஆளுவது என்பது தானே உன் கருத்து?"

"ஆமாம் ஐயா!"

"அப்படியானால் இதைக் கேள், இளங்குமரா! இப்போது இந்தப் படைக்கலச்சாலையில் எனக்கு மிகவும் வேண்டியவனும் கண்ணைக் கவரும் அழகனுமான இளைஞன் ஒருவன் இருக்கிறான். அவனுக்கு உடல் வலிமையும் வேண்டிய அளவு இருக்கிறது. வில்லையும், வேலையும், ஆள்வதற்கு மட்டும்தான் அவனுக்குத் தெரிகிறது. மனத்தையும், புலன்களையும் ஆள அவனுக்குத் தெரியவில்லை போலிருக்கிறது. கூரிய வேலையும், வாளையும் பிடித்து வளர்த்துக் கொள்ள வேண்டிய ஆண்மையைப் பெண்ணின் கண்களுக்குத் தோற்றுப் போகும்படி செய்து கொண்டிருக்கிறான் அவன். இன்னும் கேள். அழகிய இளம் பெண்கள் அவனைத் தேடிக் கொண்டு அகாலமான இரவு நேரங்களில் இங்கே இரதத்தில் வருகிறார்கள். அந்தப் பெண்களை விசாரித்தால் அவன் தங்களைத் தேடிக்கொண்டு தங்கள் மாளிகைக்கு அடிக்கடி வருவது உண்டென்றும் சொல்லுகிறார்கள். அந்த இளைஞனை வீரமும், ஆண்மையும் உள்ளவன் என்று நான் நினைப்பதா? இல்லாதவன் என்று நினைப்பதா?"

"இதில் சந்தேகமென்ன? வீரமும், ஆண்மையும் இருந்தால் அவன் ஏன் இப்படிப் பெண்களின் சிரிப்புக்கும், பார்வைக்கும் தோற்றுப்போய் அலைகிறான்?"

இதைக் கேட்டு நீலநாக மறவர் பெரிதாகச் சிரித்தார். அவர் ஏன் அப்படிச் சிரிக்கிறார் என்று

இளங்குமரன் திகைத்து நின்றபோது தம் கைகளிலிருந்த வேலைக் கீழே எறிந்து விட்டு வலது கையை உயர்த்தி ஆள் காட்டி விரலை அவன் முகத்துக்கு நேரே நீட்டியபடி கூறலானார் நீலநாகமறவர் :-

"தம்பீ! அப்படிப் பெண்களின் சிரிப்புக்கும், பார்வைக்கும் தோற்றுப்போய் அலைபவன் வேறெங்கும் இல்லை. இதோ என் எதிரே இளங்குமரன் என்ற பெயரோடு நின்று கொண்டிருக்கிறான் அவன்....."

தீயை மிதித்தாற் போலிருந்தது இளங்குமரனுக்கு. எங்கோ சுற்றி வளைத்துப் பேசித் தன் பேரில் கொண்டு வந்து முடித்ததைக் கண்டு திடுக்கிட்டான் அவன். நேற்றிரவு இதேபோல் ஒரு கேள்வியைக் கேட்டதற்காகத் தானே அவன் ஓவியனை அறைந்து அனுப்பியிருந்தான்? இன்றும் விடிந்ததும் விடியாததுமாக இப்படி ஒரு பழியா?

"என்ன தம்பீ; திருடனுக்குத் தேள் கொட்டினாற்போல் இப்படி விழிக்கிறாய்? உன்னுடைய ஆண்மையை அழித்துத் தன்னுடைய பெண்மைக்கு வெற்றிப் பெருமிதம் சேர்த்துக் கொண்ட அந்தப் பட்டினப் பாக்கத்து நங்கையின் வேல் விழிகளை நேற்றிரவு நானே பார்த்தேன்."

"நீங்கள் சொல்வது எனக்கு ஒன்றும் விளங்கவில்லை, ஐயா! எதையோ தப்பாகப் புரிந்துகொண்டு என்மேல் பழி சுமத்துகிறீர்களே......?" என்று தொடங்கிய இளங்



## வாடாத இளமையழகு

## வாராதோ

## விரலசைந்தால்!

அன்றாடம் ஹிமாலயா புக்கே ஸ்நோ பூசிக்கொள்ளுங்கள்: உங்கள் சருமம் மென்மையுடனும், புது மலர்ச்சியோடும் மாருத இளமையோடும் சோபிக்கும்!
முகப்பருக்களும், கருக்கங்களும், வாட்சியும் ஏற்படாமல் பாதுகாக்கிறது ஹிமாலயா புக்கே ஸ்நோ. மாருத இளமைப் பொலிவுக்கு உபயோகியுங்கள் ஹிமாலயா புக்கே ஸ்நோ.

*எடுப்பான புது ஜாடி*
*மக்கான புது அட்டைப்பெட்டி*






# ஹிமாலயா புக்கே ஸ்நோ

HBS.21-50 TM

குமரனை மேலே பேச விடாமல் தடுத்து அவர்பேசத் தொடங்கினார் :-

"இன்னும் புரியும் படியாக விளக்கிச் சொல்ல வேண்டுமானால், இதோ கேள் தம்பீ" --- என்று தொடங்கி முதல் நாள் பின்னிரவில் தேரேறி அவனைத் தேடிக் கொண்டு வந்த பெண்களைப் பற்றிக் கூறினார் நீலநாகமறவர். அவர் கூறியதிலிருந்து வந்தவர்கள் சுரமஞ்சரியும், அவள் தோழி வசந்தமாலையுமாகத்தான் இருக்க வேண்டுமென்பது இளங்குமரனுக்குப் புரிந்தது. மடலோடு அறை வாங்கிக் கொண்டு திரும்பிப் போன ஓவியன் சுரமஞ்சரியையே நேரில் போகச் சொல்லி இங்கே அனுப்பியிருக்கலாம் என்று நினைத்தான் அவன். சுரமஞ்சரியின் மேல் அவனுக்கு ஏற்பட்டிருந்த வெறுப்பு இப்போது ஆத்திரமாக மாறியது. 'எனக்கும் அந்தப் பெண்ணுக்கும் நீங்கள் நினைக்கிறாற்போல் ஒரு நெருக்கமும் இல்லை. அவள் எதற்காக என்னைத் தேடி வந்தாள் என்பதே எனக்குத் தெரியாது' என்று எவ்வளவோ சொல்லி, அவருடைய தவறான கருத்தை மாற்ற முயன்றான் இளங்குமரன். நீலநாகமறவர் அவ்வளவு எளிதாக அதை நம்பவில்லை.

"எனக்கு விளக்கம் தேவையில்லை, தம்பீ! உன்னுடைய வாழ்க்கையில் நீ பெரிய காரியங்களைச் சாதிக்க வேண்டும் என்று நான் ஆசைப் படுகிறேன். இனிமேலாவது உன்னைத் திருத்திக் கொள். என்னைப் போல் ஆயுதங்களை எடுத்தாள்வதுடன் புலன்களையும் ஆளத் தெரிந்து கொண்ட வீரனாக நீ உருவாக வேண்டுமென்றுநான் எதிர் பார்க்கிறேன்.



உன்னை வளர்த்து ஆளாக்கிய அருட்செல்வ முனிவரின் நோக்கமும் அதுதான். அதிலிருந்து நீ வழி விலகக் கூடாது" என்று கோபமாகச் சொல்லி விட்டு மாணவர்களுக்குப் படைக்கலப் பயிற்சி கற்பிப்பதற்காகச் சென்று விட்டார் நீலநாகமறவர்.

ஏதோ நினைப்புடனே அவர் கீழே எறிந்து விட்டுப் போன வேலைக் குனிந்து கையிலெடுத்தான் இளங்குமரன். அந்த வேல் சுரமஞ்சரியின் மயக்கும் விழியாக மாறி அவனை நோக்கி ஏளனமாகச் சிரிப்பது போலிருந்தது.

'முடியாது! முடியவே முடியாது. இந்த மயக்கும் விழிகளுக்கும் இதற்குரியவளின் சிரிப்புக்கும் ஒரு போதும் நான் தோற்க மாட்டேன்' என்று தனக்குத் தானே பித்தன் போல் கூறிக் கொண்டே அந்த வேலை வெறுப்புடன் தூரத்தில் வீசி எறிந்தான் இளங்குமரன்.

# 29- நிழல் மரம் சாய்ந்தது!

பொழுது விடிந்ததும் நடந்த இந்த நிகழ்ச்சியால் இளங்குமரனின் உள்ளம் சொல்ல முடியாத வேதனையை அடைந்திருந்தது. உடனே பட்டினப்பாக்கத்துக்கு ஓடிச் சென்று சுரமஞ்சரி, அவளுடைய தோழி, மணிமார்பன், மூவரையும் படைக்கலச் சாலைக்கு அழைத்துக் கொண்டு வந்து நீலநாக மறவருக்கு உண்மையை விளக்கி விட்டால் நல்லதென்று எண்ணினான் இளங்குமரன். அவர் மனத்தில் பதிந்து ஊன்றிப் போன சந்தேகத்தைக் களைந்தெறிந்து விட விரும்பினான் அவன். ஆனால் அதற்கும் தடை யிருந்தது. படைக்கலச் சாலையின் எல்லையிலிருந்து வெளியேறக் கூடாது என்று அவர் அவனுக்குக் கட்டளையிட்டிருந்தார். இரண்டு காரியங்களுக்காக அப்போது அவன் அங்கிருந்து வெளியே போய் வரவேண்டிய அவசியம் இருந்தது. சுரமஞ்சரி முதலியவர்களை அழைத்து வந்து நீலநாகமறவரின் சந்தேகத்தைப் போக்குவதற்காக அவன் வெளியேறிச் செல்வதன்றி, வீரசோழிய வளநாடுடையாரிடம் ஒப்படைத்து விட்டு வந்த அருட்செல்வ முனிவர் எப்படியிருக்கிறாரென்று பார்த்து வருவதற்காகவும் போக வேண்டியிருந்தது. தன் மேல் கோபத்தோடிருக்கும் நீலநாக மறவரிடம் போய் வெளியேறிச் சென்று வருவதற்குத் துணிந்து அநு

பம்பாய் ராஜ்பவனில் மார்ச் 25ந் தேதி நடைபெற்ற தேசிய இந்திய சங்கத்தின் 'வருஷாந்திர விழாவன்று வைத்தியக் கல்லூரி மாணவி குமாரி லலிதாவின் திறமையைப் பாராட்டி மிஸ் வயலெட் ஒளார்க் பரிசு வழங்கப்பட்டது. மகாராஷ்டிர கவர்னர் ஸ்ரீ பிரகாசா இப்பரிசைக் கொடுத்தார். இவர் பம்பாய் கடல்தள உதவிக் காரியதரிசி எஸ். ராமச்சந்திரனின் புதல்வி.



மதி கேட்பது எப்படி என்று அவன் தயங்கினான்.

இவ்வாறு அவன் தயங்கிக் கொண்டிருந்தபோது அந்தப் படைக்கலச் சாலையில் இருந்தாற் போலிருந்து வழக்கமாகக் கேட்கும் ஒலிகளும் வீரர்களின் ஆரவாரமும் ஓய்ந்து அமைதி நிலவியது. திடீரென்று என்ன ஆகிவிட்டதென்று புரியாமல் இளங்குமரன் மருண்டான். சென்ற விநாடிவரையில் வீரர்களுக்குப் பயிற்சியளிக்கும் நீலநாக மறவரின் கம்பீரக் கட்டளைக் குரல் ஒலித்துக் கொண்டிருந்தது. இந்த விநாடியில் அதுவும் ஒலிக்கவில்லை. வாளோடு வாள் மோதும் ஒலி, போர்க் கருவிகள் செய்யும் உலைக் களத்திலும், பட்டறையிலும், இரும்பு அடிபடும் ஓசை, வீரர்களின் பேச்சுக் குரல், எல்லாம் ஓய்ந்து மயான அமைதி நிலவியது. காற்றுக்கூடப் பலமாக வீசப் பயப்படுவது போன்ற அந்த அமைதி ஏன் நேர்ந்ததென்று காண்பதற்காக முற்றத்திலிருந்து படைக்கலச் சாலையின் உட்பகுதிக்கு விரைந்தான் இளங்குமரன்.

அங்கே பயிற்சி பெற்றுக் கொண்டிருந்த வீரர்கள் அமைதியாய் மூலைக்கு மூலை ஒதுங்கித் தலை குனிந்தவாறு நின்று கொண்டிருந்தார்கள். நடுவில் நீலநாக மறவரும் வீரசோழிய வளநாடுடையாரும் கண்கலங்கி நின்றார்கள். இருவருடைய தோற்றத்திலும் துக்கத்தினால் தாக்குண்ட சோர்வு தெரிந்தது.

இளங்குமரனைப் பார்த்ததும் வீரசோழியவளநாடுடையார் 'கோ'வென்று கதறியழுதபடி ஓடிவந்து அவனைத் தழுவிக் கொண்டார். நீலநாக மறவர் கண்ணீரைத் துடைத்துக் கொண்டு நின்ற இடத்திலிருந்து அசையாமல் அப்படியே நின்றார்.

"உனக்கு இதுவரை நிழல்தந்துகொண்டிருந்த நெடுமரம் சாய்ந்து விட்டது, தம்பீ! தவச்சாலை தீப்பற்றி எரிந்து முனிவர் மாண்டுபோய்விட்டார்" என்று துயரம் பொங்கும் குரலில் கூறினார் வளநாடுடையார். இளங்குமரனுக்கு அந்தச் செய்தியில் நம்பிக்கை ஏற்படவில்லை. "முனிவர் தவச்சாலைக்கு எப்படிப் போனார்? அவரை உங்கள் வீட்டில் அல்லவா விட்டு வந்தேன்......?"

கண்ணீர் பொங்கத் துயரம் அடைக்கும் குரலில் நடந்தவற்றை, அவனுக்குக் கூறினார் வளநாடுடையார். இளங்குமரனுக்குக் கண்கள் இருண்டன. உலகமே சுழல்வது போலிருந்தது. 'அப்படியும் நடந்திருக்குமா? நடந்திருக்க முடியுமா?' என்று நினைக்க நினைக்கத் துக்கம் பெருகியது அவனுக்கு.

பெற்றோரும் உற்றோரும் இல்லாத காலத்தில் தன்னை வளர்த்து ஆளாக்கித் தாயாகவும் தந்தையாகவும் இருந்து காத்து வந்த உத்தமர் தீயில் மாண்டு போனார் என்று அறிந்தபோது அவனுக்கு அழுகை குமுறிக் கொண்டு வந்தது. வலிமையும் வீரமும், பொருந்திய அவன் பேச்சு வராத பருவத்துப் பச்சைக் குழந்தைபோல் குமுறி அழுத காட்சி அங்கிருந்த எல்லாரையும் மனமுருகச் செய்தது. இரண்டு கைகளாலும் முகத்தை மூடிக்கொண்டு அழுதழுது சோர்ந்து போய் அவன் தரையில் சாய இருந்த போது அதுவரையில் பேசாமல் நின்று கொண்டிருந்த நீலநாக மறவர் விரைவாக ஓடிவந்து அவனைத் தாங்கிக் கொண்டார்.

"இந்தப் பாவியை மன்னிப்பாயா, தம்பீ? என்னிடம் அடைக்கலமாக இருந்த போதில், அவருக்கு இப்படி நேர்ந்து விட்டதே என்பதை நினைத்தால் என்னால் துக்கத்தைத் தாங்க முடியவில்லையே?" என்று வீரசோழிய வளநாடுடையார் தமது ஆற்றாமையைச் சொல்லிப் புலம்பி அழுதார்.

அப்போது நீலநாக மறவர் வளநாடுடையாரை நோக்கிக் கையமர்த்தி அவருடைய அழுகையை நிறுத்தச் செய்தார்.

"அழுது ஆகப்போவதென்ன? மனிதர்களின் மரணம் காலத்தின் வெற்றிகளில் ஒன்று. புகழும், செல்வமும்

# சாதனை நெருங்கிவிட்டது

பாரதத்தின் மகத்தான உருக்காலைத் திட்டம் அநேகமாகப் பூர்த்தியடைந்து விட்டது. இஸ்கான் என்று பிரபலமாக அழைக்கப்படும் பிரிட்டிஷ் பொறியியல், மின்விசைக் கருவிகள் உற்பத்திக் கம்பெனிகளின் கூட்டமைப்பு அமோக வெற்றி பெற்று விட்டது. வேலை முடியப் போகிறது.

உருக்குத் தகடு ஆலைகள், உருக்கும் பகுதிகள், ஊது உலைகள், சுட்ட நிலக்கரிச் சூளைகள், கோபுரம் போன்று உயர்ந்த குளிர் அறைகள் முதலியன பிரதேசத்தையே உருமாற்றி விட்டன. புதிதாக உருவாகியுள்ள இத்தொழிலால் மேற்குவங்க மாநிலத்தில் இதற்குள்ளாகவே வேலை வாய்ப்பு பெருகிவிட்டது. நெல் வயல்களாகவும், காடுகளாகவும், காட்சி யளித்த பகுதியில் பிரும்மாண்டமான ஒரு எஃகு நகரம் தோன்றியுள்ளது. இதன் சிருஷ்டியில் இரு நாட்டவர், இரு வேறு நாகரிகத்தவர் ஒன்றுபட்டு, ஒரே லட்சியத்துடன் உழைத்துப் பணியாற்றினர். இதன் விளைவாக பிரிட்டிஷ் தொழில் துறைக்குப் பெரும் வெற்றியும், இந்திய மக்களுக்கு நல்ல வருங்கால வாழ்வும் கிட்டியுள்ளன.

கட்டம்

3

துர்க்காபூர்



# இஸ்கான்

இந்தியன் ஸ்டீல் ஒர்க்ஸ் கன்ஸ்ட்ரக்ஷன் கம்பெனி லிமிடெட்

டேவி & யுனைடெட் என்ஜினீரிங் கம்பெனி லிமிடெட், ஹெட் ரைட்ஸன் & கம்பெனி லிமிடெட், ஸைமன்-கார்வ்ஸ் லிமிடெட், தி வெல்மென் ஸ்மித் ஓவன் என்ஜினீரிங் கார்ப்பரேஷன் லிமிடெட், தி வில்கின்ஸன் கம்பெனி லிமிடெட், அஸோசியேடட் எலெக்ட்ரிகல் இண்டஸ்ட்ரீஸ் (ரக்பி) லிமிடெட், தி இங்கிலிஷ் எலக்ட்ரிக் கம்பெனி லிமிடெட், தி ஜெனரல் எலக்ட்ரிக் கம்பெனி லிமிடெட், அஸோசியேடட் எலக்ட்ரிகல் இண்டஸ்ட்ரீஸ் (மான்செஸ்டர்) லிமிடெட், ஸர் வில்லியம் ஆர்ரோல் & கம்பெனி லிமிடெட், க்ளிவ்லண்ட் பிரிட்ஜ் & என்ஜினீரிங் கம்பெனி லிட், டோர்மென் லாங் (பிரிட்ஜ் & என்ஜினீரிங்) லிட், ஜோஸப் பார்க்ஸ் & ஸன் லிமிடெட், இந்தியன் கேபிள் கம்பெனி (கலெண்டர்ஸ் கேபிள் லிமிடெட், பிரிட்டிஷ் இன்ஸுலேடட் கலெண்டர்ஸ் கேபிள் லிமிடெட்).

இந்தியாவுக்காக வேலை செய்யும் பிரிட்டிஷ் கம்பெனிகள்

ISCON 73 TM

பலரால் மதிக்கப்படுதலும், உலக வாழ்க்கையில் பெருமையாக இருப்பதைப் போல் நேற்று இருந்த ஒருவரை இன்றில்லாமல் செய்து விடுவது காலத்துக்குப் பெருமை. காலத்தின் இந்தப் பெருமையால் நமக்குத் துக்கம். தன்னுடைய ஆற்றலால் காலம் தான் இந்த விதமான துக்கங்களையும் மாற்ற வேண்டும். அழுது புலம்பிக் கொண்டிராமல் இறந்தவருக்குச் செய்ய வேண்டிய நீத்தார் கடன்களைச் செய்யப் புறப்படு" - என்று நீலநாக மறவர் ஆறுதல் கூறினார். சற்று முன் தன்னைக் கடுமையாகக் கோபித்துக் கொண்டவர் தானா இப்போது இப்படி ஆறுதல் கூறுகிறார் என்று வியப்பாயிருந்தது இளங்குமரனுக்கு. பெரிய துக்கத்தில் மனிதர்களுக்கு இடையே உள்ள சிறிய கோபதாபங்கள் கரைந்து விடுகின்றன. கலங்கிய கண்களோடு தன்மேல் சாய்ந்து கொண்டே தன் முகத்தை நிமிர்ந்து பார்த்த இளங்குமரனின் தலையைக் கோதிக் கொண்டே, "அருட்செல்வ முனிவர் எப்படி உனக்கு நிழல் மரமாக இருந்தாரோ, அப்படி இனிமேல் நான் இருப்பேன். நீ தவறாக நடந்து கொள்வதாகத் தெரிகிறபோது நான் கடிந்து கொண்டால் அதை நீ ஏற்றுக் கொள்ளத்தான் வேண்டும். ஒரு தந்தைக்குத் தன் மகனைக் கடிந்து கொண்டு நல்வழிப் படுத்த உரிமை உண்டு அல்லவா?" என்று பாசத்தோடு கூறினார் நீலநாக மறவர்.

"உலகத்துக்கெல்லாம் பொழுது விடிந்து கொண்டிருக்கிற இந்த நேரத்தில் எனக்கு மட்டும் இப்படி ஒரேயடியாக இருண்டு விட்டதே" என்று நீலநாக மறவரின் தோளில் முகத்தைப் புதைத்துக் கொண்டு இளங்குமரன் துன்பத்தை ஆற்றமுடியாமல் மேலும் பொங்கிப் பொங்கி அழலானான். கதக்கண்ணன் முதலிய நண்பர்களும் கண்களில் நீர் மல்க அருகில் வந்து நின்றார்கள்.

"நினைத்து நினைத்து வேதனைப்படாதே. தம்பீ! மனத்தை ஆற்றிக் கொள். துன்பங்களைப் பொறுத்துக் கொள்ளத் தெரியாதவர்களுக்குத் தான் பகலும் இரவுபோல் இருண்டு தோன்றும். நீ வீரன். அப்படி உனக்குத் தோன்றவிடலாகாது."-மீண்டும் அவனுக்கு இதமாக எடுத்துச் சொல்லி ஆற்ற முயன்றார் நீலநாக மறவர்.

தான் வெளியே சொல்லிக் கொள்ள முடியாமல் தன் மனத்துக்குள்ளேயே அழவேண்டிய பெருங் குறை ஒன்றையும் இளங்குமரனால் அப்போது நினைக்காமல் இருக்க முடியவில்லை.

அருட்செல்வ முனிவர் தீயில் சிக்கி மாண்டபோதே அவனுடைய பிறப்பையும், பெற்றோரையும் பற்றிய உண்மையும் எரிந்து அழிந்துபோய் விட்டது. அந்த இரகசியத்தைத் தெரிந்து கொண்டிருந்த ஒரே மனிதரும் மாண்டு போய் விட்டார் என்று அறிகிறபோது அவனுக்கு உலகமே இருண்டு போனாற்போல்



துயரம் ஏற்படத்தான் செய்தது. எதை அறிந்து கொள்ளும் ஆவலினால் அவனுக்கு வாழ்க்கையில் சுவையும், விருப்பமும் நிறைந்திருந்தனவோ அதை இனிமேல் அவன் யாரிடமிருந்து அறிந்து கொள்வான்? அவனுடைய அருமைத் தாயை அவனுக்கு யார் காட்டுவார்கள்? நீலநாகமறவர் கூறியது போல் உலகத்தையே தாயாக எண்ணி மகிழ வேண்டியதுதானா? அவ்வளவுதான் அவனுக்குக் கொடுத்து வைத்ததா?

"இப்படி நின்று அழுதுகொண்டே இருந்தால் நேரமும், கண்ணீரும்தான் செலவாகும். வா, இறந்தவருக்குச் செய்ய வேண்டிய நீத்தார் கடன்களைச்

செய்யலாம்" என்று நீலநாக மறவர் அவனைக் கைப்பற்றி அழைத்துக் கொண்டு போனார்.

'உயிரோடிருந்துகொண்டே காரியத்துக்காகச் செத்துப்போனதாகப் பொய்யைப் பரப்பிட ஏற்பாடு செய்தவருக்கு மெய்யாகவே இறந்ததுபோல் நீத்தார் கடனாற்ற விடலாமா?' என்று மனத்துக்குள் தயங்கினார் வீரசோழிய வளநாடுடையார். ஆனால் அவர் இளங்குமரனைத் தடுத்து நிறுத்தவில்லை. தடுத்தால் பொய்ம்மை நாடகம் வெளியாகி விடுமோ என்ற அச்சத்தில் மௌனமாயிருந்து விட்டார்.

நீலநாகமறவர் இளங்குமரனைச் சக்கரவாளக் கோட்டத்துக்கு அழைத்துப் போய் நீத்தார் கடன்களைச் செய்து கொண்டிருந்த அதே நேரத்தில் வீரசோழிய வளநாடுடையார் ஆலமுற்றத்துக் கோயிலில் இறைவனிடம், பிரார்த்தனை செய்து கொண்டிருந்தார்.

"இறைவா! இந்த இரகசியத்தை உரிய காலம் வரை காப்பாற்றும் மனத்திடத்தை எனக்குக் கொடு! எல்லாம் நலமாக முடிந்தபின் இறுதியில் என் அருமைப் பெண் முல்லை அந்தப் பிள்ளையாண்டானுக்கு மாலை சூட்டி அவனுக்கு வாழ்க்கைத் துணையாகும் பாக்கியத்தையும் கொடு" என்று வேண்டிக் கொண்டிருந்தார். இப்படி இறைவனை வேண்டிக் கொண்டே கண்களை மூடியவாறு தியானத்தில் ஆழ்ந்தபோது, இளங்குமரன் புன்னகை தவழும் முகத்தோடு தன் பெண் முல்லையின் கழுத்தில் மாலை சூடுவது போல் ஒரு தோற்றம் அவருக்கு மானசிகமாகத் தெரிந்தது. அந்தத் தோற்றத்தை மெய்யாகவே தம் கண்கள் காணும் நாள் விரைவில் வரவேண்டுமென்ற ஆவலோடு ஆலமுற்றத்திலிருந்து திரும்பினார் வளநாடுடையார்.

அவர் வீட்டுக்கு வந்ததும் முல்லை அருட்செல்வ முனிவரின் மரணத்தைப் பற்றி அவரைக் கேட்டாள்.

"என்னப்பா, அருட்செல்வரின் தவச்சாலையில் தீப்பற்றி எரிந்து அவர் இறந்து போனாராமே? புறவீதியெல்லாம் எங்கும் இதே பேச்சாக இருக்கிறது. நேற்றிரவு நீங்கள் என்னிடம் ஒன்றுமே சொல்லவில்லையே?" என்று பரபரப்புடன் பதறிக் கேட்ட மகளுக்குச் சுருக்கமாய்ப் பதற்றமின்றிப் பதில் சொன்னார் வளநாடுடையார்.

"நேற்றிரவே எனக்குத் தெரியும், முல்லை; ஆனால் நடு இரவில் உன்னிடம் அதைச் சொல்லி உன் மனத்தை வருத்த விரும்பவில்லை. இப்போதுதான் இளங் குமரனுக்கே அந்தச் செய்தியைச் சொல்லி விட்டு வருகிறேன்" என்று நிதானமாகக் கூறினார் வளநாடுடையார்.

'நெருங்கிய தொடர்புள்ள ஒருவரின் மரணத்தைப் பற்றி அதிகத் துக்கமில்லாமல் இப்படி இயல்பான விதத்தில் அறிவிக்கிறாரே' - என்று தந்தை, அருட்செல்வரின் மரணத்தை அறிவித்த விதத்தை எண்ணித் திகைப்படைந்தாள் முல்லை. (தொடரும்)

## ராஜாஜியின் சுற்றுப்பிரயாணம்

ராஜாஜி இம்மாதம் 24-ம் தேதி முதல் மே 4-ம் தேதி வரை சேலம், நீலகிரி ஜில்லாக்களில் சுற்றுப் பிரயாணம் செய்கிறார்.

ஏப்ரல் 24-ம் தேதி: ஹோசூர், சூளகிரி, கிருஷ்ணகிரி.

ஏப்ரல் 25-ம் தேதி: காவேரிப்பட்டிணம், கரிமங்கலம், பலாக்கோடு, பாப்பாரப்பட்டி, தர்மபுரி.

ஏப்ரல் 26-ம் தேதி: தோப்பூர், திவட்டிப் பட்டி, பூசாரிப்பட்டி, ஓமலூர், தாரமங்கலம், மேச்சேரி, மேட்டூர்.

ஏப்ரல் 27-ம் தேதி: நங்கவல்லி, ஜலகண்டபுரம், இடப்பாடி, கொங்கணாபுரம், திருச்செங்கோடு.

ஏப்ரல் 28-ம் தேதி: மல்லசமுத்திரம், ஆட்டையம்பட்டி, வெண்ணந்தூர், ராசிபுரம், நாமக்கல்.

ஏப்ரல் 29-ம் தேதி: நாமகிரிப் பேட்டை, மல்லிகாரை, தம்மம்பட்டி, காரடையாம்பள்ளி, வீரகனூர், ஆத்தூர்.

ஏப்ரல் 30-ம் தேதி: நரசிங்கபுரம், பெத்தநாய்க்கன்பாளையம், வேளப்பாடி, அயோத்தியாபட்டணம், சேலம்.

மே 1-ம் தேதி: சங்கரி துர்கம், கொமாரபாளையம்.

மே 2, 3 தேதிகள்: நீலகிரி ஜில்லா.

மே 4-ம் தேதி: சென்னைக்குப் புறப்பாடு.



# தமிழ் புத்தாண்டு வாழ்த்துக்கள்!

புத்தா பிக்சர்ஸ்



# பாவ மன்னிப்பு

பாடல்கள் கவிஞர் கண்ணதாசன் · சங்கீதம் விஸ்வநாதன்-ராமமூர்த்தி
வசனம் M.S. சோலைமலை · காமிரா G. விட்டல்ராவ்

திரைக்கதை டைரக்ஷன் **A.பீம்சிங்** · ஸ்டுடியோ **ஏவி எம்**



பாவ மன்னிப்பு

## பாட்டுப் போட்டியில் கலந்து கொண்டீர்களா?

- முதற் பரிசு..... **4000**
- இரண்டாவது பரிசு **2000**
- மூன்றாவது பரிசு **1000**

படத்திலுள்ள 8 பாட்டுக்களையும், பாட்டின் இசை, பாட்டின் கருத்து, பாட்டு எவ்விதம் அந்த காட்சிக்கு உறுதுணையாய் இருக்கிறது என்பதை நினைவில் வைத்து அதனதன் தராதரத்தின்படி வரிசைப்படுத்தி **10·6·61** க்குள் தபால் மூலம்....

**பாவ மன்னிப்பு** பாட்டுப்போட்டி
**ஏவி எம்** ஸ்டுடியோஸ், சென்னை-26.
என்ற முகவரிக்கு அனுப்பவும்.




சென்னை ....சாந்தி · ஸ்ரீகிருஷ்ணா · ராக்ஸி
(ஏர்கண்டிஷண்ட்) மற்றும் தென்னகமெங்கும்

இப்படத்தின் பாடல்களை *கொலம்பியா* ரிகார்டுகளில் கேளுங்கள்.

# கடும் உஷ்ணகாலத்தில் மிகவும் இதமளிப்பது...

# பாண்ட்ஸ் ட்ரீம்ப்ளவர் டால்கம் பவுடர்




புத்துணர்ச்சியளிக்கக்கூடியது. வியர்வையை

டறிஞ்சக் கூடியது. லேசான வாசனையுள்ளது

பாண்ட்ஸ் ட்ரீம்ப்ளவர் டால்கம் பவுடர் உங்களை நாள் முழுவதும் புத்துணர்ச்சியுடன் வைக்கும்! காலை ஸ்நானத்திற்குப் பிறகு பாண்ட்ஸ் ட்ரீம்ப்ளவர் டால்கம் பவுடரை உங்கள் உடம்பின்மேல் தாராளமாகத் தூவிக்கொள்ளுங்கள். கோடைகாலத்தில் நாள் முழுவதும் உங்களுக்கு இதமும் நறுமணமும் அளிக்கும்!

நாள் முழுவதும் புத்துணர்ச்சியுடன் விளங்க எப்பொழுதும் பாண்ட்ஸ் ட்ரீம்ப்ளவர் டால்கம் பவுடரை ..ய உபயோகியுங்கள்.

சீஸ்ப்ரோ-பாண்ட்ஸ் இன்கார்பொரேடட்
( வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு. எஸ். ஏ.வில் இணைக்கப் பெற்றது )

JWT-P-1828

# எனக்கா தெரியாது?

## திருவேரகத்தான்

"ரயில் அந்த ஸ்டேஷனில் ஒரே நிமிஷம் தான் நிற்கும். ரயில் நின்றபிறகு மசமச வென்று விழிக்காமல் இப்போதே இறக்க வசதியாக ஓரத்தில் எடுத்து அடுக்கி வையுங்களேன்" என்று கடுமையும் கண்டிப்பும் நிறைந்த குரலில், மற்றப் பிரயாணிகளும் நிமிர்ந்து பார்க்குமளவுக்கு இரைந்து பேசினார் கணபதி.

வாசுதேவனுக்கு என்னவோ போலிருந்தது. வீட்டுக்குள் ராஜ்யபாரம் நடத்தி, விநாடிக்கு ஓர் ஆக்ஞையை வீசி ஆர்ப்பாட்டம் செய்து பழக்கப்பட்ட தன் தந்தை, ஓடும் ரயிலைக்கூட வீடாக நினைத்து அன்னியர்களுக்கிடையே அப்படி இரைந்தது அவனுக்கு நாசூக்குக் குறைவான நிகழ்ச்சியாகத் தான் தோன்றியது; ரோஷமாகவுமிருந்தது.

"பகபதி கோவிலுக்கு இந்த ரயில் போய்ச் சேர இன்னும் இருபது நிமிஷங்கள் இருக்கின்றன. பாதிச் சாமான்கள் இறக்கும் போது வண்டி ஓடிவிடாது. ஸ்டேஷன் மாஸ்டர் என்று இருக்கும் ஒருவர் இதையெல்லாம் கவனிப்பார். இடையில் வரும் ஸ்டேஷன்களில் இறங்கும் பிரயாணிகளுக்கு இடைஞ்சலாக இப்போதே..."

ஜன்னலுக்கு வெளியே தலையை நீட்டிக் கொண்டே தகப்பனுரை நேரடியாகப் பார்க்கத் தைரியமில்லாமல் பேசிய வாசுவை முறைத்துப் பார்த்தார் கணபதி.

"உன் கடிகாரத்தைக் கொண்டு உடைப்பிலே போடு! அது கடிகாரமா? ஒரு மாதத்தை ஒரு நாளில் காண்பிக்கும் காலண்டர் அது. அதை நம்பிச் சாவகாசமாக வந்து தான், நேற்றிரவு எழும்பூரில் வண்டியைக் கோட்டைவிடத் தெரிந்தோம். இந்தத் துரை வருகிறார் என்று ஸ்டேஷன் மாஸ்டர் இரண்டு மணி நேரம் வண்டியை நிறுத்துவாராடா மடையா? ஸ்டேஷன் மாஸ்டர் உன் மாமனாரோ..." கணபதி சீறினார். அதைக் கவனித்த சில பிரயாணிகள் அவர் ஹாஸ்யத்தை ரசித்து வேறு சிரித்தார்கள்.

விஷயத்தை முற்ற விடாமல் இருக்கக் கணபதியின் மனைவி கமலம் மடமடவென்று பெட்டி படுக்கைகளை எடுத்து ஒரு பக்கமாக அடுக்க ஆரம்பித்தாள்.

"அண்ணாவுக்குத்தான் இன்றைக்குச் சாயந்திரமே புதுக் கடிகாரம் கிடைத்து விடுமே! ஆனால் அவன் புதுக் கடிகாரத்தின் அழகைப் பார்த்துக் கொண்டிருப்பானா? அல்லது பக்கத்தில் உட்காரப் போகும் புதுப் பெண்ணைப் பார்த்துக் கொண்டிருப்பானா என்று தான் எனக்குத் தெரியவில்லை" என்று மெதுவாக வாசுவின் காதில் மாத்திரம் விழும்படி சொல்லிவிட்டுத் தாயாருக்கு ஒத்தாசை செய்வதில் முனைந்தாள், வாசுவின் கடைசித் தங்கை ருக்கு.

வாசுவுக்கு அவள் தலையில் ஓங்கி ஒரு குட்டு வைக்க வேண்டும் போலிருந்தது. கோபத்தை அடக்கிக் கொண்டான். வண்டி ஐயம்பேட்டை அவுட்டரைத் தாண்டி ஓடிக் கொண்டிருந்தது.

இதோ! இன்னும் கொஞ்ச தூரம்தான்! ஒருவழியாக வண்டி பகபதிகோவில் ஸ்டேஷனிலேயே போய் நின்றுவிட்டது.

பிள்ளைவீட்டார்களை வரவேற்று உபசரித்து வீட்டுக்கு அழைத்துப் போகப் பெண் வீட்டாரைச் சேர்ந்த படையே ஒன்று இரண்டு வந்து, பகபதிகோவில் ஸ்டேஷன் பிளாட்பாரம் நிரம்பி வழியக் காத்திருக்கப் போகிறது என்ற கற்பனையில் மிதந்த கணபதி சில விநாடிகள் வரையில்வண்டியைவிட்டு இறங்காமல் கதவருகில் நின்று கம்பீரமாகப் பார்வையைப் பிளாட்பாரத்தின் இரு பக்கமும் செலுத்தினார்.

கொடி பிடித்திருந்த ஸ்டேஷன் மாஸ்டரையும், சாவி வளையத்தை ஏந்தியிருந்த 'பாயின்ட்ஸ்'மேனையும் தவிர அந்தப் பரந்த பிளாட்பாரத்தில் ஈ காக்காய் இல்லை!

கண்களைக் கசக்கிக் கொண்டு ஸ்டேஷன் பெயர் பொறிக்கப்பட்டிருந்த பலகையைப் பார்த்தார். பகபதிகோவிலேதான்! அவர்கள் இறங்க வேண்டிய ஸ்டேஷன் அதுதான். அதற்குத்தான் டிக்கட்டுகளும் வாங்கப்பட்டிருந்தன.

வேகமாக வண்டியிலிருந்து கீழே இறங்கிச் சாமான்களையும் இறக்கி வைக்க உதவி செய்தார். மறுநிமிடம் அந்தக் குடும்பத்தைப் பிளாட்பாரத்திடம் ஒப்படைத்துவிட்டு, ரயில் கிளம்பிப்போய் விட்டது. ஸ்டேஷன் மாஸ்டர் கார்டுக்குக் கையை ஆட்டிவிட்டுத் தம் அறைக்குள் தஞ்சம் புகுந்தார். பாயின்ட்ஸ் மேன் கைகாட்டியைத் தூக்கிவிட்டு அப்படியே எதிர்த்தாற்போலிருந்த வரப்பைத் தாண்டித் தென்னந்தோப்புக்குள் சென்று மறைந்தான்.

கணபதியின் கண்களில் கனல் பறந்தது. அவர் முகத்தைப் பார்க்கவே, மற்றவர்கள் அஞ்சினார்கள்.

"டேய் வாசு! பட்டணத்துக்குப் போகும் அடுத்த வண்டி எப்போது வருகிறதென்று ஸ்டேஷன்மாஸ்டரிடம் கேளுடா!"

கணபதியின் கனத்த குரல் அந்தச் சிறு ஸ்டேஷன் கட்டிடத்தில் மோதி எதிரொலித்தது. வாசு ஸ்டேஷன் பக்கம் பார்க்காமல் மற்ற எல்லாப் பக்கங்களிலும் தன் மாமனார் பதவியை மறுநாள் ஏற்க இருப்பவரோ, அவரது உறவுக்காரர்களோ, ரயில் புகையைக் கண்டாவது பறந்து ஓடி வர மாட்டார்களா என்று பார்த்து ஏங்கிக் கொண்டிருந்தான்.

"என்னடா எருமைமாடுமாதிரி நிற்கிறாய்? சாமான்களைத் தூக்கிக்கொண்டு உன் மாம

னூர் வீட்டுக்கு நடந்தே போய்விடலாம் என்கிறாயா? இந்த அனுமதேயப் பேர்வழிகளுடன் சம்பந்தம் பேசியதற்கு இவ்வளவு அவமானம் போதாதுடா, போதாது. அந்தப் பெட்டிக்குள்ளே 'கைடு' இருக்கு எடு. நானே பார்க்கிறேன். இனிமேல் அந்த ராமமூர்த்திப் பயல் வீட்டிலே நான் காலடி எடுத்து வைத்தால் 'மானம் கெட்டப் பயலே' என்று கேட்கட்டும்!''

காற்று மாத்திரம் எதிர்ப்பக்கமிருந்து வீசாமல் இருந்தால் அவருடைய வார்த்தைகளை ஸ்டேஷனுக்கு இரண்டு மைல்களுக்கு அப்பாலிருந்த சூலமங்கலம் கிராமத்தில் ராமமூர்த்தியைத் தேடிப் பிடித்துக் காதில் நுழைத்திருக்கும்!

வாசுவுக்குத் தைரியம் எங்கிருந்தோ வந்துவிட்டது. ''அப்பா! நாம் அப்படி உடனே திரும்பிவிட்டால் நம்முடைய கோபத்தை அவர்கள் எப்படித் தெரிந்து கொள்வார்கள்? நாம் வரவேயில்லை என்றல்லவா நினைத்துக் கொள்வார்கள்! பழியை நம் மேலே போடுவார்கள்! எப்படியும் பட்டிணத்துக்குத் திரும்பும் வண்டி சாயங்காலம்தான்! தஞ்சாவூருக்கோ, கும்பகோணத்துக்கோ போயிருக்கலாம் என்றால் கூட இரண்டு பக்கங்களுக்கும் இன்னும் இரண்டு மணி நேரத்துக்கு வண்டி கிடையாது!''

''அண்ணா ரயில்வே கைடைப் பாடம் பண்ணியிருக்கான் போலிருக்கிறது. நாளைக்கே, ஆடி, ஆறும் மாதம், தலை தீபாவளி என்று மாமனூர் வீட்டுக்கு வந்து போவதற்காகத் தயார் பண்ணிக் கொண்டிருக்கிறான்!'' -என்று ருக்கு சொன்னது கமலத்தின் காதில் மாத்திரம்தான் விழுந்தது.

''அதற்காக இந்த அனுமத்து ஸ்டேஷனிலேயே பட்டினியாக இரண்டு மணி நேரம் உட்கார்ந்திருக்க வேண்டும் என்று தலையில் எழுதியிருக்கிறதா ?''

கணபதி அடிவயிற்றிலிருந்து குரல் எழும்படி கத்தினார். கும்பகோணம் பிளாட்பாரத்தில் உள்ளே போன ஒரு கப் காப்பி ஸ்வாமிமலை ஸ்டேஷனைத் தாண்டுவதற்குள்ளேயே பசியை மேலும் அதிகரித்து விட்டிருந்தது.

''அதுதான் அப்பா சொல்ல வந்தேன்! இந்த வட்டாரத்திலே எங்கேயாவது காப்பி, இட்டிலி கிடைத்தால் திரட்டிக் கொண்டு வருகிறேன். நீங்கள் எல்லோரும் வெயிட்டிங் ரூமில் உட்காந்திருங்கள்.''

அப்பா அதற்கும் தடையுத்தரவு போட்டு விடுவாரோ என்ற அச்சத்தில், கையில் தொங்கிய கூஜாவுடன் வாசுதேவன் 'விருட்' என்று ஸ்டேஷன் எல்லையைக் கடந்து, அடர்ந்து நின்ற இலுப்பை மரங்களின் ஊடே சென்று மறைந்துவிட்டான்.



பசுபதிகோவில் வட்டாரமோ, அதற்கு இரண்டு மைல் வடக்கே உள்ள சூலமங்கலம் குக்கிராமமோ, இரண்டும் வாசுதேவனுக்குப் பழக்கமான பிரதேசமல்ல. பெண் பார்க்கும் படலம் பட்டணத்திலேயே முடிந்து விட்ட தால், அதற்கென்று அந்தப் பக்கம் வரவேண் டிய அவசியமும் அவனுக்கு ஏற்படாமற் போய் விட்டது.

பசுபதி கோவிலுக்குப் பக்கத்தில் இரண்டு சூலமங்கலங்கள் உண்டென்றும், ராமமூர்த்தி யின் சூலமங்கலம் இரண்டாவது மைலிலுள்ள அரசலாற்றங்கரைச் சூலமங்கலம் என்றும் வாசுதேவனுக்குத் தெரியும். மனத்திலே வகுத்த திட்டத்துடன் எதிர்ப்புறமாகப் பசுபதி கோவில் ஊருக்குள் போவது போல் பாவனை செய்து ஸ்டேஷன் கண் பார்வையி லிருந்து மறைந்ததும், ரயில்வே லயனைத் தாண்டி மாமனார் ஊரை நோக்கி நடந்தான்.

அவனுக்கோ, அவன் கூட வந்து வெயிட் டிங் ரூமில் உட்கார்ந்திருப்பவர்களுக்கோ தெரியாத விஷயம் ஒன்றும் இருந்தது. காலை ஆறு மணிக்கே ராமமூர்த்தி ஓர் ஆளை ஸ்டே ஷனுக்கு அனுப்பி அன்றைக்குச் சென்னையி லிருந்து வரும் ரயில் சரியான நேரத்துக்கு வருகிறதாவென்று விசாரித்து வரச் சொன் னார். சம்பந்திகளை அழைத்து வர ஏற்பாடு செய்திருந்த நான்கு வில் வண்டிகளும் தயா ராக இருந்தன.

ஸ்டேஷனுக்கு வந்த ஆள் கொஞ்சம் அசடு! அவன் வந்த வேளையில் ஸ்டேஷன்மாஸ்ட ருக்குக் காலைக் காப்பி நன்றாக இல்லை என்ற கோபம். திருவனந்தபுரம் பாசஞ்சர் என்று அந்த ஆள் கேட்டது, திருச்சினாப் பள்ளி பாசஞ்சர் என்று அவர் காதில் விழுந் தது. "இரண்டு மணி நேரம் லேட்! பிரா ணனை வாங்காதே ஐயா!" என்று அவர் சீறி விழுந்தார்.

வந்த ஆள் ஓடிப் போய் ராமமூர்த்தியிடம் விஷயத்தைத் தெரிவித்தான். எனவே, வண்டிகள் ஒன்பது மணிக்குமேல் ஸ்டேஷ னுக்குப் புறப்பட்டால் போதும் என்று உத்தரவிட்டார்.

வாசு ஏறத்தாழ அரைமணி நேரம் நடந்த பிறகு, ஓர் அழகான கிராமம் தென்பட்டது. கிராமத்துக்குள் நுழையும்போதே ராமமூர்த்தி யின் வீடு எங்கிருக்கிறது என்று தெரிந்து கொள்ள ஆவல்.

தெருவை விட்டு ஒதுங்கியிருந்த ஒரு பெரிய வீட்டு வாசலில் இரண்டு வேலையாட்கள் ஒட்டடை யடித்துக் கொண்டிருந்தார்கள். இன்னும் இரண்டு பேர்கள் சவுக்கண்டியில் ஊஞ்சலை மாட்டிக் கொண்டிருந்தார்கள்.

"ஏனப்பா! ராமமூர்த்தி என்கிறவர் வீடு எங்கே இருக்கிறது? நாளைக்கு அங்கே கல் யாணம் நடக்குதே?" என்றான் வாசற் கதவோரமாக இருந்த ஒரு முரட்டு மீசை ஆசாமியிடம். அவன் முகவாய்க்கட்டை யைத் தடவிக் கொண்டு பதில் சொல்வதற் குள் கதவுக்குப் பின்பக்கமிருந்து கணீரென்ற பெண் குரல் காற்றிலே மிதந்து வந்தது. "பக்கத்துத் தெருதான், முத்தையா! போய் வீட்டைக் காண்பி!" அவன் உத்தரவிட்டுக் கொண்டே கதவைத் திறந்தான். "ஐயோ! அது சாக்ஷாத் வாசந்தி!" அந்த வீடு சம்பந்தி கள் வந்து இறங்குவதற்குத் தயாராகிக் கொண்டிருந்தது.

அடுத்த பதினைந்து நிமிடங்கள் ராமமூர்த் தியின் வீடு அல்லோலகல்லோலப்பட்டது. வாசுதேவன் இட்டிலியையும் காப்பியையும் மாறி மாறித் தள்ளிக் கொண்டே ராம மூர்த்தியுடன் தணிந்த குரலில் பேசினான். கதவருகில் நின்ற வாசந்தி கவனமாக அந்தப் பேச்சைக் கேட்டாள். ராமமூர்த்தி விடாமல் தலையை ஆட்டினார்.

இருபது இட்டிலியும் மிளகாய்ப் பொடியும் கட்டி எடுத்துக் கொண்டு கூஜாக் காப்பியுடன் வந்தது போலவே வாசுதேவன் தனிமையில் ஸ்டேஷனை நோக்கி நடந்தான். திரும்பும் போது ஒரு சிறு மாறுதல். முக்கால்வாசி தூரம் அவன் வண்டியிலே வந்து இறங்கும் போது தலையை நன்றாகக் கலைத்துக் கொண்டு ஸ்டேஷனை நோக்கி நடந்தான்.

"அடேடே! கிராமாந்திர ஓட்டலிலேகூட இத்தனை நன்றாக இட்டிலி காப்பி கிடைக் கிறதா?" என்று கேட்டுக் கொண்டே கணபதி ஒரு கை பார்த்தார். "ஏண்டா, இவ்வளவு நேரம்?" என்றும் கேட்டார்.

"ஓட்டல்காரன் விறகை இழுத்து அடுப்பை அணைத்து விட்டான். அப்புறம் எனக்காக ஸ்பெஷலாய்...."

அவனை முடிக்க விடாமல் குறுக்கிட்டார்: "சரி! சரி!...பத்து பத்துக்கு கும்பகோணம் போகும் வண்டி வருகிறதாம்! போயி ஐந்து டிக்கெட் வாங்கு! ஊருக்குப் போயி இந்த ராமமூர்த்திப் பயலை ஒரு கை பார்க்கிறேன்! அயோக்கியன்!" கணபதியின் சுபாவம் காப்பி வேளையில் சுருதி மாறினாலும் மீண்டும் பழைய சுருதிக்குப் போய் விட்டது.

எங்கிருந்தோ நாகஸ்வர இசை காற்றிலே மிதந்து வந்தது. வரவரப் பெரிதாகிக் கொண்டே வந்தது. ரயில்வே கேட் முனையில் பத்துப் பதினைந்து மாட்டு வண்டிகள் திரும்பி ஸ்டேஷன் பக்கமாக வந்தன. பின்னால் வேதகோஷம் முழங்க ஐந்நூறு பேர்கள் வந்தார்கள்.

முதல் வண்டியி லிருந்து குதித்தி றங்கி ராமமூர்த்தி ஓடி வந்து, ஸ்டே ஷன் தூசியையும் பொருட்படுத்தா மல் கணபதியின் காலில் விழுந்தார்! பின்னால் வந்தவர்





மிகவும் துல்லியமான சருமத்திற்கு இதத்தை அளிக்கும் இனிய குணம் கொண்டது மெரோலின் சோப் அதுமட்டுமல்ல அதன் மருந்து கலந்த அம்சம் மேனிக்குப் பூரண பாதுகாப்பையும் அளிக்கிறது.

# மெரோலின்




இதனால்தான் நான் மெரோலின் சோப்பை மிகவும் விரும்பி உபயோகிக்கிறேன் என்கிறார் சிறந்த கன்னட நடிகையாகத் தேர்ந்தெடுக்கப் பட்டிருக்கும் ஸ்ரீமதி லீலாவதி.

**வெஜிடபிள் சோப் ஒர்க்ஸ்**

**கன்னிக்கோட்டை**

பெரிய பூ மாலையைக் கொண்டு வந்து கணபதியின் கழுத்தில் மாட்டினார். கொட்டு மேளக்காரர் கெட்டி மேளம் அடித்தார். என்ன விஷயம் என்று ஊகிப்பதற்கு முன்பே இந்த நிகழ்ச்சிகள் நடந்து விட்டன.

"சுவாமி! இது எங்கள் சம்பிரதாயம்! இன்றைக்குக் காலையில் ஒன்பது முப்பத்தி ஐந்துக்கு மேல்தான் நல்லவேளை. அதற்குமுன் சம்பந்திகள் பார்வைபட்டால்கூட விரோதம் வந்துவிடும். ஆகவே ஆகாது என்று ஜோசியர் சொன்னார். அதற்காகத்தான் நாங்கள் உங்கள் பொறுமையைக் கூடச் சோதித்து விட்டோம்! மரியாதை தெரியாதவர்கள் என்று கூட நீங்கள் நினைத்திருக்கலாம்! உங்களிடம் விஷயத்தைச் சொல்லிக் கொள்ளலாம் என்றுதான் நாங்கள் தைரியமாக இருந்தோம். நம் வருங்கால உறவுதானே முக்கியம்!...." ராமமூர்த்தி குழைந்தார். பெண் வீட்டார் ஒருவர் பிளாஸ்கிலிருந்து காப்பியை ஊற்றிக் கணபதியிடம் கொடுத்தார்.

"அப்பா! இதெல்லாம் கதை! சம்பிரதாயமாவது மண்ணாங்கட்டியாவது? கும்பகோணத்துக்கு ஐந்து டிக்கட் வாங்குகிறேன்" என்று குதித்தான் மாப்பிள்ளை வாசுதேவன்.

"சும்மாயிருடா அவசரக் குடுக்கை! அவர்கள் ஊரில் அவர்கள் வழக்கத்துக்கு நாம் கட்டுப்பட்டாக வேண்டாமோ?" என்று கணபதி, ராமமூர்த்தியைப் பார்த்துப் புன்சிரிப்பைக் கொட்டினார்.

அத்தனை வண்டிகளும் நாதசுரக்காரர் வண்டியைத் தொடர்ந்து ஊருக்குள் நுழைந்தன.

கணபதியின் ஏவலுக்கு நாலுபேர்கள் தயாராக நின்றனர். இரண்டு பேர்கள் அயராமல் விசிறிக் கொண்டிருந்தார்கள். ராமமூர்த்தி அவர்முன் நடனமே ஆடிக்கொண்டிருந்தார். கணபதி எதற்காவது கொஞ்சம் கத்தி ஆர்ப்பாட்டம் செய்ய ஆசைப்பட்டாலும் சந்தர்ப்பமே கிடைக்கவில்லை! ஏன் என்றால் எண்ணெயாக வல்லவா நின்றார்கள்? அவருக்குப் பிடித்த பாயசம்! அவருடைய அபிமான ஊறுகாய்! அவருக்கு இதமளிக்கும் சந்தனம், அவருடைய ஸ்பெஷல் பிராண்ட் மூக்குப் பொடி!...மனுஷன் அப்புறம் எதற்குத்தான் முகத்தைத் தூக்க முடியும்?

மறுநாள்தான் அதிகார பூர்வமாகக் கமலம்மாள் மாமியார் பதவியை ஏற்றுக் கொள்வதாக இருந்தாலும், அன்றைக்கே வாசந்தி கமலம்மாளை அரசமரத்தடிப் பிள்ளையார் பொறுமைப்படும் அளவுக்குச் சுற்றி வந்தாள்.

மாலை எட்டு மணிக்கு மாப்பிள்ளை அழைப்பு ஏற்பாடாகி யிருந்தது. கிராமத்தில் அந்த ஒரு தெருதான் பெரிய தெரு. அதன் தென் கோடியில் ஒரு சிறு கோவிலும் பஜனைமடமும் உண்டு. வடகோடியில் ராமமூர்த்தியின் வீடு. மற்றத் தெருக்கள் ஊர்வலத்துக்கு லாயக்கானவை அல்ல! அந்த ஊரில், பஜனை மடத்தில் மாப்பிள்ளைக்குக் கோட்டு சூட்டு மாட்டி மேளதாளத்துடன் கல்யாண வீடு வரையில் நடத்தியே அழைத்து வருவதுதான் சம்பிரதாயம். மோட்டார்க்காரின் உதவியை யாரும் நாடுவதில்லை.

இரவு ஏழு மணி சுமாருக்குக் கணபதியின் முகம் கடுகடு வென்றிருந்தது. அதைக் கேள்விப்பட்ட ராமமூர்த்தி உக்கிராண அறையிலிருந்து ஓடி வந்தார்.

"ஓய் சம்பந்தி!...உம்ம ஊரில் மாப்பிள்ளை அழைப்பு சாரட்டிலா? இல்லை, மோட்டாரிலா?" என்று கேட்டார் கணபதி.

இரண்டு அயிட்டங்களைப் பற்றியுமே எள்ளளவு சிந்தனையும் செய்யாத ராமமூர்த்திக்குப் பதில் சொல்ல முடியாதபடி நாக்கு உலர்ந்து போய்விட்டது.

இந்த ஒரு விஷயத்தில் ஏன் தமக்கு முன்னெச்சரிக்கை இல்லாமல் போய்விட்டது என்று தவித்தார் ராமமூர்த்தி.

இரவு மணி எட்டேகாலும் ஆகிவிட்டது. பஜனை மடத்தில் மாப்பிள்ளை வாசுதேவன் ட்வீட் சூட்டில் புகுந்து கொண்டு பூமாலை அலங்கரிக்க நின்று கொண்டிருந்தான்.

யாரோ ஒரு பையன் வேகமாக ஓடி வந்து ராமமூர்த்தியின் காதில் ஏதோ சொன்னான். ராமமூர்த்தி கணபதியிடம் திரும்பி, "வெளியிலே போன டிரைவர் வந்து விட்டானாம். ஐயம்பேட்டைக்காரர் சொல்லி யனுப்பியிருக்கிறார். கார் இதோ வந்துவிடும்! புது செவர்லெ டூரர்! இந்த வட்டாரத்துக்கு அது ஒரு காடிலாக் மாதிரி" என்றார்.

சில நிமிஷங்கள் கழித்து மற்றொரு பெரியவர் உள்ளே ராமமூர்த்தியிடம் வந்தார். "ஏண்டா ராமு!....மழைத்துளி விழறதேடா!....ரோடு சேறுபட்டா புதுசு போட்டுக் கொண்டிருக்கிற பொம்மனாட்டிகள் சிரமப்படுவாளே!...." என்றார்.

"இருங்கோ, மாமா!....எல்லாரையுமே நாலு டிரிப் காரிலே அடிச்சுட்டாப் போச்சு" என்றார் ராமமூர்த்தி.

மாப்பிள்ளை, கைக்குட்டையால் முகத்தருகில் வீசியவாறு "உஷ்!......இன்னும் எத்தனை நாழி இந்த அவஸ்தை?....இந்தக் கட்டடத்துக்கு மின்சார வசதியே கிடையாதா?" என்று அங்கலாய்த்தான்.

மணி ஒன்பதேகால்! கார் வரும் வழியைக் காணோம். ராமமூர்த்தி கணபதியின் முகத்தைப் பார்த்தார்! கணபதி வாசுதேவன் முகத்தைப் பார்த்தார். "சரி! சரி! சாப்பாடு வேறு ஆறிவிடும்! ஊர்கோலம் நடந்தே போகட்டும்!....." என்று கணபதி அனுமதி யளித்துவிட்டார்.

மழைத் துளி விழுந்த சுவடே இல்லை! வானம் நிர்மலமாக இருந்தது. ஊர்வலம் முடிந்து சாப்பாடும் தொடங்கியது. கணபதி சுவாரசியமாக மைசூர் ரசத்தை ரசித்துக் கொண்டிருந்தார். ராமமூர்த்தி அவருக்குப் பக்கத்தில் வந்தார்.

"அண்ணா, இப்பத்தான் கார் வந்தது. அந்த மடப் பயல் டிரைவர் இடம் தெரியாமல் இன்னொரு சூலமங்கலத்துக்குப் போய் விட்டு ஊரை யெல்லாம் சுற்றி விட்டு வந்திருக்கிறான்!" என்று ஆரம்பித்தார்.

"அப்படியா?" என்றார் கணபதி. ராமமூர்த்திக்கு மூச்சு சாதாரணமாக வந்தது.

"ஓய் சம்பந்தி! அந்தக் கார் நிற்கட்டும். கண்ணாலேயாவது பார்த்துச் சந்தோஷப்படுகிறேன். அப்புறம் போகட்டும் அது" என்றார். ராமமூர்த்திக்கு வயிற்றில் ஏதோ கடபுடா உணர்ச்சி. தலையை ஆட்டிவிட்டு நகர்ந்தார். சாப்பாடு தொடர்ந்தது.

தெருவில் சற்றுத் தள்ளி இருளடர்ந்த பகுதியில் இரண்டு வீடுகளுக்கிடையே உள்ள சந்தில் ஊர்வலத்துக்கு உதவாத கார் நின்று கொண்டிருந்தது. மழைக்குப் பயந்து கார் டிரைவர் அதன்மேல் டார்பாலினோ, துணியோ போட்டு 'டாப்பாதி டயர் பரியந்தம்' மூடி வைத்திருந்தான்.

"அதோ நிறுத்தியிருக்கிறான். டிரைவர் சாப்பிடுகிறான் என்று நினைக்கிறேன்" என்றார் ராமமூர்த்தி கணபதியிடம்.

"நிதானமாச் சாப்பிட்டு விட்டுப் போகட்டும்" என்று சொல்லி விட்டுக் கணபதி திரும்பினார். ராமமூர்த்தி நிம்மதியான பெருமூச்சு விட்டார்.

அப்புறம் எந்த விதமான சிக்கல்களும், கோபதாபங்களும் இல்லாமல் மறுநாள் வாசுதேவன் வாசந்தியின் கழுத்தில் தாலியை முடிந்தான். நான்கு நாட்கள் கழித்துக் கல்யாண கோஷ்டி ஊருக்குத் திரும்பியது. வாசந்தி அந்தக் கோஷ்டியில் இப்போது சேர்ந்திருந்தாள். கணபதி என்னவோ அதிக உற்சாகத்துடன் காணப்பட்டார்.

ரயில் கும்பகோணத்தில் நின்று புறப்பட்டது.

"டேய், வாசு! உன் ஜானவாச ஊர்வலத்துக்கு ஏற்பாடு செய்யப்பட்டிருந்த கார் பிரமாதம்டா! உனக்குத்தான் அதிருஷ்டமில்லை! லேட்டாக வந்தது" என்றார்.

"ஆமாம், அப்பா! மாமா எவ்வளவோ ஆசையோடுதான் ஓடி ஆடி ஏற்பாடு செய்தார். ஆனால்..."

"சாதாரண ஆசையா? ஆனால் ஒரு விஷயம்டா வாசு! சக்கரம் இல்லாத கூட்டு வண்டிக்கு மேலே சாக்கையும் கம்பளியையும் போட்டு மூடி செவர்லே காராக்க உங்க மாமாவாலேதாண்டா முடியும்! என் சம்பந்தி அசகாய சூரன்!"

"அப்பா!" வாசுதேவன் குரல் நடுங்கியது. அப்பாவுக்கு அந்தக் குட்டு எப்படித் தெரிந்துவிட்டது!

"ஏண்டா, விழிக்கிறே? பாதி ராத்திரியிலே நான் திண்ணையிலிருந்து எழுந்து தேக உபாதையைப் போக்கிக் கொள்ள நடந்தேன். அந்தக் கார் சம்பந்தி காண்பித்த இடத்திலேயே இன்னும் நின்று கொண்டிருந்தது. எனக்குத் தொட்டுப் பார்க்க ஆசை. துணியை இழுத்தால் உள்ளே கூட்டு வண்டி. உங்க மாமா உற்சாக மிகுதியில் எனக்குக் காட்டிய பிறகு வண்டியைத் திறந்துவிட மறந்து போய் விட்டார். நான் மறுபடியும் மூடி வைச்சுட்டு வந்தேன்! உன்னுடைய கம்பளிகூட உதவிக்குப் போயிருந்தாப்பிலே இருந்தது!"

"அப்பா! யுத்த காலத் தந்திரங்கள் மாதிரி கல்யாணகாலத் தந்திரங்களும் சில உண்டு. நீங்க பெரிய மனசு பண்ணி மன்னித்தது உங்க பரந்த மனப்பான்மையைத்தான் காண்பிக்கிறது."

"சரிதாண்டா! பெரிசா வந்தனோபசாரம் சொல்ல வந்துட்டான்! ரயிலை விட்டு இறங்கினதும் இறங்காததுமாக நீயே போய் உன் மாமனாரைப் பேட்டி கண்டு வந்ததையே நான் மன்னிச்சுட்டேனே!"

"அப்பா! அதுவும் உங்களுக்குத் தெரியுமோ?" என்றான் திகைப்புடன்.

"ஏண்டா, தெரியாது? இந்தக் கணபதியின் கண்களை ஏமாற்றலாம்! ஆனால் நாக்கை ஏமாற்ற முடியாதுடா! நீ கூஜாவிலே கொண்டு வந்த காப்பியும், உங்க மாமா மேளதாளத்துடன் பிளாஸ்கில் கொண்டு வந்த காப்பியும் ஒண்ணுதானேடா! நீங்க இரண்டு பேரும் ஒன்றாய்ப் போன பிறகு நான் மட்டும் தனியாக இருப்பானேன்னு நான் உங்களுடன் சேர்ந்து கொண்டேன். ஜானவாசக் கார் விஷயம் ஒரு சிறு பரீட்சை! அதிலும் நீங்கள் பாஸ்!"

கணபதி நிறுத்தியதும் வண்டியில் சிரிப்பொலி அலைமோதியது!

வாசந்தி அர்த்தபுஷ்டியுடன் வாசுவை மற்றவர் கவனிக்காதபோது பார்த்தாள். அவனும் மற்றவர்களுக்குத் தெரியாமல் அவள் உள்ளங்கையில் வெடுக்கென்று கிள்ளினான்.

அதில்தான் எத்தனை இன்பம்!

# சிங்கப்பூர் சென்ற மகன்

கழுகுமலை பலசரக்குக் கடை சங்கரன் செட்டியார் வீட்டுக்குக் காவேரிப் பாட்டி வந்து சேர்ந்தபோது மாலை ஐந்து மணிக்கு மேலேயே இருக்கும். அப்போது வீட்டில் செட்டியார் இல்லை. அவருடைய மனைவியும் மகளும்தான் இருந்தார்கள். இருவருமே பாட்டியைப் பார்த்ததும் ஆவலோ வெறுப்போ யின்றி, "வா, பாட்டி, எங்கிருந்து வர்ரே?" என்று வரவேற்றார்கள்.

"ஊரிலே இருந்துதான் வர்ரேன், மீனாச்சி!" என்று கூறிவிட்டு, 'முருகா....' என்று சொல்லிக்கொண்டே ஒரு மூலையில் உட்கார்ந்தாள் பாட்டி. உட்கார்ந்ததுமே, "நாளைக்கு மாசிமகமாச்சே, முருகனைப் போய்ச் சேவிச்சிட்டு வருவோம்னு வந்தேன். அடுத்த மகத்துக்கு இருக்கப் போகிறேனோ, என்னவோ?" என்றும் சொன்னாள்.

அவளுக்குப் பயம், "ஏன் வருஷம் தவறாமல் எங்கள் வீட்டுக்கு வருகிறாய்? உன்னை யார் இங்கே வெற்றிலை பாக்கு வைத்து அழைக்கிறார்கள்?" என்று கேட்டு விடுவார்களோ என்று. அதனால், தான் வந்த காரணத்தை முன்கூட்டியே அவசரம் அவசரமாகச் சொல்லி முடித்தாள்.

செட்டியாரின் மனைவி தனக்குள் சிரித்துக் கொண்டாள். 'வரும்போதெல்லாம் அசைக்க முடியாத ஒரு காரணத்தையும் கண்டுபிடித்துக்கொண்டு வருகிறாளே!' என்பதை நினைக்கும்போது மீனாக்ஷியம்மாளுக்குச் சிரிப்புத் தான் வந்தது.

அப்போது வட பக்கத்துச் சுவரில் சாய்ந்து கொண்டு நிறை மாத கர்ப்பிணியாகக் கோமதி உட்கார்ந்திருந்தது, பாட்டியின் கவனத்தைக் கவர்ந்தது.

"கோமதி எப்போ வந்தா, மீனாச்சி!" என்று காவேரிப் பாட்டி கேட்டாள்.

"ஏழாம் மாசத்திலேயே கூட்டியாந்திட்டோம், பாட்டி. இதுதான் மாசம்" என்றாள் மீனாக்ஷியம்மாள்.

"வாம்மா கோமதி, வா, வந்து இப்படிப் பக்கத்திலே உட்காரு" என்று அவளை அழைத்து வைத்துக்கொண்டு, அவளுடைய கணவன் வீட்டு க்ஷேமலாபங்களை அக்கறையோடு பாட்டி விசாரிக்கலானாள். கோமதியைக் கர்ப்பிணியாகப் பார்த்ததில் பாட்டிக்கு ஒரே சந்தோஷம். அவளுடைய பிள்ளைப் பேறு சமயத்தில் ஒத்தாசையாக இருக்கும் சாக்கில் கழுகுமலையில் இரண்டு மாதங்களாவது தங்கியிருக்கலாம் என்று பாட்டிக்கு நம்பிக்கை பிறந்தது.

சிறிது நேரம் சென்றதும், ஏதோ ஒரு நல்ல விஷயம் ஞாபகத்துக்கு வந்துவிட்டதைப் போல் ஒரே சந்தோஷ முழக்கத்துடன், "வைகாசி மாதத்திலே வர்றதாகச் சொல்லி ஆறுமுகம் காயிதம் போட்டிருக்கிறான், மீனாச்சி. முந்தாநாள்தான் காயிதம் வந்தது!" என்று காவேரிப் பாட்டி சொன்னாள்.

மீனாக்ஷியம்மாள் இந்தச் செய்தியைக் கேட்டதும் ஆவலோடு "என்ன, ஏது" என்று விசாரிப்பாளென்று பாட்டி எதிர்பார்த்தாள். ஆனால் அந்த அம்மாளோ அதைக் காதில் வாங்காதவள் போல் ஒரு பக்கம் பராக்குப் பார்த்துக்கொண்டு உட்கார்ந்திருந்தாள்.

பாட்டி தன் முழக்கத்தை நிறுத்தவில்லை: "அம்மட்டுக்கும் நல்ல சமயத்திலேதான் வர்றான். வைகாசிக்கு, கோமதியோட பிள்ளை மூணு வயசுக் குழந்தையா இருப்பான் ....ஆமா, முருகன் கிருபையிலே பேரன்தான் பிறக்கப் போறான். என் வாக்குப் பலிக்கிறதா இல்லையா பாரு மீனாச்சி! பேரனுக்கு ரெண்டு பவுனிலே அரைஞாண் கொடி செஞ்சிக்கிட்டு வாடான்னு ஆறுமுகத்துக்குக் காகிதம் போடப் போறேன்."

அப்பொழுதும் மீனாக்ஷியம்மாள் எதுவும் பேசவில்லை. மறுமுறையும் உள்ளுக்குள் சிரித்துக் கொள்ளத்தான் செய்தாள். ஆறுமுகத்தையும் தங்க அரைஞாணையும் பற்றி எதுவுமே பிரஸ்தாபிக்காமல், "பாட்டி வாக்குப் பலிக்கட்டும்! பேரன் பிறக்கட்டும்!" என்று மட்டும் சொன்னாள்.

தன் மகனுடைய வருகைக்கு இன்னும் அழுத்தம் கொடுத்து, மீனாக்ஷியம்மாளின் ஆவலை எப்படியாவது தூண்டிவிடவேண்டும் என்ற முயற்சியில் முழு மூச்சாக இறங்கி விட்டாள் பாட்டி.

"போன வருசமே வந்திருப்பான். அப்போ கடை முதலாளியும் அனுப்பி வைக்கிறதாகத் தான் சொன்னாராம். ஆனா, கப்பலுக்குப் பொறப்படுகிறபோது, 'அவசர வேலை இருக்கு, ஆறுமுகம், நீ இல்லாமல் இங்கே என்ன காரியம் நடக்கும்? இருந்து, அடுத்த வருசம் ஊருக்குப் போகலாம்' என்று கூறிப் பயணத்தை நிறுத்திப்போட்டாராம். கடைசி கடைசின்னு பத்து வருஷங்களுக்குப் பிறகு இந்த வைகாசியிலே பிரயாணம் வச்சிருக்கான்....ஹூம், இந்தப் பத்து வருஷங்களும் நான் பட்டபாடு எனக்குத் தெரியும்; அந்த முருகனுக்குத் தெரியும்."

கண்களில் கசிந்திருந்த கண்ணீரைப் பாட்டி விரலால் துடைத்துச் சுண்டினாள்.

சிறிது நேரம் யாரும் எதுவும் பேசாமல் மௌனமாக இருந்தார்கள். பிறகு மீனாக்ஷியம்மாள் எழுந்து, "இரு பாட்டி, கோமதி கிட்டே பேசிக்கிட்டு இரு. விளக்கேத்திட்டு வர்றேன்" என்று சொல்லிவிட்டு அப்பால் நகர்ந்து போனாள்.

இரவு எட்டு மணிக்கெல்லாம் சங்கரன் செட்டியார், கடையைச் சாத்திக் கொண்டு வீட்டுக்கு வந்து சேர்ந்தார். காவேரிப் பாட்டி வந்திருப்பதைப் பார்த்து, "வா, பாட்டி, சௌக்கியமா?" என்று கேட்டார்.

பாட்டி அவரிடத்திலும் தன் வாய்ப் பாட்டை ஒப்பித்தாள்: '....கழுகுமலைக்கு வந்ததற்குக் காரணம் மாசிமகத் திருநாள் தான்....ஆறுமுகம் வைகாசியில் சிங்கப்பூரிலிருந்து வரப்போகிறான்..பேரனுக்கு இரண்டு பவுனில் அரைஞாண் கொடி....முந்தாநாள் கடிதம் வந்தது....' என்று பாட்டி சொல்

ஷிக் கொண்டே போகும்போது, செட்டியார் குறுக்கிட்டு, "காயிதம் வேறே போட்டிருக்கிறானா?" என்று கேட்டார்.

"ஆமா சங்கரா, மூந்தாநாள்தான் வந்தது" என்று அழுத்தம் திருத்தமாகப் பாட்டி சொன்னாள்.

"அப்படியா!" என்று ஒரு மாதிரியாகச் சொல்லிவிட்டு, சங்கரன் செட்டியார் கிணற்றடிக்குப் போய்விட்டார்.

கிழவிக்கு மனக்கஷ்டம் தாங்கவே முடியவில்லை. இரவு எல்லோரும் சாப்பிட்டுப் படுத்துத் தூங்கிய பிறகும் காவேரிப் பாட்டிக்குத் தூக்கம் வரவில்லை. பத்து வருஷங்களுக்குப் பிறகு ஏராளமான சம்பாத்தியத்துடன் மகன் திரும்பி வருகிறான் என்றும், செட்டியாருடைய பேரனுக்கு இரண்டு பவுன் அரைஞாண் கொடியைக் கொண்டு வந்து கொடுக்கப்போகிறான் என்றும் சொல்லியும்கூட, அவர்கள் அதை வேண்டுமென்றே காதில் வாங்கிக் கொள்ளாமல் அப்பால் நழுவுவதை நினைக்கும்போது அவளுக்கு அவமானமாகவும் இருந்தது; பயமாகவும் இருந்தது.

ஆறுமுகம் வருவான் என்று அவர்கள் நம்பவில்லை என்பதை அவள் உணர்ந்து கொண்டாள். 'நம்பாததற்குக் காரணம்? அவன் தாயைத் தேடிவரக் கூடிய சத்புத்திரனல்ல என்று நினைத்தார்களா! இல்லையென்றால்...?'-கிழவிக்குப் பயத்தினால் நெஞ்சு 'திக் திக்' என்று அடித்துக் கொண்டது.

"முருகா! இந்த வயசிலே நான் இப்படி ஊர் ஊராக அலைஞ்சி திரிகிறதுகூட உனக்குப் பொறுக்கவில்லையா? இந்தப் பொழைப்பிலும் மண் விழணுமா? நான் யாருக்கு என்ன கெடுதல் பண்ணினேன்?' என்று கடவுளிடம் தன் நிலையைச் சொல்லி அழுதாள். 'மாசி மகம் திருநாள் முடிந்ததுமே கழுகுமலையை விட்டுப் போய்விடலாமா? இல்லையென்றால் துணிந்து கோமதியின் பிரசவம் வரைக்கும் இருந்துவிட்டுப் போவதா?' இந்த இரண்டில் எதைச் செய்வது என்பதைத் தீர்மானிப்பதற்கு வெகு நேரம் வரையில் மனசோடு போராடினாள். கடைசியில், ஒரு முடிவுக்கும் வரமுடியாமலே எப்படியோ தூங்கிவிட்டாள்.

காவேரிப் பாட்டி அவள் சொன்னது போல் ஊர் ஊராய் அலைந்து ஜீவனம் பண்ண ஆரம்பித்துப் பத்து வருஷங்கள் ஆகிவிட்டன. பத்து வருஷங்களுக்கு முன்பு அவளுடைய ஏகபுத்திரன் ஆறுமுகம் திடீரென்று ஒருநாள் காணாமல் போய்விட்டான். அவன் அப்படி சொல்லாமல் கொள்ளாமல் ஊரை விட்டு ஓடியதற்கு அவனுடைய சோம்பேறித்தனத்தைத் தவிர வேறு காரணம் எதுவும் கிடையாது. பலகாரம் விற்று அன்றாடம் அரையும் காலும் சம்பாதித்துக்கொண்டிருந்த தகப்பனார் காலமாகிவிட்டார். தாயாருக்குச் சுயமாகப் பலகாரம் போட்டு விற்கும் திறமை கிடையாது. அவனுக்கோ வயது இருபத்திரண்டு ஆகியும் எந்த வேலையைச் செய்வதற்கும் சாமர்த்தியம் இல்லை; மனமும் இல்லை. சோம்பேறியாகவே இருந்து பழகிவிட்டான். போதும் போதாததற்குக் கெட்ட சகவாசங்கள் வேறு. இந்த நிலையில் தான் அவன் ஊரைவிட்டுப் போய்விட்டான். எங்கே போனான், என்ன ஆனான் என்று யாருக்குமே தெரியாது. காவேரிப் பாட்டி பிள்ளைப் பாசத்தினால் அந்தச் சோம்பேறி



மகனையும் தேடிக்கொண்டு, உற்றார் உறவினர் வாழும் ஊர்களுக்கெல்லாம் ஒரு முறை போய் விட்டு ஏமாற்றத்துடன் திரும்பி வந்தாள்.

வருஷம் ஒன்றாயிற்று; இரண்டாயிற்று. அதுவரையிலும் காவேரிப் பாட்டி மகனை நினைத்துக் கவலைப்பட்டுக் கொண்டிருந்தது போய், இப்பொழுது தன்னை நினைத்தே கவலைப்பட வேண்டியதாகி விட்டது. ஐம்பத்தைந்து வயதுக்கு மேல் கைமுதல் எதுவுமில்லாமல் தனி வாழ்க்கை வாழ்வது எப்படி? கிழவிக்கு ஒன்றுமே புரியவில்லை. இந்தச் சமயத்தில் பத்துப் பன்னிரண்டு மைல் தூரத்திலுள்ள கடம்பூரில் தன் உறவினர் ஒருவர் வீட்டுக் கல்யாணத்துக்குப் போயிருந்தாள், பாட்டி. போன இடத்தில், எதிர்பாராதவிதமாக ஆறுமுகத்தைப் பற்றிய செய்தி தெரிய வந்தது. சிங்கப்பூரிலிருந்து சுமார் ஒரு மாதத்துக்கு முன் திரும்பி வந்திருந்த அல்லூர் க்ஷவரத் தொழிலாளி சுப்பையா, காவேரிப் பாட்டியின் மகன் ஆறுமுகத்தைப் பற்றி ஒரு சமயம் அந்தக் கல்யாண வீட்டுக்காரரிடம் பிரஸ்தாபித்திருக்கிறான். சிங்கப்பூருக்கு வந்தவர்களில் நல்லவிதமாகச் சம்பாதித்துப் பணத்தோடு ஊர் திரும்பியவர்களும் உண்டு, ஒன்றும் சம்பாதிக்காமலே குடித்து விட்டுப் பாழாய்ப் போகிறவர்களும் உண்டு என்று சொல்லி, அப்படிச் சீரழியும் ஆசாமிகளில் செட்டிகுறிச்சி கிராமத்தைச் சேர்ந்த ஆறுமுகம் என்பவரும் ஒருவர் என்று அவன் ஆறுமுகத்தை உதாரணம் காட்டியிருக்கிறான். உடனே சுப்பையாவிடம், ஆறுமுகத்தைப் பற்றித் தீர விசாரித்துத் தெரிந்துகொண்ட கல்யாண வீட்டுக்காரர், அதை ஞாபகம் வைத்திருந்து, பாட்டி வந்ததும் அவளிடம் விஷயத்தைத் தெரிவித்தார். அந்த நிமிஷமே சுப்பையாவைத் தேடிப் போனாள் பாட்டி. மகனைப்பற்றி விசாரித்தாள். கடல்தாண்டிப் போயும் மகன் திருந்தாததற்காக ஒரு மூச்சு அழுதாள். அப்புறம், "சுப்பையா! நீ எனக்குப் பெத்த பிள்ளை மாதிரி. நீ போய் அவனுக்குப் புத்தி சொல்லு. நாலு பேரைப் போலச் சம்பாதிச்சு நல்லபடியா ஊர் வந்து சேர ஒரு வழி பண்ணிக்குடு. உனக்குக் கோடி புண்ணியம். உன் புள்ளை குட்டி நல்லா இருக்கும்" என்று கெஞ்சினாள். சிங்கப்பூருக்குப் போய்த் தனக்கு மறக்காமல் கடிதம் எழுத வேண்டும் என்றும் கேட்டுக் கொண்டாள். தன்னால் ஆனதைச் செய்வதாகச் சுப்பையா வாக்குக் கொடுத்த பின்பு, பாட்டி கல்யாண வீட்டுக்குத் திரும்பினாள்.

கல்யாணம் முடிந்ததும் சொந்த ஊருக்கு வந்து சேர்ந்த பாட்டி, வெகு சீக்கிரத்திலேயே தன் மீதி வாழ்நாளையும் தள்ளுவது எப்படிஎன்பதைப்பற்றி யோசிக்க ஆரம்பித்தாள்.

நாள் கணக்கில் தீவிரமாக ஆலோசித்த பிறகு ஒரு முடிவுக்கு வந்தாள்.

சுமார் இருபது மைல் வட்டாரத்துக்குள் இருக்கும் ஏழெட்டு ஊர்களில் அவளுக்குப் பந்துக்கள் இருந்தார்கள். யாருடைய வீட்டிலாவது போய் ஏதாவது வேலை செய்து பிழைக்கலாம் என்று தோன்றியது. அதன் பிரகாரம் முதலில் ஒரு கிராமத்துக்குப் போனாள். போய் இரண்டு மூன்று நாட்கள் இருந்த பிறகுதான் தன் திட்டம் நிறைவேறக் கூடிய திட்டமல்ல என்று தெரிந்தது. பந்துக்களில் சாப்பாடு போட்டு வேலைக்காரி வைத்துக் கொள்ளக் கூடிய சக்தி படைத்த குடும்பங்கள் இரண்டொன்றுதான் இருந்தன. அவர்களுக்கும் அந்தச் சக்திதான் இருந்ததே ஒழிய, அவசியம் எதுவும் இல்லை. வேலைக்காரி இல்லாமலே அவர்கள் சமாளித்துக் கொள்ளக் கூடியவர்களாக இருந்தார்கள். மற்றக் குடும்பத்தினர் பாட்டியைப்போலவே ஏழைகள். அதனால் நிரந்தரமாக எந்தக் குடும்பத்துடனும் அவளால் தங்க முடியவில்லை. இதை உத்தேசித்து ஒவ்வொரு ஊரிலும் ஒரு மாதமோ இரண்டு மாதங்களோ இருப்பது, வீட்டு வேலை செய்ய முடிந்த இடங்களில் வீட்டு வேலை செய்வது, கூலி வேலை செய்யும் குடும்பங்களாக இருந்தால் அவர்களுடன் சேர்ந்து தானும் கூலி வேலை செய்வது என்று முடிவு செய்தாள். அன்றிலிருந்து பாட்டியின் முடிவில்லாத யாத்திரை ஆரம்பமாகி விட்டது.

ஊருக்கு ஒரு மாதம் இரண்டு மாதங்கள்; அப்புறம் அடுத்த ஊர். இப்படியே அந்த இருபது மைல் வட்டாரத்துக்குள் சுற்றிக் கொண்டிருந்தாள் காவேரிப் பாட்டி. போகிற ஊர்களில் தன்னைப் பஞ்சம் பிழைக்க வந்த அனாதையாக நினைத்து இழிவாக நடத்தக் கூடாது என்பதற்காகவும், தன் கௌரவத்தைக் காப்பாற்றிக் கொள்ளுவதற்காகவும் சிங்கப்பூருக்குச் சென்ற மகனைப் பற்றிப் பாட்டி பெருமையாகச் சொல்லிக் கொண்டு வந்தாள்: கடல் கடந்து சென்ற ஆறுமுகம், சிங்கப்பூரில் ஒரு பெரிய பணக்காரரின் கடையில் கணக்குப் பிள்ளையாக இருக்கிறான் என்றும், கொள்ளை கொள்ளையாகச் சம்பாதிக்கிறான் என்றும், அவன் சீக்கிரத்தில் வந்து விடுவான் என்றும் சொன்னாள். சில ஊர்களில் இந்தக் கட்டுக்கதையை நம்பவும் செய்தார்கள். சிறிது காலம் சென்றபின், இக் கட்டுக்கதையைத் தன் சுய கௌரவத்துக்காக மட்டுமல்லாமல், ஒரு தந்திரமாகவும் சொல்லத் தொடங்கி விட்டாள். வசதியாக வாழும் பந்துக்களின் வீடுகளிலுள்ள சிறுவர் சிறுமியரிடம், 'உங்கள் மாமன் சிங்கப்பூரிலிருந்து வரும்போது, உங்களுக்கு நகை செய்து கொண்டு வருவான், பட்டு வாங்கிக்கொண்டு வருவான்' என்றெல்லாம் சொல்லுவாள். ஏழை உறவினரின் குழந்தைகளிடம், 'பாவம், இந்த வயசில் இப்படிக் கஷ்டப்படும்படி ஆகியிருக்கிறது, உங்கள் தலை எழுத்து. உம், ஏதோ இன்னும் கொஞ்ச காலம் பல்லைக் கடித்துக் கொண்டு இருங்கள். பயல் சீக்கிரத்திலேயே சிங்கப்பூரிலிருந்து வந்துவிடுவான். அவன் வந்தால் உங்களை இப்படிக் கண் கலங்க விடமாட்டான்' என்று நம்பிக்கை ஊட்டுவாள். இப்படி ஆசை வார்த்தை சொல்லியே அவள் ஒவ்வோர் ஊரிலும் முகாம் போட்டு வந்தாள்.

இந்தப் பத்து வருஷ காலத்திலும் ஓர் ஊரில் கூட அவளை யாரும் வெறுத்து விரட்டவில்லை. ஆறுமுகத்தின் சம்பாத்தியத்தில் தங்களுக்கும் பங்கு கிடைக்கும் என்று நம்பிக்கை வைக்காமலே அவர்கள் பாட்டிக்கு நிழல் கொடுத்தார்கள். ஆரம்ப காலத்தில்

இரண்டொருவர், தங்கள் தரித்திரத்தின் காரணமாக அம்மாதிரி ஆசைப்பட்டிருந்தாலும், அவளுக்குப் புகலிடம் கொடுத்து வந்ததற்கு அது காரணமல்ல. அவளால் யாருக்கும் எவ்வித நஷ்டமும் ஏற்படாமல் இருந்ததுதான் உண்மையான காரணம். பாட்டி தன் வயிற்றுப்பாட்டுக்குச் செய்ய வேண்டிய வேலையை விட அதிகமாகவே ஒவ்வொரு வீட்டிலும் செய்து வந்தாள். நோய் நொடி, பிரசவம் போன்ற பல கஷ்டமான சமயங்களிலும் அவள் உதவியாக இருந்தாள். அத்துடன், அவளுடைய உதவியால் சில கல்யாணங்களும்கூட நடந்தேறின. குறிப்பிட்ட பெண்ணுக்கு எந்தெந்த ஊர்களில் நல்ல மாப்பிள்ளைகள் கிடைப்பார்கள் என்றும் அதே போல் குறிப்பிட்ட பையனுக்கு எங்கெங்கே பெண் கொடுப்பார்கள் என்றும் அவள் சொன்ன தகவலை ஆதாரமாக வைத்துக் கொண்டு, சிலர் காரியத்தில் இறங்கி வெற்றியும் கண்டிருக்கிறார்கள். இப்படி அபூர்வமான பல கைங்கரியங்களைச் செய்து வந்ததால் அவள் வருகையை யாரும் வெறுக்கவில்லை. அவளை ஒரு சுமையாகவும் நினைக்கவில்லை. வருஷத்துக்கு ஒரு தடவை தவறாமல் வந்து தங்கினாலும் அன்போடு இடம் கொடுத்து மரியாதையாக நடத்தினார்கள். ஆனால் பாட்டியோ தனக்குக் கிடைத்த அன்புக்கும் மரியாதைக்கும் தன்னையும் தன் உழைப்பையும் காரணமாக நினைக்காமல், தன் மகன் பெயரைச் சொல்லி ஆசை காட்டியதையே காரணமாக நினைத்து விட்டாள். அதனால் சதா காலமும் மகனுடைய கதையை ஒவ்வொரு ஊரிலும் மறவாமல் சொல்லிக் கொண்டு வந்தாள்.

பாட்டியின் யாத்திரை மார்க்கத்தில் உள்ள ஊர்களில் கடம்பூரும் ஒன்று. க்ஷவரத் தொழிலாளி சுப்பையாவின் வீட்டுக்குச் சென்று அவனுடைய தகப்பனாரிடம், "சுப்பையா காகிதம் எழுதியிருக்கானா? ஆறுமுகத்தைப் பத்தி எழுதியிருக்கானா?" என்று விசாரிப்பதற்காகவே அவள் கடம்பூருக்குப் போவாள். பாட்டி மிகவும் வைதிகமானவளாதலால் வேறு எங்கும் சாப்பிடமாட்டாள் என்று சுப்பையாவின் தகப்பனார் ஒரு நாலணாவை அவள் கையில் கொடுப்பார். போனதற்கு இதுதான் மிச்சமாக இருக்குமே ஒழிய, மகனைப் பற்றிய தகவல் கிடைக்காது. கடைசியில் மூன்று வருஷங்களுக்கு முன் பாட்டியின் சொந்த ஊருக்கு அவளுடைய பெயருக்கே சுப்பையாவிடமிருந்து ஒரு கடிதம் வந்தது. ஆளில்லாத வீட்டில் தபால்காரரால் எறியப்பட்டுக் கிடந்த அந்தக் கடிதத்தை ஒரு மாதம் கழித்து ஊருக்கு வந்தபோதுதான் பாட்டி பார்த்தாள். அதை எடுத்துக் கொண்டு அந்த ஊர் வாத்தியார் வீட்டுக்கு ஓடினாள். வாத்தியார் கடிதத்தை வாங்கி, "அன்புள்ள காவேரிப் பெரியம்மாளுக்கு, சுப்பையா வணக்கத்துடன் எழுதிக் கொண்டது..." என்று வாசிக்கத் தொடங்கியதும், "சுப்பையாவா? சுப்பையா காயிதமா?" என்று சொல்லிக் கொண்டே பாட்டி சுற்றுமுற்றும் ஒரு தடவை பார்த்தாள். தன் மகனைப் பற்றிச் சுப்பையா ஏதாவது மோசமான தகவலை எழுதியிருக்கக் கூடும் என்றும், அதை யாராவது கேட்டுக் கொண்டு விடுவார்களோ என்றும் அவள் பயந்தாள். வாத்தியாரைத் தவிர வீட்டில் வேறு யாருமே இல்லை என்பதைக் கண்டு பாட்டி சந்தோஷப்பட்டுக் கொண்டாள். ஆனால் சுவருக்கு அந்தப்புறத்தில் வாத்தியாரின் மனைவி இருப்பாளே என்பதை அவள் அப்போது நினைக்கவில்லை; நினைக்கத் தோன்றவில்லை.

வாத்தியார் கடிதம் முழுவதையும் வாசித்துக் காட்டினார். ஆறுமுகத்தைப் பற்றி மோசமான தகவல்தான் அந்தக் கடிதத்தில் எழுதப்பட்டிருந்தது. அதைக் கேட்டுக் கிழவி அழுததும், புரண்டதும், அலறித் துடித்ததும்.....அது பழைய கதை.

★

சுழுகுமலையில் மாசி மகத் திருநாளுக்கு வழக்கம்போல் பல்லாயிரக் கணக்கான மக்கள் பல ஊர்களிலிருந்தும் வந்திருந்தார்கள். ஊரே கொள்ளாத ஜனக்கூட்டம். சங்கரன் செட்டியாருக்கும் காவேரிப் பாட்டிக்கும் உறவான ஒரு குடும்பமும் விழாப் பார்ப்பதற்காகக் குழந்தை குட்டிகளோடு அன்று எட்டயபுரத்திலிருந்து வந்திருந்தது.

அது ஓர் ஏழைக் குடும்பம். செட்டியார் வீட்டின் சார்பிலும், தன் சார்பிலும் பாட்டியே அவர்களை எதிர் கொண்டழைத்தாள். அந்தக் குழந்தை குட்டிகளை எடுத்துக் 'கண்ணே, ராசா' என்றெல்லாம் கொஞ்சினாள். குழந்தைகளுக்குப் பாட்டி நன்கு பரிச்சயமானவள். முந்திய வருஷம் அவர்கள் ஊருக்கும் பாட்டி சென்று ஒரு மாதம் தங்கிவிட்டு வந்திருக்கிறாள்.

சாயங்காலமானதும் சங்கரன் செட்டியாரின் மனைவியும், எட்டயபுரத்துப் பெண்ணும், அவள் குழந்தைகளும், பாட்டியும் கலகலப்பாகப் பேசிக் கொண்டே முருகன் கோவிலுக்குப் பூஜாதிரவியங்களுடன் சென்றார்கள். பிராகாரம் சுற்றி முடிந்ததும், பாட்டி பயபக்தியோடு தன் முந்தியில் முடிந்திருந்த சில்லறைக் காசுகளில் இரண்டணாவை எடுத்தாள். கர்ப்பக் கிருஹத்தைப் பார்த்துத் திரும்பி, இரண்டு கைகளையும் கூப்பிக்கொண்டு, "முருகா! என் மகன் சௌக்கியமா ஊர் வந்து சேரணும்! வைகாசி விசாகத்துக்குத் தாயும் பிள்ளையுமா நாங்கள் வந்து உன்னைச் சேவிக்கணும்" என்று சொன்னாள். கூப்பிய கைகளைத் தலைக்குமேல் தூக்கினாள். அந்தச் சமயத்தில் அவளுடைய உதடுகள் பேச முடியாமல் துடித்தன. கண்கள் நனைந்தன. உண்டியலில் காசைப் போட்டுவிட்டுப் புடவை முந்தானையால் கண்களைத் துடைத்துக் கொண்டாள். அப்புறம் எல்லோரும் வீடு திரும்பினார்கள். கலகலப்பாகப் பேசிக் கொண்டே கோவிலுக்கு வந்தவர்கள், திரும்பிச் செல்லும்போது சொல்லிவைத்தாற்போல் பாட்டியிடம் எதுவுமே பேசவில்லை. உண்டியலில் காசு போடும்போது, ஆறுமுகத்தைப் பற்றி அவள் பிரஸ்தாபித்ததுதான் காரணமாகப் போய்விட்டது. பாட்டியை மறந்து

விட்டு, அவர்கள் தங்களுக்குள்ளேயே எதை எதையோ பேசிக்கொண்டு சென்றார்கள்.

காவேரிப் பாட்டி பழையபடியும் மனக் கஷ்டத்துக்குள்ளானாள். 'அவன் பேரைச் சொன்னாலே இப்படி ஏன் ஒதுங்கிப் போகிறார்கள்?' என்று திகைத்தாள். தன் மனசுக்கு ஆறுதல் தேடும் முறையில், அந்த ஏழைக் குடும்பத்தின் ஆறு வயதுச் சிறுவன் ஒருவனைத் தன் கையில் பிடித்துக் கொண்டு, "கோயிலுக்கு ஒவ்வொரு குழந்தையும் எப்படி எப்படி யெல்லாம் நகை நட்டும் போட்டுக்கிட்டு வந்திருக்கு! பாவம், உனக்கு நல்ல நாளும் பொழுதுமா ஒரு நல்ல சட்டை கூடக் கொடுத்து வைக்கல்லேயேடா, ராசா! அத்தனை பேருக்கும் நடுவிலே உன்னை இந்தக் கோலத்திலே பார்க்க எனக்குச் சகிக்கல்லேடா, கண்ணு!" என்று எல்லோருக்கும் கேட்கும்படியாகச் சொன்னாள். இந்த வார்த்தைகள் காதில் விழுந்ததும், அந்தப் பையனுடைய தாயார் சினந்த பார்வையோடு பாட்டியைத் திரும்பிப் பார்த்தாள்.

பாட்டி இன்னும் கொஞ்சம் உரத்த குரலில், "அவன் இருந்திருந்தால் உங்களை இப்படிக் கோயிலுக்குப் போக விட்டிருப்பானா? உங்களுக்குக் கெண்டைத் துண்டு வாங்கிக்கட்டி..." என்று சொல்லிக் கொண்டிருந்தாள்.

"ஏ, கிழவி! மூடு வாயை!" என்று சீறினாள் சிறுவனுடைய தாய். எல்லோரும் திடுக்கிட்டு நின்று விட்டார்கள்.

"என்ன கிழவி, ஒரேயடியா நீட்டி முழக்கறே! வாய்க்கொழுப்பா உனக்கு?"—எட்டயபுரத்துப் பெண் நெருப்பையே கக்கினாள்.

கிழவி பயந்து நடுங்கிக் கொண்டே, "நான் என்ன சொன்னேன்? குத்தமா ஒண்ணும் சொல்லலியே!" என்றாள்.

"குத்தமா ஒண்ணும் சொல்லலியா? நாங்க என்னமோ கஞ்சிக்குத் திண்டாடற மாதிரியும், நீயும் உன் மகனும் எங்களுக்குப் படியளக்கிறவுக மாதிரியுமில்லே பேசறே! உன் மகன் மூணு வருஷங்களுக்கு முந்தியே செத்து, அவனைப் பொதைச்ச இடத்திலே புல்லும் முளைச்சுப் போச்சு. நீ என்னடான்னு செத்தவன் பேரைச் சொல்லி எங்களை ஏமாத்திப் பிழைக்கிறதோட நில்லாம, எங்களுக்குமில்லே பிச்சைக்காரப் பட்டம் கட்டறே?" என்று எட்டயபுரப் பெண் சீறினாள்.

"முருகா! முருகா!" என்று தெருவே எதிரொலிக்கும்படி கத்தித் தலையில் அடித்துக் கொண்டாள் கிழவி.

"அநியாயமாச் சொல்லாதே! நாக்கு அழுகிப் போகும்! எனக்கு இருக்கிறது ஒத்தைக்கு ஒரு பிள்ளை..."

நடுத் தெருவில், திருவிழாக் கூட்டத்துக்கு மத்தியில், கிழவி தலையில் அடித்துக் கொண்டு கூப்பாடு போடுவதைக் கண்ட மீனாக்ஷியம்மாளுக்கு என்ன செய்வதென்றே தெரியவில்லை. "பாட்டி, பேசாமலிரு. சத்தம் போடாமல் வா" என்று அவள் கையை இழுத்தாள்.

ஆனால் கிழவி தன் கூப்பாட்டை நிறுத்தவில்லை; அந்த இடத்தை விட்டு நகரவுமில்லை.

தெருவில் நிற்பவர்களோ 'என்ன ஏது?' என்று கேட்டு நெருங்கினர்.

"ஐயையோ! மானம் போகுதே! நடுத் தெருவில் கிழவி இந்த ஆட்டம் ஆடுகிறாளே!" என்று மீனாக்ஷியம்மாள் கைவிரல்களைச் சொடுக்கினாள். இரண்டு காதுகளையும் பொத்திக் கொண்டு கிழவியையும் மற்றவர்களையும் அப்படி அப்படியே விட்டு விட்டு, அதி வேகமாகத் தன் வீட்டுக்கு ஓடி வந்து விட்டாள்.

"இந்தக் கிழவியை இனி வீட்டுக்குள் விடுகிறதே தப்பு, கோமதி! அவளுக்குப் புத்தி சுவாதீனமே இல்லே. நடுத் தெருவிலே வெறி பிடிச்சவ மாதிரி கத்தறா" என்று மீனாக்ஷியம்மாள் தன் மகளிடம் கதையைச் சொல்லத் தொடங்கியதும், காவேரிப் பாட்டியும், எட்டயபுரத்துப் பெண்ணும், குழந்தைகளும் வந்து விட்டார்கள். பாட்டி அழுகையும் கூக்குரலுமாகவே வந்தாள்.

தெருவில் நடந்த நிகழ்ச்சியைக் கேட்ட செட்டியார் திடுக்கிட்டு, "அட, பாவமே! கிழவியிடத்திலே அந்தச் சமாசாரத்தைப் போய் ஏன் சொன்னீர்கள்? இந்த வயசு காலத்திலே..." என்று சொல்லிக் கொண்டிருக்கும் போதே எட்டயபுரத்துப் பெண் தணியாத ஆத்திரத்துடன், "இந்தக் கிழவி என்னையும் என் பிள்ளைகளையும் நடுத் தெருவிலே இவ்வளவு கேவலமாய்ப் பேசலாமா, அண்ணாச்சி? ஊருக்கு வர்ற போதுதான் இப்படி அவமானமா பேசறாள்னு பார்த்தால், நாங்கள் வந்த இடத்திலேயுமா பேசுகிறது?" என்றாள்.

"என் பிள்ளை சாகல்லே, சங்கரா! உசிரோட இருக்கிறான். முருகன் பேரிலே சத்தியமாச் சொல்றேன், 'அவன் உசிரோடதான் இருக்கிறான். அநியாயமாய்ப் பேசற இவள் விளங்க மாட்டாள்" என்றாள் பாட்டி ஆவேசத்துடன்.

"சத்தியம் வேறயா பண்றே? சத்தியம் பண்ணிட்டா, மூணு வருசத்துக்கு முன்னாலே செத்தவன் உசிரோடே வந்துடுவான்னு நினைப்பா?" என்றாள் எட்டயபுரத்துப் பெண்.

"நீ சும்மா இரு" என்று அவள் வாயை அடக்கினார் அவள் கணவர்.

சங்கரன் செட்டியார் மிகவும் இரக்கமான குரலில், "எத்தனை நாளைக்குத்தான் மூடி வைக்க முடியும்? பாட்டி! நான் சொல்றதை நம்பு. உன் பிள்ளை சமாசாரம் எனக்கு அப்பவே தெரியும். எனக்கு மட்டுமில்லே, இன்னும் யார், யாருக்கெல்லாமோ தெரியும். வயசுக் காலத்திலே அதை உனக்குச் சொல்ல வேண்டாம்னுதான் எல்லோரும் இத்தனை நாளும் மூடி மறைச்சு வச்சிருந்தோம். உண்மையை எத்தனை நாளைக்கு மறைச்சி வச்சாலும், ஒரு சமயம் இல்லாட்டா ஒரு சமயம் வெளியாகாமல் போகாது. மனசை அடக்கிக்கோ" என்று ஆறுதல் அளிக்க முயன்றார்.

ஆனால் யார் சொன்னாலுமே பாட்டி அதை ஒப்புக் கொள்ளத் தயாராக இல்லை. தான் இதுவரையிலும் ஏமாற்றிப் பிழைத்ததாக நினைத்து விடுவார்களோ, மற்ற உறவினர்களுக்கும் விஷயம் எட்டித் தன்னைக் கேவலமாகப் பேசுவார்களோ, எங்கும் தலைகாட்ட முடியாதே என்ற பயமும் அதிர்ச்சியும் அவளுடைய புத்தியைப் பேதலிக்கச் செய்து விட்டன. உயிரைக் கொடுத்தாவது தனக்கு ஏற்பட்டுள்ள அவமானத்திலிருந்து மீள வேண்டும், மகன் உயிரோடு இருப்பதாக நிரூபித்துவிட வேண்டும் என்று துடித்தாள்.

முழுக்க முழுக்கச் சுவாதீனத்தை இழந்து, "சங்கரா! நீ கூடவா அப்படிச் சொல்றே! நான் சொல்றது நிசமா, பொய்யா என்கிறதை மூந்தா நாள் வந்த இந்தக் காகிதத்தைப் பார்த்தாவது தெரிஞ்சுக்கோ" என்று கூறித் தன் புடவையில் முடிந்திருந்த வெள்ளைக் காகிதத்தை எடுத்து எதிரே வீசினாள். வீசிய மாத்திரத்தில் கிழவி அப்படியே கீழே சரிந்தாள்.

செட்டியாருக்கோ அவள் விழுந்ததைக் கூடப் பொருட்படுத்தத் தோன்றவில்லை. நம்ப முடியாத ஆச்சரியத்துக்குள்ளான அவர், கசக்கியிருந்த கடிதத்தைத்தான் அவசரமாகப் பிரித்து வாசித்தார். மூந்தாநாள் ஆறுமுகத்திடமிருந்து வந்ததாகக்கிழவிசொன்ன அந்தக் கடிதத்தில், மூன்று வருஷங்களுக்கு முந்திய தேதியிடப்பட்டு, பின் வருமாறு எழுதியிருந்தது.

"அன்புள்ள காவேரி பெரியம்மாளுக்கு, சுப்பையா வணக்கமாய் எழுதிக் கொண்டது.

இப்பவும் உங்கள் மகன் சில நாட்களாய்ச் சீக்காய்க் கிடந்து நேத்து ராத்திரி சிவலோக பதவி அடைந்து விட்டார். அளவில்லாமல் குடித்து, கண்காணாத இடத்தில் இப்படிச் சாகும்படி அவர் தலைவிதி இருந்திருக்கிறது. எல்லாம் கடவுள் செயல். நாங்கள் ஐந்தாறு பேர்கள் சேர்ந்து எடுத்துக் கொண்டு போய் அடக்கம் பண்ணினோம். கடவுளை நினைச்சு மனசைத் தேற்றிக் கொள்ளுங்கள். தலை எழுத்தை நம்மால் மாற்ற முடியாது.

ரா சுப்பையா

சிங்கப்பூர்."

## விசாலாட்சி-விசுவநாத சுவாமி கோவில்கள் திருப்பணி

திருச்சி மாவட்டம் பழூரிலுள்ள விசாலாட்சி விசுவநாத சுவாமி ஆலயங்களுக்கு ஜீர்ணோத்தாரணம் செய்விக்க அவ்வூர் மக்கள் முன் வந்திருக்கின்றனர். இப் புண்ணிய கைங்கரியத்துக்குப் பொருளுதவி புரிய விரும்புவோர், பொக்கிஷதார், விசுவநாத சுவாமி கோவில் ஜீர்ணோத்தாரணக் கமிட்டி, இ. தா. பழூர், முத்தரசநல்லூர் P. O. திருச்சி ஜில்லா என்ற விலாசத்துக்கு அனுப்பி வைக்கலாம்.






# கோடையில் உங்களுக்கு சுகமான குளிர்ந்த காற்று

பட்டனை அழுத்திய மாத்திரத்திலேயே, கோடைக்காலத்தில் பெட்டர்ஸின் குளிர்ந்த காற்று உங்களைச் சூழ்ந்து இன்பத்தில் ஆழ்த்துகிறது. அதிகக் குளிர்ச்சியை அளிப்பதற்காகவே இதன் இயந்திரங்கள் நியூயார்க்கிலுள்ள பெட்டர்ஸ் கார்ப்பொரேஷனால் தயாரிக்கப்பட்டவை. உலகத்திலேயே மற்ற ஏர் கண்டிஷனர்களைவிட பெட்டர்ஸ் அதிகமாக விற்கப்படுவதே அது மிகவும் சிறந்ததென்பதை எடுத்துக் காட்டுகிறது.

- 5 வருஷ உத்திரவாதம்
- 1 மற்றும் 2 டன் மாடல்கள்
- மின்சார சக்திக்காகும் செலவு மிகக் குறைவு

## பெட்டர்ஸ்-லாய்ட்

### ஏர் கண்டிஷனர்கள்

பெட்டர்ஸ் லாய்ட் கார்ப். பிரை. லி., புதுடில்லி 1

டிஸ்டிரிப்யூட்டர்கள் (சென்னை):

ஜெனரல் ரேடியோ அண்ட் அப்ளையென்ஸஸ் லிமிடெட்

1-18, மவுண்ட் ரோடு, சென்னை-2. போன்: 86719

PLC-G-166

# அந்தப் பணம்

## ரா. வேங்கடசாமி

"கஷ்டப்பட்டுச் சம்பாதித்துக் கொண்டு வந்த பணம்-அது பறிபோயிருக்கிறது. 'விட்டு விடலாம்' என்று சொல்லுகிறீர்களே. இது நியாயமா? நமக்கென்ன அளவுக்கு அதிகமாக கொட்டியா கிடக்கிறது? நூறு ரூபாய்! மாதம் முழுதும் குடும்பத்தைப் பராமரிக்க அந்தத் தொகை போதுமே! போங்கள், தயவுசெய்து போலீஸ் ஸ்டேஷனுக்குப் போய் வீட்டுக்கு வரும் போது, உங்களை யாரோ மடக்கிப் பையிலிருந்த பணத்தை எடுத்துக் கொண்டு போய் விட்டார்கள் என்று வாக்கு மூலம் எழுதிக் கொடுத்து விட்டு வாருங்கள். போனால் போகட்டும் என்று இருக்க நான் தயாராக இல்லே."



"போலீஸ் விவகாரம் எதற்கென்று பார்க்கிறேன். பணம் தொலைந்து விட்டது. இல்லாதவன் எடுத்திருப்பான் என்று அத்துடன் விட்டு விடலாமே!"

"எனக்குத் தெரியும் பணத்தின் மதிப்பு. சொல்லுங்கள். நீங்கள் போகப் போகிறீர்களா? இல்லே, நான் போகட்டுமா?"

மைதிலி இவ்வாறு சொன்னவுடன் ராகவன் விட்டுக் கொடுத்தான்.

"சரி, மைதிலி! போய்ச் சொல்லி விட்டு வருகிறேன். எனக்கென்னமோ பணம் வருமென்று நம்பிக்கையில்லேதான்!"

"இப்படிப் பேசிக் கொண்டே இருக்காதீர்கள். பணம் நமக்கு அவசியம் திரும்பக் கிடைக்கத்தான் போகிறது."

* * *

ராகவன் கையில் நூறு ரூபாய் இருந்த தென்னவோ உண்மை. ஒரு மாதம் முழுதும் இரவு பகலென்று பாராமல் உழைத்துச் சம்பாதித்த பணம். மைதிலி பணம் வந்தவுடன் வீட்டுச் செலவையெல்லாம் சரிக்கட்டத் திட்டம் போட்டு வைத்திருந்தாள். கம்பெனியிலிருந்து சம்பளத்தை வாங்கிக் கொண்டு வீட்டுக்கு வரும்போது தன் நண்பன் சண்முகத்தைச் சந்தித்து விட்டதுதான், ராகவன் பணத்தைப் பறி கொடுத்தற்குக் காரணம்.

சண்முகமும் அவனைப் போல் ஒரு கம்பெனியில் வேலே பார்ப்பவன்தான். பிரம்மச்சாரி. பணத்தைத் தண்ணீரைப் போல் செலவழிக்கக்கூடியவன். அதோடு சீட்டாட்டத்தில் புலி. ராகவனுக்குச் சீட்டாடக் கற்றுக் கொடுத்தவனும் அவன்தான்.

"பையில்தான் பணமிருக்கிறதே. சற்று நேரம் கிளப்பில் சீட்டாடி விட்டுப் போகலாமே?" என்று சண்முகம் சொன்னதை ராகவனால் ஏற்றுக்கொள்ளாமல் இருக்க முடியவில்லே. ஒரு நாளாவது திம்மதியாக இருக்கலாமே என்று தன்னைத் தானே ஏமாற்றிக் கொண்டான். கிளப்புக்குள் நுழைந்த போதிருந்த உற்சாகம் வெளிவரும் போது இல்லே. கையிலிருந்த நூறு ரூபாயும் சீட்டாட்டத்தில் தொலேந்து விட்டது. ஜெயித்தவன் சண்முகம் தான்.



ஒரு மணி நேரத்தில் நூறு ரூபாய் கோவிந்தா! மைதிலியின் கையில் கொண்டு போய்க் கொடுத்துவிட வேண்டும் என்கிற அவன் திட்டம், காற்றில் அல்லவா கரைந்துவிட்டது?

'சூதாட்டத்தில் தோற்றேன்' என்று எந்தத் தைரியத்துடன் அவளிடம் கூறுவது? அப்படிச் சொல்லி அவளிடமிருந்து தப்பிக்க முடியுமா? மைதிலி கண் கலங்குவதை ராகவனால் சகிக்கவே முடியாதே. சீட்டாடும் பழக்கம் அவனுக்கு உண்டு என்று தெரிந்தாலே அவள் மனமுடைந்து போய்க் கதறுவாளே.

இதுவரையில் அவள் மனத்தை நோகச்செய்து அவனுக்குப் பழக்கமில்லை.

பணத்தைப் பற்றி அவள் கேட்டால் அதற்குச் சரியான சமாதானம் கூற வேண்டும். அவளுக்கு அவன் மீது அனுதாபமும் உண்டாக வேண்டும்.

ராகவனின் மூளை சுறுசுறுப்பாக வேலை செய்தது. வீட்டுக்குப் போகுமுன் கேசத்தைக் கொஞ்சம் கலைத்து விட்டுக் கொண்டான். வேண்டுமென்றே புழுதியில் நடந்தான். சட்டையை நுனியில் சற்றுக் கிழித்தான். நாடகத்தின் முதல் அங்கம் பூர்த்தியாயிற்று. யாரோ ஒருவன் அவன் மீது எதிர்பாராத விதமாக மோதிக் கீழே தள்ளியதுமில்லாமல் அவன் மணிபர்சையும் கொண்டு போய் விட்டான் என்பது நாடகத்தின் கதை! இதை மைதிலியிடம் திறமையாக நடித்துக் காண்பித்து விட்டால் ராகவன் வெற்றி அடைந்த மாதிரிதான். மைதிலி படித்த பெண். பல கேள்விகள் கேட்பாள். அதற்கெல்லாம் சாமர்த்தியமாகப் பதில் சொல்லி வெற்றி பெற வேண்டும். இதுவரையில் அவன் தன் மனைவியை இம்மாதிரி திட்டமிட்டு ஏமாற்றியதில்லை. இதுவே முதல் தடவையும் கடைசித் தடவையுமாக இருக்கட்டும்!

ராகவனின் முயற்சி வீண் போகவில்லை. மைதிலி அவன் சொன்ன கதையை அப்படியே நம்பி விட்டாள். நம்பியதோடு விட்டுவிட வேண்டியது தானே? பணத்தை எப்படியும் பெற்றுவிட வேண்டும் என்று அவள் கங்கணம் கட்டிக் கொள்வாள் என்பதை ராகவன் கொஞ்சமும் எதிர்பார்க்கவே இல்லையே?

அதனால்தான் அவன் இப்போது போலீஸ் ஸ்டேஷனுக்குப் போய்க் கொண்டிருக்கிறான். நடிக்க ஆரம்பித்தாகி விட்டது. கடைசிவரையில்தான் பார்ப்போமே என்று அவன் தீர்மானித்து விட்டான். போலீஸ்காரர்களினால் நிச்சயம் திருடனைக் கண்டுபிடிக்க முடியாது. அந்த முடிவு தெரிந்தவுடன் மைதிலியும் தன்னைத் தொந்தரவு செய்வதை நிறுத்திவிடுவாள் என்று ராகவன் மனப்பூர்வமாக நினைத்தான்.





சென்னை மராமத்து இலாகா குபர்வைச ராகப் பணியாற்றி ஓய்வு பெற்றுள்ள ஸ்ரீ எல். என். வெங்கட்ராமய்யர் அவர்களின் அறுபதாண்டு நிறைவு விழா சமீபத்தில் வெகு விமரிசையாக நடைபெற்றது.

"இம்மாதிரி திருட்டுக்கள் இப்போது அதிகரித்துக்கொண்டே இருக்கின்றன. யாரோ வாலிபப் போக்கிரிகள்தான் இவைகளை நடத்துகிறார்கள். ஒருவனைப் பிடித்தால் ஒரு கூட்டமே நிச்சயம் கிடைத்துவிடும்" — சப் - இன்ஸ்பெக்டர் சஞ்சீவி, ராகவனின் கதையைக் கேட்டு விட்டுச் சொன்ன வார்த்தைகள் இவை!

"நாங்கள் விசாரித்துச் சொல்கிறோம்" என்று விவரங்களை எழுதி வாங்கிக் கொண்டு அனுப்பாமல் இவர் என்ன பேசிக் கொண்டே இருக்கிறாரே என்ற அலுப்பு ஒரு பக்கம்; ஏதாவதொரு கேள்வியின் மூலம் உண்மை வெளிப்பட்டு விட்டால் மிகவும் சங்கடமாயிற்றே என்ற கவலை ஒரு பக்கம், ராகவனை வாட்டியெடுத்தன.

பிக்-பாக்கெட் கோஷ்டி பற்றியும் குண்டர்கள் குழாம் பற்றியும் வாய் ஓயாமல் பேசிக் கொண்டேயிருந்த சப்-இன்ஸ்பெக்டரிடம் விடை பெறுவது எப்படி என்று ராகவன் யோசிக்கத் தொடங்கினான். இந்த நேரத்தில் சப்-இன்ஸ்பெக்டருக்கு, பக்கத்து அறையிலிருந்து அழைப்பு வந்தது.

"புதிதாக யாராவது கேடிகள் அகப்பட்டுக் கொண்டிருப்பார்கள். இதோ வந்து விடுகிறேன்" என்று கூறி சப்-இன்ஸ்பெக்டர் எழுந்து போய் விட்டார். தன்னை இக் கதிக்குள்ளாக்கிய மைதிலியை, ராகவன் சபித்துக் கொண்டே போலீஸ் ஸ்டேஷனிலிருந்த துப்பாக்கிகள் — ஜன்னல் கம்பிகள் முதலியவற்றை எண்ணிக் கொண்டிருந்தான். உள்ளூற அவனுக்குப் பயம்தான்.

நல்ல வேளையாக சப் - இன்ஸ்பெக்டர் சஞ்சீவி, ராகவனின் பொறுமையை அதிகமாகச் சோதிக்கவில்லை. விரைவிலேயே அவனைப் பக்கத்து அறைக்கு அழைத்தார். அங்கே அவரைத் தவிர இரண்டொரு போலீஸ்காரர்களும் ஒரு வாலிபனும் இருந்தார்கள். அந்த இளைஞனை இதற்கு முன் ராகவன் பார்த்ததேயில்லை. அவனை என்ன செய்தார்களோ என்னவோ; அழுது கொண்டிருந்தான்.

"உங்கள் பணம் எங்கும் போய்விடவில்லை, மிஸ்டர் ராகவன். இதோ இருக்கிறது! உங்களிடமிருந்து 'பாக்கெட்' அடித்தவன் இவன் தான்." கைப்பற்றிய பணத்தைக் காட்டியபடி சப் - இன்ஸ்பெக்டர் இப்படிக் கூறிக் கொண்டே போகையில் ராகவனுக்கு உள்ளூற நடுக்கம் உண்டாகி விட்டது. அதை வெளியில் காண்பித்துக் கொள்ளாமல் இருக்க பாவம், ரொம்பவும் பிரயாசைப் பட்டான்.

"பெரிய இடத்துப் பையன் சார்...எனக்கு இவனை நன்றாகத் தெரியும். பாருங்கள், சேர்க்கை வாசனை அவனை எப்படி மாற்றியிருக்கிறதென்று! இவன் தகப்பனார் எவ்வளவு நல்லவர்? அவர் பெயரைக் கெடுக்க இப்படி ஒரு மகன் பிறந்திருக்கிறான். உம்... சரி....சார்...இவன்தானா உங்கள் மீது, மோதிக் கீழே தள்ளியதுமல்லாமல் உங்கள் பர்ஸையும் கொண்டு போனது? நன்றாகப் பார்த்துச் சொல்லுங்கள்!"

ராகவனுக்குச் சங்கடமான நேரம்...

"இருட்டு சார்...ஆளின் முகத்தைச் சரியாகவே பார்க்க முடியவில்லை..."

ஓர் இக்கட்டான நிலையிலிருந்து சமத்காரமாகத் தப்பி விட்டதாகத் தன்னைத்தானே தட்டிக் கொடுத்துக் கொண்டான் ராகவன்.

# சின்னஞ் சிறு குழந்தைமுதல்

## குடும்பத்தில் அனைவரும் சொல்வதைக் கேளுங்கள்



பா . . . பா
நா . . . நா
இங்கா!



அம்மா நமக்கு வாட்டர் பரீஸ் விட்டமின் காம்பவுண்ட் கொடுக்க ஆரம்பித்ததிலிருந்து நமக்கு யாதொரு சுகக்குறைவும் இல்லே.



ஆஹா! வாட்டர்பரீஸ் விட்டமின் காம்பவுண்ட் உட்கொள்ள ஆரம்பித்ததிலிருந்து நமக்குத் தான் எவ்வளவு புத்துணர்ச்சியும், ஆரோக்கியமாக வாழ போதிய சக்தியும் ஏராளமாக கிடைக்கின்றன.



வாட்டர்பரீஸ் விட்டமின் காம்பவுண்ட் பசியை அதிகரிக்கச் செய்து..அதிக விட்டமின்களை அளித்து. ஜீரணசக்திக்கும் உதவுகிறது.

எப்போதும் புகழ் பெற்ற வாட்டர்பரீஸ் காம்பவுண்ட் கலவையில் இப்பொழுது உடலுக்கு சக்தி அளிக்கும் விட்டமின்களால் வீர்யம் அதிகப்படுத்தப்பட்டு குடும்பத்திலுள்ள அனைவருக்கும் பரிபூர்ணமாக உபயோகப்படும் புதிய டானிக்காக விளங்குகிறது. ஏனெனில் வாட்டர்பரீஸ் விட்டமின் காம்பவுண்ட் குழந்தைகளுக்கு வேண்டிய தசை வளர்ச்சிக்கும், உறுதியான எலும்பு வளர்ச்சிக்கும், பல் வளர்ச்சிக்கும் உதவுகிறது. உழைக்கும் மானிடருக்கு இழந்த சக்தியையும் புத்துணர்ச்சியையும் வீர்யத்தையும் தேவையானபொழுதெல்லாம் அளிக்கிறது. வயோதிகர்களுக்கு பலஹீனமான தசைகளை ஊக்குவிக்கவும், பசியின்மையை போக்கடிக்கவும், ரத்தத்தை சக்தி பெறச்செய்யவும் உதவுகிறது. நோயுற்றுக் குணமடைந்த பிறகு அதி சீக்கிரம் உடம்பு தேற உதவுகிறது. ஆகையால் வாட்டர்பரீஸ் விட்டமின் காம்பவுண்ட் பெரியவர்களுக்கும் குழந்தைகளுக்கும் பொதுவான ஒரு சிறந்த டானிக்.

# வாட்டர்பரீஸ்

**விட்டமின்**

# காம்பவுண்ட்

**நீங்கள் தேக புஷ்டியுடன் விளங்க**

பில்பர்ஃப்ரூப் குங்குமப்பூ கலர் மூடியைப் பார்த்து வாங்குங்கள்




குங்குமப்பூ கலர் லேபிலைப்பார்த்து வாங்குங்கள்



இருமல் மற்றும் ஜலதோஷத்திற்கு கிரியோஸோட் மற்றும் க்வயகால் சேர்க்கப்பட்ட சிகப்பு லேபிலுடைய வாட்டர்பரீஸ் காம்பவுண்ட் சிறந்த டானிக்காகும்.

வார்னர்-லாம்பர்ட் பார்மஸ்யூடிகல் கம்பனி

(யு. எஸ். ஏ. வில் வரையறுக்கப்பட்ட முதலாளத்துடன் பதிவு செய்யப்பட்டது)

WVC 161

''இருக்கும். இருக்கும். நேற்றுத்தானே அமாவசை ? இவனும் அதைத்தான் சொல்லு கிறன். ஆளைத் தள்ளிப் பணத்தைப் பறித்த தென்னமோ உண்மை யென்றும் ஆனல் அவர் முகத்தைத் தான் சரியாகப் பார்க்க வில்லை யென்றும் கூறுகிறன். பாடுபட்டுச் சம்பாதித்த பணம் எங்கேயும் போய் விடாது, சார்! நீங்கள் அடுத்த அறையில் உட்கா ருங்கள். வருகிறேன்.''

கனவில் நடப்பவனைப் போல் ராகவன் பழைய இடத்துக்கு வந்து சேர்ந்தான். 'பிள்ளையார் பிடிக்கப் போய்க் குரங்காக வல்லவா முடிந்து விடும் போலிருக்கிறது?'

பணம் கிடைத்து விட்டால் நல்லதுதான். ஆனல் விவகாரம் அத்துடன் முற்றுப்பெறும் என்று தோன்றவில்லையே ?

சப் - இன்ஸ்பெக்டர் மீண்டும் ராகவனிடம் வந்த போது, அவர் கையில் பணம் இருந்தது. அதை அவன் சட்டைப் பையில் திணித்த படியே, ''சார்! நீங்கள் எனக்கு ஓர் உபகா ரம் செய்ய வேண்டும். நீங்கள் கொடுத்த புகாரைத் திருப்பி வாங்கிக் கொள்ளுங்கள். பையனின் தந்தையை உத்தேசித்து நான் இதைக் கேட்கிறேன். அவன் இனிமேல் இப்படிச் செய்வதில்லை யென்று எனக்கு வாக் குக் கொடுத்திருக்கிறன். அத்துடன், அவனது திருட்டு நண்பர்களையும் எனக்குக் காட்டிக் கொடுப்பதாகக் கூறியிருக்கிறன். அவன் திருந்தி விடுவான் என்ற நம்பிக்கை எனக்கும் உண்டு. உங்களை நான் கேட்டுக் கொள்வது தவறுதான். இருந்தாலும், ஒரு பையனை நல்வழிக்குத் திருப்புவதில் நீங்களும் என் னுடன் ஒத்துழைப்பீர்கள் என்றே நம்பு கிறேன்'' என்ருர் அவர்.

ஒரு விஞடி சப்-இன்ஸ்பெக்டர் என்ன பேசு கிறர் என்றே ராகவனுக்குப் புரியவில்லை... விவகாரம் இவ்வளவு சுலபமாக முடிந்துவிடும் என்று அவன் எதிர்பார்க்கவில்லையே ?

''உங்களுக்காக எது வேண்டுமானலும் செய்கிறேன்...கொடுங்கள் அந்தப் புகாரை. நானே என் கையால் கிழித்து எறிந்து விடு கிறேன்'' என்ருன் ராகவன்.

போலீஸ் ஸ்டேஷனிலிருந்து வெளி வந்த போது, தன்னைப் போல் அதிர்ஷ்டசாலி வேறு யாரும்இருக்கமுடியாது என்ற நினைப்பு அவன் மனத்தில் நடனமாடிக்கொண் டிருந்தது.

ஆனல்..... அந்தப் பணம் யாருடையது ? பையன் அதை யாரிடமிருந்து திருடினனே? பணத்தின் சொந்தக்காரன் அதை எந்தச் செலவுக்காக வைத்திருந்தானே ?

சீட்டாட்டத்தில் கோட்டை விட்ட பணத்தை அநியாயமான வழியில் திரும்பப் பெறுவதில் ராகவனுக்கு மன நிம்மதி கிட்ட வில்லை. ஒரே ஒரு பொய் எப்படியெல்லாம் வளர்ந்து அவனைத் துன்புறுத்துகிறது?

பணத்தை சப்-இன்ஸ்பெக்டரிடமே திருப் பிக் கொடுத்து விட்டு, உண்மையை ஒப்புக் கொண்டால்தான், தாராளமாக மூச்சுவிட முடியும் என்று தீர்மானித்தான் ராகவன். யாரிடமிருந்தாவது நூறு ரூபாய் கடன் வாங்கிக் கொடுத்து மைதிலியை அப்போதைக் குத் திருப்திப்படுத்தி விடலாம். இப்படி உறுதி பூண்ட பிறகுதான் அன்றிரவு அவனுக்குத் தூக்கமே வந்தது !

மறு நாள் காலையில் பணத்துடன் போலீஸ் ஸ்டேஷனுக்குச் சென்றபோது, வழியில் தற் செயலாக அவனைச் சந்தித்தான் சண்முகம்.

'யாரிடம் போய் நூறு ரூபாய் கடன் கேட்பது?' என்று சிந்தித்துக் கொண்டிருந்த ராகவனுக்குச் சட்டென்று ஒரு யோசனை உதயமாயிற்று.

ஓடிப்போய்ச் சண்முகத்தைக் கெட்டியாகப் பற்றிக் கொண்டான். ''தயவுசெய்து நூறு ரூபாய் கடனுகத் தரமாட்டாயா?'' என்று கேட்டான் அழமாட்டாத குறையாக.

''பணமிருந்தால் கண்டிப்பாகத் தருவேன். ஆனல் இப்போ கையில் ஒரு நயாபைசா கூடக் கிடையாது!''

''அடப் பாவி! நேற்று என்னிடம் ஜெயித்தாயே. எல்லாம் என்ன, ஆயிற்று ?''

''அந்தப் பணந்தானே? வந்த சுவடே தெரியாமல் போய் விட்டது! நேற்று இரவு யாரோ ஒருவன் என்னைக் கீழே தள்ளியதுமல் லாமல் பணத்தையும் பறித்துக் கொண்டு போய் விட்டான்'' என்றவாறே சண்முகம் விடைபெற்றுக் கொண்டான்.

தனக்கே சொந்தமான பணத்தைப் போலீஸ் ஸ்டேஷனில் எதற்காகக் கொண்டு போய்த் தர வேண்டும்? குதூகலம் பொங்க ராகவன் வீடு திரும்பினன். மைதிலியிடம் நூறு ரூபாயை எண்ணிக் கொடுத்தபோது அவள் வதனத்தில் விகசித்த மகிழ்ச்சியைக் கண்டு மனம் பூரித்தான். சீட்டாடும் பழக்கம் ராகவனை இப்போதும் நன்ருகப் பிடித்து உலுக்கி எடுத்துக் கொண்டிருக்கிறது. ஆனல் ஒரே ஒரு மாறுதல். மனைவியைத் தவிர வேறு யாருடனும் அவன் சீட்டாடுவது கிடையாது!

## குன்னியூர் சாம்பசிவய்யர்

தஞ்சை மாவட்டப் பெரும் நிலக்கிழார்களில் ஒருவரும் தருமசிந்தை மிக்கவருமான குன்னியூர் சாம்பசிவய்யர் தமது முப்பத்தேழாவது வயதில் இவ்வுலகை விட்டு மறைந்தார் என்ற செய்தி கேட்டு வருந்துகிறேம். அவர் தஞ்சை மாவட்டக் கழகத் தில் ஐந்து ஆண்டுகள் தலைவராக இருந்து அரும்பணியாற்றி யிருக்கிறர். மன்னர்குடி பாங்கின் தலைவராகவும் இருந்து தொண் டாற்றி யிருக்கிறர். இளவயதில் காலமான குன்னியூர் சாம்ப சிவய்யர் அவர்களின் குடும்பத்தாருக்கும் நண்பர்களுக்கும் நம் ஆழ்ந்த அனுதாபங்களைத் தெரிவித்துக் கொள்கிறேம்.



# அக்கரைச் சீமையில் ஆறு மாதங்கள்

சோமு

## 21. இனிப்புப் பட்டணம்!

இரண்டு கண்களாலும் அள்ளி அள்ளிப் பருகக்கூடிய பசுமையான ஊர் அந்தச் சாக்லேட் பட்டணம்! "Bournville" என்று பெயர்! அங்கேதான் அகில உலகத்தின் நாக்கிலும் தண்ணீர் சொட்டும்படியாகச் சாக்லேட் செய்கிற 'காட்பரி' தொழிற்சாலை இருக்கிறது!

எழில் நிரம்பிய அந்தக் கிராமத்துக்குள்ளே நுழைந்தது மோட்டார் வண்டி. ஹம்ப்ரி சான்ஸ் பென்னி என்ற பர்மிங்ஹாம் நண்பர் அங்கேயுள்ள அரசாங்கச் செய்தி அதிகாரிகளில் ஒருவர்—ஒய்யாரமாக ரத சாரத்தியம் செய்து கொண்டு வந்தார்!

அன்று நாங்கள் அந்தத் தொழிற்சாலைக்கு வருவதாக முன்னமேயே அறிவித்திருந்ததால் காட்பரிக் கட்டடத்தின் வரவேற்புக் கூடத்தில் அந்த நிலையத்தின் அதிகாரிகள் இருவர் பிரயாணத் திட்டத்தோடு எங்களை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள். 'பிரயாணத் திட்டம்' என்று ஏன் சொல்கிறேன் தெரியுமா? அந்தத் தொழிற்சாலைக்குள்ளே சென்று ஒரு சுற்றுச் சுற்றி வருவது என்றால் நாலைந்து மணி நேரம் பிடிக்கக் கூடிய ஒரு யாத்திரை அது! எனவே சுற்றிப் பார்க்க வருபவர்கள் எங்கெங்கு செல்ல வேண்டும் என்பதற்கு முன் கூட்டியே ஒரு திட்டம் வகுத்து வைத்து விடுகிறார்கள் அந்த மாபெரும் தொழிற்சாலையின் வரவேற்பு அதிகாரிகள்! தொழிற்சாலை என்றேன், தொழில் நகரம் என்றே சொல்ல வேண்டும், அவ்வளவு பெரிய இடம் அது!

வரவேற்புக்கூடத்துக்குள் நாங்கள் நுழைந்ததும் ஒரு பெண்மணி அழகான ஒரு தட்டில் விதம் விதமான சாக்லேட்டுகளும், தேநீரும் கொண்டு வந்து கொடுத்தார்கள். அடுத்த விநாடி அங்கே தோன்றினார் மிஸ்டர் மெரிடித்!

மெரிடித் என்றால் ஆங்கில நாடகங்களிலே வரும் ஒரு கதாபாத்திரமில்லை! காட்பரி தொழிற்சாலையின் நிர்வாகத் தலைவர்களில் ஒருவரான ஏற்றுமதி அதிகாரி அவர். எனக்கு ஏற்கனவே அறிமுகமான ஒரு நல்ல நண்பர். இவர்களுடைய தித்திப்பான உபசரிப்பைச் சுவைத்தவாறு அங்கிருந்து புறப்பட்டுத் தொழிற்சாலையின் அலுவலகத்துக்குள்ளே சென்றேன்!

இரண்டாயிரம் பேர்கள் வேலை செய்கிற 'ஆபீஸ்' அது! அங்கிருந்து வலதுபுறம் திரும்பியதும் கலைச்சாலை! சாக்லேட் பொட்டணங்களுக்கு மேலேயுள்ள வர்ணப்படங்களையெல்லாம் இங்கேதான் வரைகிறார்கள். சித்திரப் பூவையர்கள் பலர் உட்கார்ந்து அழகழகான படங்களை வரைந்து கொண்டிருந்தார்கள்! அங்கிருந்து இன்னொரு அறைக்கு வந்தோம். அந்தப் பெரிய தொழிற்சாலையின் பல பகுதிகளுக்கும் கடிதங்களை எடுத்துச் செல்லும் பையன்கள், விசை கொடுத்து விட்ட மோட்டார்ப் பொம்மைகள்மாதிரி இயங்கிக் கொண்டிருந்தார்கள். அங்கிருந்து இன்னொரு அறைக்கு வந்தால், அங்கே ஓர் அதிகாரி ஓர் ஒலிக் கருவியைத் தமக்கு முன்னால் வைத்துக் கொண்டு கடிதங்களுக்குரிய பதில்களை அதை நோக்கி மொழிந்து கொண்டிருந்தார்! 'டேப்'பில் அந்தப் பதில்கள் பதிவாகிக் கொண்டிருந்தன. அடுத்த அறையில் கருள் கருளாக இந்த ஒலிப்பதிவுகளைப் போட்டுக் கேட்டு அவற்றைத் தட்டெழுத்து இயந்திரத்திலே தட்டிக் கொண்டிருந்தார்கள் டைப் அடிக்கும் பெண்கள்! சற்றுத் தள்ளி ஒரு தபால் நிலையம். காட்பரிக்கென்றே அமைந்த தனியான தபால் நிலையம். தினந்தோறும் பன்னிரண்டாயிரம் கடிதங்களை வரவு செலவு செய்கிற நிலையம் இது!

தபால் நிலையத்திலிருந்து தொழிற்கூடத்துக்குள்ளே சென்றோம். 'கோக்கோ' கொட்டைகள் மூட்டை மூட்டையாக ஆயிரக்கணக்கில் அடுக்கியிருந்தார்கள்! இந்தக் கொட்டைகளை வறுக்கும் இயந்திரம், பொடி செய்யும் இயந்திரம், வஸ்திரகாயம் செய்யும் இயந்திரம் என்று ஒவ்வொன்றும் ஒரு பூதம் போல் நிற்கிறது! இங்கிருந்து நகர்ந்து சென்றால் எந்த மகானுபாவனும் மதிமயங்கிப் போய் விடக் கூடிய ஒரு காட்சி. தகரத் தகடுகளை அளவுப்படி வெட்டி வளைத்து உருட்டி அவற்றை டப்பாக்களாக்கிச் சங்கிலித் தண்டவாளத்தில் உருட்டி விடுகிறது ஒரு யந்திரம்! நூற்றுக்கணக்கான டப்பாக்கள் ஒன்றையொன்று தள்ளிக்கொண்டே சங்கிலித் தண்டவாளத்தில் ஏறியும் இறங்கியும் வளைந்தும் திரும்பியும் நகர்ந்துகொண்டேசெல்கிறகாட்சி பார்க்கப் பார்க்க வேடிக்கையும் வியப்பும் தருகிறது! எல்லாம் இயந்திர இயக்கம்!

நகர்ந்து செல்கிற டப்பாக்கள் உருண்டு உருண்டு சென்று இன்னொரு இயந்திரத்தின் அருகிலே வந்ததும் அணிவகுத்து நின்று கொள்கின்றன! அந்த இயந்திரம் கோக்கோப்பொடியை நிறுத்து, அந்த டப்பா கொள்ளக்கூடிய அளவுக்கு அதிலே கொட்டுகிறது! டப்பா நகருகிறது. உடனே இன்னொரு இயந்திரம் பொடி நிரம்பிய டப்பாவுக்கு மூடி போட்டு அமுக்கி விடுகிறது! டப்பா மீண்டும் நகருகிறது. உடனே இன்னொரு இயந்திரம் அந்த டப்பாவின் மேனியிலே பசை பூசியவர்ணப்படத்தைஒட்டி அதை உருட்டி விடுகிறது! மனிதர்களுடைய கையே படாமல் இத்தனை வேலைகளும் நடக்கின்றன! எல்லாம் விநாடிக்கணக்கில் 'டக் டக்' என்று நடக்கின்றன!



சாக்லேட்களை வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்யும் பகுதி

கோக்கோப் பொடியை நிரப்பும் பகுதி போலவேதான் சாக்லேட் செய்யும் பகுதியும்! சாக்லேட்டுக்காக வருஷத்துக்கு நான்கு கோடி காலன் பால் இந்தத் தொழிற்சாலையிலே காய்ச்சிப் பக்குவப்படுத்தப்படுகிறது. பிரும்மாண்டமான ஓர் இயந்திரம் பாலைக் காய்ச்சி "ஓடை"களிலே செலுத்துகிறது! அது இரட்டுப் பாலாக மாறுவதும், கோக்கோவைக் கலப்பதும் விதம் விதமான சாக்லேட்டுகளுக்கு உரிய பழச் சாறுகளை அதிலே சேர்ப்பதும் எல்லாம் இயந்திரங்களே "மூளை"யோடு செய்கின்றன! இலட்சக்கணக்கான அச்சுகள் பதித்த ஆகைகளிலே சாக்லேட் குழம்பு வந்து கொட்டுவதும், பிறகு அது ஆறுவதும், ஆறிய துண்டுகள் இயந்திரத்துக்குள்ளே சென்று வர்ணக்காகிதச் சட்டைகளை அணிந்துகொண்டு வெளியே வருவதும் நாக்கிலே தண்ணீர் சொட்டக்கூடிய கண்ணுக்கினிய காட்சிகள்!

சாக்லேட்டுகளை எடை போட்டுப் பத்தி பத்தியாக அனுப்புகிறது ஓர் இயந்திரம். இன்னொன்று, மிக வேகமாக அட்டைகளை மடித்து ஒட்டிப் பெட்டிகளாகச் செய்து வெளியே தள்ளுகிறது.

மொத்தத்தில் இயந்திர அதிசயம் நிரம்பிய ஒரு மாமாய ஜாலபுரிதான் அது!

இவற்றை யெல்லாம் பார்த்து விட்டு இன்னொரு பகுதிக்கு வந்தால் அச்சுக்கூடம் வகை வகையான இயந்திரங்களோடு படபடக்கிறது! எழுத்துக்களைக் கோப்பது, படங்களுக்கு 'பிளாக்' செய்வது, பல வர்ணங்களிலே அச்சடிப்பது ஆகிய வேலைகள் மடமடவென்று கருகருப்பாக நடந்து கொண்டிருக்கின்றன!

இன்னொரு பக்கமாக நடந்து சென்றால் தொழிலாளர்களுக்கு என்று அமைந்துள்ள தனியான மருத்துவ நிலையம். பளபளப்பான கட்டடத்தில் எல்லா நவீன வசதிகளும் கூடியதாய் நிற்கிறது இந்த மருத்துவ விடுதி! சற்றுத் தொலைவிலே தொழிலாளர்கள் நீந்திக் குளிப்பதற்கான உல்லாசத் தடாகம்! இன்னொரு பகுதியில் மேஜை விளையாட்டுக்கள் நடக்கும் கூடம்! அதற்கு அருகிலே மிகப் பெரிய நாடகமேடை! தொழிலாளர்களின் மகிழ்ச்சிக்காகவே கட்டப்பட்டுள்ள அழகான மேடை இது. இதில் நாடகங்களும் இசை விருந்துகளும் நடைபெறுகின்றன!

தொழிற்சாலையை விட்டு வெளியே வந்தால் ஒரு பெரிய குடியிருப்பு — அதாவது தொழிலாளர்களின் இல்லங்கள். அழகழகான வீடுகள், கிறிஸ்து கோவில், பள்ளிக்கூடம் எல்லாம் இந்தக் குடியிருப்புக்குள்ளேயே இருக்கின்றன!

காட்பரி தொழிற் சாலையின் கலைப் பெருமைகளில் ஒன்றாக இங்குள்ள நாடக மேடையை எல்லாரும் பாராட்டுகிறார்கள். அதன் அமைப்பும், பரப்பளவும், வசதிகளும் மிகவும் மெச்சும்படியாகவே இருக்கின்றன. ஆனால் அதோடு நின்று விடாமல் இந்த மேடையைப் பயன்படுத்தக் கூடிய விதத்தில் அங்குள்ள தொழிலாளர்களுக்கு ஓய்வும், மன உல்லாசமும் நிரம்ப இருக்கின்றன என்பதை முக்கியமாகக் குறிப்பிட வேண்டும்!

இந்தத் தொழிற்சாலையில் இன்னொரு ரசமான விஷயம், தொழிலாளர்கள் எல்லாம்

வேலை செய்து கொண்டே சங்கீதம் கேட்கலாம். சங்கீதம் கேட்டுக் கொண்டே வேலை செய்யலாம்! தொழிற்கூடப் பகுதிகளில் அங்கங்கே ஒலிபெருக்கிகளை இணைத்து ரேடியோ நிகழ்ச்சிகளை அவற்றில் கேட்கும்படி பொருத்தியிருக்கிறார்கள்!

சங்கீதம் தொழிலின் சுறுசுறுப்பை அதிகரிக்கிறது என்பது மனத்தத்துவ உண்மை! இந்த உண்மையை நம்முடைய தமிழ் நாட்டு முன்னோர்கள் மிக நன்றாக உணர்ந்திருந்ததால்தான், ஏற்றப் பாட்டும், நடவுப் பாட்டும் மற்றும் பல தொழிற் பாடல்களும் வழி வழியாக நம்முடைய மக்கள் சமூகத்தில் வழங்கி வந்திருக்கின்றன! ஆனால் இந்தக் காலத்தில் நவீன இயந்திர வசதிகளோடு கூடிய பெரிய தொழிற்சாலையில் பாடிக் கொண்டே வேலை செய்வது எப்படி? அதற்குப் பதிலாக ஒலிபெருக்கியில் பாட்டைக் கேட்டுக் கொண்டே வேலை செய்யலாமல்லவா! 'காட்பரி' தொழிற்சாலையில் இந்த ஏற்பாடு மிக நன்றாக அமைந்துள்ளது!

1824ல் பர்மிங்ஹாம் நகரத்தின் வீதி ஒன்றிலே ஜான் காட்பரி என்பவர் ஒரு சிறிய தேநீர்க் கடை ஆரம்பித்தாராம்! அவருடைய வியாபாரத்திறமையும், செல்வாக்குமே இன்று காட்பரி தொழிற்சாலையாக விரிவடைந்திருக்கிறது என்றால் நம்ப முடிகிறதா! தேநீர் விடுதியிலே தொடங்கிய சாக்லேட் முயற்சி, படிப்படியாக வளர்ந்து ஒரு தனியான கிராமத்துக்கே போய்க் குடியேறி, ஒரு பெரிய தொழில் நகரமாக விரிந்து பரந்து அகில உலகத்துக்குமே தித்திப்புப் பண்டங்களை அனுப்புகிற மாபெரும் தொழிலாக ஓங்கி வளர்ந்தது என்றால் மனித முயற்சியின் சாதனையை எப்படி அளவிட்டுக் கூறமுடியும்!

கடந்த நூற்று முப்பது ஆண்டுகளாக வழி வழியாக ஒரே குடும்பத்தின் தனியுடைமைத் தொழிற்சாலையாக விளங்கி வருகிறது இந்தக் காட்பரி ஸ்தாபனம்! ஒரு முதலாளிக் குடும்பத்தின் தனிச் சொத்தாக இருந்த போதிலும் இந்தத் தொழிற்சாலையில் எந்த விதமான தொழிற் சிக்கலும் இல்லாமல் நிர்வாகம் நடந்து வருவது எப்படி என்று கேட்கலாம். தொழில் நிபுணர்கள் இதைப் பற்றி என்ன சொல்கிறார்கள் என்றால், இங்கே உள்ள நிர்வாக சபை, தொழிலாளர்களின் பிரதிநிதிகளைக் கொண்டு அமைந்தது; முதலாளிகள் இந்தத் தொழிற்சாலை முழுவதையும் தங்கள் குடும்பமாகவே கருதி உறவு மனப்பான்மையோடு நடந்து வருகிறார்கள்; இதனால்தான் இத்தனை அமைதியும் தொழில் வளமும் இங்கே காண்கிறோம் என்கிறார்கள். ஆனால் இந்தத் தொழிற்சாலையின் முதலாளி என்ன சொல்லுகிறார் தெரியுமா?

பி. பி. ஸி. யின் நிருபர் ஒருவர் காட்பரி முதலாளியை ஒரு கேள்வி கேட்டார்: "ஒரே குடும்பத்தின் தனிச் சொத்தாக இத்தனை ஆண்டுகளாய் விளங்கி வருகிற தொழிற்சாலையில் சண்டைசச்சரவே நிகழாமல் இருப்பதன் இரகசியம் என்ன?" இதற்கு அந்த பூனிப்புப் பட்டணத்தின் முதலாளி சொன்னார்: "நாங்கள் முன்யோசனையோடு நல்ல மனைவிகளைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளுகிறோம்!" (தொடரும்)



# திருமூலர் தவமொழி

## ராஜாஜி - சோமு

2

காப்புச் செய்யுளுக்குப் பிறகு கடவுள் வாழ்த்து.

சித்தருடைய வாக்கில் ஒரு தனித் தன்மை உண்டு. சில சமயம் ஏதோ வேடிக்கை பேசுவது போல் ஒலிக்கும். அந்த "வேடிக்கை"யினுள் ஆழமான தத்துவங்கள் பொதிந்து மிருக்கும். இப்படிப்பட்ட கடவுள் வாழ்த்துச் செய்யுளோடு திருமந்திரம் ஆரம்பிக்கிறது. குழந்தைகளுக்கு ஒன்று, இரண்டு, மூன்று என்று எண்சுவடிக் கணக்கு சொல்லுவது போலச் சொல்லி இறைவனுடைய இயல்புகளை விளக்குகிருர்.

**ஒன்றவன் தானே:**
**இரண்டவன் இன்னருள்;**
**நின்றனன் மூன்றினுள்:**
**நான்குஉணர்ந் தான்: ஐந்து**
**வென்றனன்; ஆறு**
**விரிந்தனன்; ஏழும்பர்ச்**
**சென்றனன்; தானிருந்**
**தான் உணர்ந்து எட்டே!**

சிவ நிலையிலே மனத்தைச் செலுத்தி வழிபடுகிற அடியார்கள் '**சிவாப்யாம் நமஹ**' (இரண்டு சிவர்களுக்கு வணக்கம்) என்று மொழிவார்கள். 'ப்யாம்' என்பது வடமொழி இலக்கணத்தில் இருமைப் பன்மை நான்காம் வேற்றுமை உருபு.

சூரியன் ஒளி மயமாய் இருந்து அவன் நம்முடைய கண்ணுக்குப் புலப்படுகிற நிலை ஒன்று; தனது ஒளியைப் பிற பொருள்களின் மேல் வீசி அந்தப் பிரகாசத்தினுல் மற்றப் பொருள்களை நமக்குப் புலப்படுத்துகிற நிலை இரண்டாவது! இது போலவே இறைவன் தனது நிலையில் சிவமாகவும், தனது ஆற்றலை வழங்கிச் செயற்படும் நிலையில் சக்தியாகவும் விளங்குகிருன்! இந்தத் தத்துவத்தையே அம்மையப்பனுகவும் உமையொருபாகனுகவும் உருவாக்கி வழிபடுகிருர்கள் பக்தர்கள்! இதையே திருமூலர் '**இரண்டு இன்னருள்**' என்கிருர். 'ஏகோதேவஹ' என்றபடி ஒருவனுக நிற்கும் இறைவன், தானும் சக்தியுமாக இரண்டாகவும் விளங்குகிருன்.

படைப்பு, காப்பு, அழிப்பு என்ற முத்தொழில்களிலே மூன்று நிலைகளாகவும் துலங்குகிருன்.

**"ஒன்றவன் தானே;**
**இரண்டவன் இன்னருள்;**
**நின்றனன் மூன்றினுள் —"**

இனி இறைவனை உணர்ந்து அனுபவிக்கும் நான்கு தன்மைகளைச் சொல்லுகிருர்.

தானே முழு உலகமாகப் பரந்தும் அதற்கப்பாற்பட்டுத் தனித்தும் நிற்கிருன்; உலகம் முழுவதையும் தன்னுள்ளே அடக்கிக் கொண்டும் இருக்கிருன்! உலகுக்கெல்லாம் உயிராக உள்ளே உறைகிருன்; உலகின் வடிவமே தனது வடிவமாகவும் விளங்குகிருன்! இந்த நான்கும் நான்கு உணர்வுகள்.

இதையே '**நான்குணர்ந்தான்**' என்குர். '**உணர்ந்தான்**' என்ருல் உணர நின்ருன் என்று பொருள்!

தவத்தினுலும் மற்றும் விரத நியமங்களினுலும் ஐந்து இந்திரியங்களையும் வெல்லுவது மனித முயற்சி. ஆனுல் இறைவனே தன்னியல்பாகவே ஐந்தையும் வென்று நிற்கிருன். அதாவது இந்திரியங்களை வெல்ல வேண்டிய அவசியமின்றி நிற்கிருன். இதை '**ஐந்து வென்றனன்**' என்ருர்.

இனி, யோகிகள் கண்டுள்ள ஓர் இரகசியத்தை எடுத்துச்சொல்லுகிருர்.

நம்முடைய நாட்டில் பல நூறு ஆண்டுகளாக வழங்கி வருகிற யோக சாஸ்திரங்களிலே ஆறு ஆதாரங்களைப் பற்றிச் சொல்லியிருக்கிறது. மனித உடம்பினுள் ஆறு முக்கிய ஸ்தானங்கள் இருக்கின்றன என்பதை ஆராய்ந்து உணர்ந்து இவற்றை ஆறு ஆதார நிலைகள் என்று கூறி யிருக்கிருர்கள். மனித சரீரத்தின் இந்த ஆறு தலங்களிலும் ஆறு ஆற்றல்கள் தொழிற்படுகின்றன. இந்த ஆற்றல்களை முறையே விநாயகர், பிரமன், திருமால், ருத்திரன், மகேசுவரன், சதாசிவன் என உருவப்படுத்திச் சொல்லி யிருக்கிருர்கள். ஆறு மூர்த்திகளும் மனித உடம்பின் ஆறு இடங்களில் அமர்ந்து தொழில் செய்கிருர்கள் என்பது யோக ரகசியம். திருமூலர் சொல்லுகிருர், இந்த ஆறு நிலைகளிலும் ஆறுவித ஆற்றல்களாகப் பரவி நிற்பது ஒரு தெய்வமே. அந்த ஒன்றுதானே ஆருக விரிந்து நிற்கிறது — '**ஆறு விரிந்தனன்!**'

இந்த ஆறு ஆதார நிலைகளுக்கும் அப்பால் ஞானப் பெரு நிலை ஒன்று இந்த உடம்பு உள்ளே இருக்கிறது! அதை 'ஆகாசம்' என்றும் 'சித்அம்பரம்' என்றும் 'ஞான மன்றம்' என்றும் பல பெயர்களிலே அழைப்பார்கள். அந்த ஏழாவது உம்பரில் (உம்பர்-ஆகாசம்) சென்று நிற்பதும் இறைவனே! '**ஏழும்பர்ச் சென்றனன்**' என்று இதைப் பாடுகிருர். ஏழும்பர்-ஏழ் உம்பர்.

இதற்கு மேலும் சொல்லுகிருர் இறைவனுடைய தன்மையை:

நிலம், நீர், நெருப்பு, காற்று, வானம், சூரியன், சந்திரன், உயிர் என்ற எட்டுப் பொது நிலைகளாகவும் நிற்கிருன் இறைவன்! இந்த எட்டு வகையான பொது வடிவங்களாகவும் இறைவன் உணரப்படுகிருன் — '**எட்டுணர்ந்தான்!**'

இந்த 'எட்டு'க்கு உரை சொல்லும் போது ''அஷ்டமூர்த்தி சொரூபமாக உணரப்பெற்று அவற்றுள் கலந்திருந்தான்'' என்கிறது பஞ்சாட்சர தீப உரை!

இவ்வாறு ஒன்று இரண்டு முதலாக எண்ணிக்கை சொல்லித் தத்துவங்களை வகைப்படுத்துவது சித்தர்களின் ஸாங்க்யம்!

# தமிழ் கூறும் நல்லுலகம்

ரத்லம்வாழ் தென்னிந்திய தமிழ் அன்பர்கள் சென்ற மாதம் சத்குரு பஜனை மண்டலியின் ஆதரவில் ''ஸ்ரீராம நவமி'' தினத்தைச் சிறப்பாகக் கொண்டாடினர்கள். ஸ்ரீ ந. கிருஷ்ணமூர்த்தி அவர்கள் ''ராம ஜனனம்'' — ''ராமனின் குணச்சிறப்பு'' என்பது பற்றி உபன்யாசங்கள் செய்தார்.

★

இந்த வருடமும், இல்லித் தமிழ்ச் சங்கத்தின் ஆதரவின்கீழ் சத்தியமூர்த்தி நினைவு தினம் ஸ்ரீ கே. எஸ். கிருஷ்ணன் அவர்கள் தலைமையில் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. மத்திய அமைச்சர் திரு சத்தியநாராயண ஸின்ஹா, ஸ்ரீ என். சஞ்சீவி ரெட்டி, ஸ்ரீ கே. காமராஜ், ஸ்ரீ லங்காசத்தியம், ஸ்ரீமதி அம்புஜம்மாள், ஸ்ரீ சித்ரா நாராயணசுவாமி, ஸ்ரீ சி. ஆர். பட்டாபிராமன் ஆகியோர் தீரர் சத்தியமூர்த்தியின் பெருமையை எடுத்துரைத்தார்கள்.

★

புவியெலாம் போற்றும் கவிச்சக்கரவர்த்தி கம்பனது திருநாள் பம்பாய் தமிழ்ச் சங்கத்தில் சென்ற மாதம் தமிழன்பர் திரு ஒ. எஸ். வி. மணியம் அவர்கள் தலைமையில் சிறப்புடன் கொண்டாடப்பட்டது. ஸ்ரீமதி கமலாசங்கர் அவர்கள் ''கம்பன் கவிதை'' என்ற தலைப்பில் சொற்பொழிவாற்றினர். இ நப்பு கிழூநடையான் கம்ப ராமாயணத்திலிருந்து சிற்சில பாக்களை எடுத்துக் கூறி உரையாற்றினர்.

★

பம்பாய் தானு செனத் இந்தியன் சங்கத்தின் சார்பில், ஸ்ரீராம நவமி உற்சவம் சென்ற மாதம் காந்தி நகரில் வெகு சிறப்பாகக் கொண்டாடப்பட்டது.

★

நெலவங்கோடு தமிழ்ச் சங்கத்தின் இரண்டாவது ஆண்டு விழா சென்ற மாதம் வெகு சிறப்பாக நடந்தேறியது. பொதுச்சபை புத்தாண்டுக்கான நிர்வாகிகளையும் தேர்ந்தெடுத்தது.

★

கல்கத்தா பாரதி தமிழ்ச் சங்கத்தின் ஆதரவில் ஏப்ரல் 8, 9, தேதிகளில் சங்கத் தலைவர் திரு எஸ். பி. வெங்கடபதி தலைமையில் கம்பன் விழா சிறப்பாக நடைபெற்றது.

புதுமை பெறுக! இதம் பெறுக!
நளினமாய் இருங்கள்! நாள் முழுதும்!

மணமுள்ள சார்மிஸ் டால்கம் பௌடர்
உபயோகித்தபின் நீங்கள் பெறும்
உணர்ச்சிகள் இவை. சார்மிஸ் குளுமை
யும் புத்துணர்ச்சியும் அளிக்கிறது...
உன்னத மனோரம்மிய மணம்
கொண்டது.

# சார்மிஸ்

உன்னத, மனோரம்மிய
மணத்துடன் கூடிய
டால்கம் பௌடர்!




CHTP/6/9 TAM

# பென் ஹர்



காந்தன்

முதலில் நாவலாக வெளிவந்து பிரசித்தியடைந்தது; பிறகு நாடகமாக நடிக்கப்பட்டுப் பிரக்கியாதியடைந்தது; அதற்குப் பிறகு மௌனப் படமாக வந்து பார்த்தவர்களையெல்லாம் வியப்பினால் மௌனிகளாக்கியது. இப்பொழுது மெட்ரோ கோல்ட்டுவின் மேயர் தயாரிப்பில் வண்ணப் படமாகவும் பேசும் படமாகவும் வெளிவந்து உலகெங்கணும் சக்கைப் போடு போடுகிறது.

செல்வத்தில் செழித்த ஒரு யூத குடும்பத்தின் இளவரசனான ஜூடா பென்ஹர் தன் பால்ய நண்பனான மெஸ்ஸாலா என்ற சேனைத் தலைவனைக் காண அவனது அரண்மனைக்குப் போகிறான். பதினைந்து ஆண்டுகளாக நண்பர்கள் சந்தித்துக் கொள்ளவேயில்லை. ஆனால் இருவருடைய மனப்பான்மைகளும் வெவ்வேறு பாதைகளில் சென்றன. தாய் நாட்டுப் பற்றும், விடுதலை ஆர்வமும் பென்ஹரின் உள்ளத்தில் ஊறித் ததும்பின; ரோமாபுரியின் சேனைத்தலைவனான மெஸ்ஸாலாவின் உள்ளத்தில் அகம்பாவமும், அதிகார ஆணவமும், பதவிப்பித்தும் வேரூன்றித் தழைத்தன. பென்ஹர் தன் நாட்டுக்குத் தான் செய்ய வேண்டிய கடமையில் உறுதியாய் நிற்க உறுதி கொள்கிறான். புதிய கவர்னர் ஜெருஸலத்தில் பவனி வருகிறார்; பென்ஹருடைய மாளிகை வாசலுக்கு வரும்போது அவன் குடும்பத்தினர் அக்காட்சியைக் காண்கின்றனர். அப்பொழுது பென்ஹரின் சகோதரி கை ஊன்றிக் கொண்டிருந்த மாளிகைக் கைப்பிடிச் சுவரின் காரையும், ஓடுகளும் குதிரையிலிருந்த கவர்னரின் மேல் விழ அவர் பிரக்ஞையிழந்து விடுகிறார். உடனே பென்ஹரின் சகோதரியும் தாயும் பாதாளச் சிறைக்கு அனுப்பப்படுகின்றனர். பயங்கரப் பாதாளச் சிறையில் பென்ஹரின் தாயும், சகோதரியும் கொடிய குஷ்டரோகத்தினால் பிடிக்கப்பட்டு அவதிப்படுகின்றனர். பிறகு குஷ்டரோகிகளுக்கென்று ஒதுக்கப்பட்ட பள்ளத்தாக்கு முகாமுக்கு அனுப்பப்படுகின்றனர். அவர்கள் குற்றமற்றவர்கள் என்று ருசுப்பிக்க முற்பட்ட பென்ஹர் அடிமையாக்கப்பட்டு மரக்கலத்தில் அனுப்பப்படுகிறான்.

கப்பலைச் செலுத்தும் அடிமையாக இருந்த பென்ஹரின் உடல் வலிமை கண்டு வியந்த க்வின்டஸ் ஏரியஸ் என்னும் கப்பல் தளபதியின் உயிரையே பென்ஹர் காப்பாற்ற அவனிடம் அன்பும் மதிப்பும் கொண்ட அவர் அவனைத் தன் மகனாகவே வரித்துக் கொள்கிறார். ரோமாபுரி சென்ற பென்ஹர் மகா பராக்கிரமசாலியாகிப் பின்னர் தாய்நாட்டுக்குத் திரும்பித் தாயையும் தங்கையையும் காணாமல் தவிக்கிறான். பென்ஹரின் காதலி எஸ்தர் இரகசியமாக நோயாளிகள் முகாமுக்குச் சென்று அவர்களுக்கு உணவளிக்கிறாள். பென்ஹர் ஒருநாள் இதை நேரில் கண்டறிந்து உள்ளம் நோகிறான். இதற்கெல்லாம் காரணமான மெஸ்ஸாலாவைப் பழிவாங்கும் குரோதம் அவன் உள்ளத்தில் பொங்குகிறது; அதன் காரணமாகத்தான் ரதசாரத்தியப் பந்தயத்தின் சவாலை ஏற்று, மெஸ்ஸாலாவை வென்று பழி வாங்கத் தீர்மானிக்கிறான்.

ஜெனரல் லியூ வாலஸ் எழுதிய இக்கதையில், வீரம், சோகம், அன்பு, தேசபக்தி முதலிய குணாதிசயங்கள் பொங்கித் ததும்புகின்றன. அடிமைகளுக்கு இழைக்கப்படும் கொடுமைகளைத் தத்ரூபமாகச் சித்திரிக்கிறது. கதையின் பெருமை ஒருபுறம், காட்சிகளின் அருமை ஒருபுறம், பாத்திரங்களின் வியக்கத்தக்க குண விசேஷங்களின் பிரதிபலிப்பு இன்னொரு புறம் - இப்படி ஒரே அருமையும் பெருமையுமாகச் செல்லும் படத்தில், ஏசுநாதர் துன்பத்தில் உழலுபவர்களுக்குச் செய்த சேவை உருக்கமாயிருக்கிறது. ஏசு



நாதரின் முகத்தை நேருக்கு நேர் காட்டா மலேயே, மதிப்பு செலுத்தும் விதத்தில் அவரது தோற்றத்தை மட்டும் காட்டியிருப்பது பாராட்டுக்குரியது. சிலுவையைத் தூக்கிக் கொண்டு கல்லிலும், முள்ளிலும் ஏசுநாதர் ஏகின காட்சி கல் மனத்தையும் கரைய வைக்கும். மக்கட் குலத்தின் மாசு நீங்கவும், அவர்களுடைய பாவ மன்னிப்புக்காகவும் அம் மகாபுருஷர் சிலுவையில் அறையப்பட்ட நிகழ்ச்சியைப் பார்க்கும் எவருக்கும் மெய் சிலிர்க்காமல் இராது.

பென்ஹரின் பழி வாங்கும் வெறி கருணை மூர்த்தியான ஏசுநாதரின் சிலுவையடியில், பரிதி முன் பனி போல் மறைந்து விடுகிறது.

அடிமைகள் செல்லும் கப்பல், கடற் கொள்ளைக்காரர்களின் தாக்குதலுக்கு இலக்காகித் தீப்பற்றி யெரியும் காட்சி சினிமாக் காட்சியாகவே தோன்றவில்லை; நிஜமாகவே ஆழ்கடலில் நடக்கும் விபத்தாகவே தோன்றுகிறது. (அந்தக் காட்சியைப் படமாக்க ஒரு பெரிய ஏரியையே தோண்டிச் செயற்கைக் கடல் சிருஷ்டித்து, அதில் நாற்பது கப்பல்களுக்குமேல் தயாரித்துச் சண்டைக் காட்சியை எடுத்தார்களாம்!);

அதிசயத்திலும் அதிசயமான காட்சி நான்கு குதிரைகள் பூட்டிய ரத சாரத்தியப் பந்தயம். இந்தக் காட்சிக்காகவே இந்தப் படத்தைப் பலமுறை பார்க்கலாம். தலை தெறிக்கும் வேகத்தில் ரதங்கள் பறக்கின்றன; வேகமாக ஓட முடியாமல் பின்னடைகின்றவர்கள் கீழே விழுவதும், சிகிச்சைக்காக அவர்களை 'ஸ்ட்ரெச்ச'ரில் அப்புறப்படுத்துவதும் தத்ரூபமாயிருக்கின்றன. கம்பீரமான அந்தக் குதிரைகள் தாவி ஓடும் அழகு அற்புதக் காட்சியாகும். இதில் எழுபத்தெட்டு குதிரைகள் பங்கெடுத்துக் கொண்டிருக்கின்றன' இரண்டரை மைல் விஸ்தீரணத்துக்குப் பரவியிருந்த இந்த அருமையான காட்சியைப் படமாக்க மூன்றுமாத காலம் பிடித்ததாம்! இதில் 15,000 'எக்ஸ்ட்ரா' நடிக, நடிகையர்கள் தோன்றி யிருக்கின்றனர்.

''பத்துக் கட்டளைக''ளில் மோஸஸாக நடித்த சார்ல்டன் ஹெஸ்டன் பென்ஹராக வந்து உணர்ச்சியில் பொங்கிப் பிரமாதமாக நடித்திருக்கிறார். பென்ஹரின் காதலி எஸ்தராக நடிக்கும் ஹாயா ஹாரா ரீத் புது முகம். அவர் இஸ்ரேலியப் பெண்மணி. அவரும் அழகாக நடிக்கிறார். மெஸ்ஸாலாவாக வரும் ஸ்டீபன் பாய்டு நடிப்பும் சிறந்து நிற்கிறது.

இந்த மாபெரும் படம்-தரத்தில் மட்டும் அல்ல, நீளத்திலும் மாபெரும் படந்தான்! 213 நிமிஷங்கள் ஓடுகிறது! இவ்வளவு உயர்ந்த தயாரிப்பிலும் குறைகளே இல்லையென்று கூற முடியாது.

படம் பொதுவாக மந்தகதியில் செல்லுகிறது. பென்ஹரின் சகோதரியும், தாயும் குஷ்டரோகத்தினால் அவதிப்படும் கண்ணாவிக் காட்சி அதிகமாக நீடிக்கப்பட்டு அருவருப்பு எல்லையை மீறி விடுகிறது. அது கணிசமாகக் குறைக்கப்பட்டிருக்கலாம். வசனமும் சில இடங்களில் பொறுமையைச் சோதிக்கிறது.

இந்தப் படத்தின் டைரக்டர் வில்லியம் வைலர் பாராட்டுக்குரியவர். கதையைத் தத்ரூபமாகத் தயாரிக்க அவர் எடுத்துக் கொண்டுள்ள சிரமங்கள் படத்தின் வெற்றித் தூண்களாகி நிற்கின்றன.








# இதுவே சமயம்...

...நீண்ட கோடைக்கால
வசதிக்கு இப்போழுதே
வாங்குங்கள்




## ஏ. இ. ஐ. விசிறிகள்

ஸீலிங
மைத்தான்—ஏஸி. கெபாஸிடா டைப்
36'', 48'', 56'' & 60''
பாக்ரா—டிஸி. 36'', 48'', 56'', & 60''
ஆஸிலேடிங் 16'' டேபிள் டிஸி
& ஏஸி டிலக்ஸ் மற்றும் ஸுபர்
டிலக்ஸ் கபாஸிடர் டைப்






## மாஸ்டா பல்புகள்

மிகப்பிரகாசமாய் அதிக
நாள் உழைக்கும் என்பதை
ஞாபகப்படுத்திக்கொள்ளுங்கள்

விபரங்களுக்கு
அஸோஸியேடட் எலக்டிரிகல் இண்டஸ்டிரீஸ்
(இந்தியா) பிரைவேட் லிமிடெட்

த.பெ. 271 கல்கத்தா-1 • த.பெ. 484 பம்பாய்-1 • த.பெ. 2710 மதராஸ்-2 • த.பெ. 348 புது டில்லி-1
த.பெ. 581 பங்களூர்-2 • த.பெ. 50 கோயம்பத்தூர் • த.பெ. 59 கான்பூர்-1

AEI-137-TM

# அன்பே ஆரமுதே

## தி. ஜானகிராமன்

### அத்தியாயம் மூன்று

"கலியாண சமயத்துக்குப் பெண்ணைக் காணவில்லை, யாருடனோ ஓடிப் போய் விட்டதே, அப்படி இப்படி என்றெல்லாம் கேட்டிருக்கிறேன். இதிலே மாப்பிள்ளையைக் காணவில்லை. அப்புறம் அந்தப் பெண்ணை எங்கே கலியாணம்பண்ணிக்கொடுத்தார்களாம்?" என்று கேட்டாள் நாகம்மாள்.

"யாருக்குத் தெரியும்? நான் அப்புறம் பத்து வருஷங்கள் கழித்துத்தானே திரும்பி வந்து அம்மாவைப் பார்த்தேன். அப்பொழுது அப்பா இல்லை. மாமா இல்லை. பெரியண்ணா பெரம்பூரில் இருக்கிறார் என்று கேள்விப்பட்டு அங்கே போனேன். விலாசத்தை விசாரித்துக் கொண்டு போனேன். அண்ணா முன் அறையில் முக க்ஷவரம் செய்து கொள்வதற்காக ஜன்னலண்டை உட்கார்ந்து கத்தியைத் தீட்டிக் கொண்டிருந்தார். மன்னி வெந்நீரைக் கொண்டு வந்து வைத்தாள். "என்ன அண்ணா?" என்று கூப்பிட்டுக் கொண்டே கால் கட்டையை வாசலில் கழற்றினேன். அண்ணாவுக்கு ஒன்றும் புரியவில்லை. இரண்டு விநாடிகள் விழித்தார். என் மொட்டைத் தலையையும் பழுப்பு வேட்டியையும் பார்த்து அடையாளம் கண்டு பிடிக்க அவருக்கு இரண்டு விநாடியாச்சு."

"யாரு, அனந்துவா?" என்றார்.

"ஆமாண்ணா!" என்றேன்.

"என்னடா இது?" என்றார். சட்டென்று என்ன தோன்றிற்றோ. "என்ன இது?" என்றார். தாம் 'டா' போட்டது அவருக்கே பிடிக்கவில்லை. மன்னி உள்ளே ஓடினாள். அடுத்த கணமே அம்மா ஓடி வந்தாள். "யாரது! அனந்து வந்திருக்கானுமே. அனந்து! அனந்து!" என்று ஓடிவந்தாள். கண்களில் கரகரவென்று ஜலம் வந்து விட்டது. "அனந்து! அனந்து!" என்றாள்.

என் வேஷத்தைப் பார்த்தாள். அப்புறம் பேசவில்லை. ஏமாற்றி விட்டுப் போனேனே, அதெல்லாம் ஞாபகம் வந்ததோ என்னவோ? நாலு நாட்கள் கழித்



துத்தான் கலகல வென்று பேச வந்தது அவளுக்கு. இப்படி நாளாக ஆக எல்லாம் சரியாகப் போய் விட்டது. கடைசியில் என் கூடவே நாலு வருஷங்கள் இருந்தும்விட்டாள். கலியாணம் பண்ணிக் கொள்ளாமல் மோடனம் பண்ணிவிட்டுப் போன தாபம் எல்லாம் கூட மறந்து போய் விட்டது அவளுக்கு. எனக்கு இரண்டு மூன்று தடவைகள் ஜுரம் வந்து படுத்துக் கொண்டிருக்கும் போது, அவளும் என் தலையை அவள் மடியிலே வைத்து, மருந்து போட்டு, உடம்பைத் தடவி விட்டுச் சின்னக் குழந்தை மாதிரி எல்லாம் செய்து போட்டாள்.''

சிரிப்பு மாறாமல் பேசிக் கொண்டிருந்த அனந்தசாமிக்குக் கண்ணில் நீர் கட்டி நின்றது. மலர்ச்சி மட்டும் மறையவில்லை. '' ஒரே ஒரு சந்தோஷம். இந்தக் காஷாயம் கட்டிக் கொண்ட பிறகு கூட அம்மாவோடு இருந்து அவளுக்குப் பணிவிடை செய்யும்படியாக நேர்ந்தது, பாருங்கள். அது எந்த சன்யாசிக்குக் கிடைக்கும்? அது ஓர் அதிர்ஷ்டம் இல்லையா...ம்?'' என்று கேட்டார்.

நாகம்மாள் அதற்குப் பதில் ஒன்றும் சொல்லவில்லை. அவரைப் பார்த்து வியந்து கொண்டே உட்கார்ந்திருந்தாள். அவர் முகத்தைவிட்டு அகலாத மலர்ச்சியையும், அந்த மிருதுவான சொற்களையும் கேட்கும்போது அவளுக்கு ஏதோ உலக அதிசயத்தைக் காண்பது போல் ஒரு பிரமை. இந்த வியப்பு அவரைப் பார்க்கிற பல சமயங்களில் அவள் கண்களில் வந்து நிற்கும். அவர் போன பிறகும் மனத்தில் வந்து வெகு நேரம் வரையில் தேங்கி நிற்கும்.

* * *

சன்யாசியின் கண்கள் கலங்குகிறதைப் பார்த்துக் கொண்டே அவள் உள்ளே சென்றாள்.

அனந்தசாமி பையைத் திறந்து துணி மூட்டையை அவிழ்த்து, மூக்குக் கண்ணாடியை மாட்டிக் கொண்டு மருந்துப் பொட்டணங்கள் நாலைந்தை எடுத்து மடித்தார். அவர் மீண்டும் மூட்டையைக் கட்டிப் பையில் வைப்பதற்கும், நாகம்மாள் உள்ளிருந்து வருவதற்கும் சரியாக இருந்தது.

'' கொஞ்சம் சாப்பிடுங்கள் !''

'' என்னம்மா ?''

'' எலுமிச்சம் பழம் ஒன்று இருந்தது. பிழிந்து சர்க்கரை போட்டிருக்கிறேன்.''

'' சரி, சாப்பிடுகிறது.''

'' சாப்பாடு ?''

'' அதெல்லாம் ஆகி விட்டது !''

'' எங்கே ?''

'' நானேதான் சமைத்தேன். பருப்புப் பொடி, பாகற்காய் குழம்பு, மோர். கால் மணிக்குள் சமையல் ஆகி விட்டது. சாப்பிட்டேன். எச்சிலிட்டேன். கிளம்பினேன். இந்தாருங்கள். இப்பொழுது ஒரு பொட்டலம், ராத்திரி படுக்கப் போகும் போது ஒரு பொட்டலம். நான் நாளை வந்து பார்க்கிறேன்.''

'' கிளம்பி விட்டீர்களா ?''

'' ஆமாம்மா. இன்னும் நாலைந்து இடங்களுக்குப் போயாகணும்.''

'' அவசரமாகப் போகணும் என்றால் சரி.....''

'' அவசரம் இல்லை. எதிர்பார்த்துக் கொண்டிருப்பார்கள். பதினைந்து நாட்களாயிற்றே போய்.''

'' நாளைக்கு வருவீர்களோல்லியோ ?''

'' கட்டாயம் வரவேண்டும் என்றால் வந்துதான் ஆக வேண்டும். அவசியமிராது என்று தோன்றுகிறது. நான் வந்ததற்கு இப்பொழுது தெளிவாக இருக்கிறதே உங்கள் முகம் !''

'' தெளிவுதான். ஆனால் நீங்கள் நாளை வரவேண்டிய அவசியமில்லை என்று சொல்லுகிற மாதிரி இருக்கிறதோ ?''

அனந்தசாமி சிரித்தார். '' சரி, வருகிறேன் '' என்றார்.

'' கார் அனுப்புகிறேன். எப்பொழுது என்று சொல்லுங்கள்.''

'' வேண்டாம். நான் வீட்டில் இருப்பதும் இல்லாததும் எப்பொழுது என்று நிச்சயமாகச் சொல்ல முடியாது. நானே வந்து விடுகிறேன்.''

''சந்திராவைப்பார்க்க வேண்டாமா?''

'' நாளைக்கு இருக்கச் சொல்லுங்கள். ....அது சரி! அவள் எப்படி இருக்கிறாள்?''

'' நீங்கள்தான் சொல்ல வேண்டும்.''

'' அவள் இஷ்டப்படி விடுங்கள். மனசு கொஞ்சம் தேறட்டும்...அவளை ஒன்றும் சொல்ல வேண்டாம்.''

'' நான் வாயைத் திறக்கிறது கிடையாது. ஆனால் வீட்டில் இருப்புக் கொள்ளாமல் அவள் அலைகிற அலைச்சல்தான் கண்றாவியாக இருக்கிறது. என் மனசும் கிடந்து பறக்கிறது.''

அவள் முகம் வாடுவதைப் பார்த்தார் அனந்தசாமி. '' ராமா ராமா என்று சொல்லுங்கள். எல்லாம் சரியாகிவிடும்'' என்று கூறி எழுந்து கொண்டார்.

'' நீங்கள் சொன்னபடியே செய்கிறேன். ராமனே வழி விடட்டும்...குருசாமி, குருசாமி!.... '' என்று கூப்பிட்டாள் நாகம்மாள்.

'' எதற்கு ?''

'' காரில் கொண்டுவிடச் சொல்கிறேன். எங்கே போகணும் ?''

" மாம்பலம் வந்தாச்சு. பழைய மாம்பலம் போய்விட்டு வரலாம் என்று பார்க்கிறேன். அரை மைல்கூட இல்லே. நான் நடந்து போகிறேன்."

" இல்லே. ஸ்டேஷன் மட்டும் அவன் வரட்டும்" என்று குருசாமியை மீண்டும் கூப்பிட்டாள் நாகம்மாள்.

ஒரு நிமிஷம் கழித்துக் கார் வாசலைக் கடந்தது.

உடனே பரபர வென்று உள்ளே நுழைந்தாள் நாகம்மாள். இத்தனை நேரமாக அவள் வரவழைத்துக் கொண்டிருந்த கிறுகிறுப்பு, சோர்வெல்லாம் அந்தக் காருடனே வெளியே தாவி ஓடி விட்டது போலிருந்தது.

" ருக்கு, ருக்கு !" என்று கூப்பிட்டுக் கொண்டே உள்ளே ஓடினாள்.

" ஏன் ?"

" இவர் தானா ?"

" இவரே தான்."

" இவரேயா !"

" இவரே தான் !"

" நிச்சயமாக !"

" நிச்சயமாக இவரே தான்."

அதைக் கேட்டுப் பொத்தென்று நாற்காலியில் உட்கார்ந்து விட்டாள் நாகம்மாள். இருவருக்கும் பேச்சு வரவில்லை. ருக்கு நெட்டுக் குத்தலாகத் தரையைப் பார்த்துச் சமைந்து கிடந்தாள்.

ருக்குவுக்கு ஏறக்குறைய நாகம்மாள் வயதுதான். ஆனால் அவளைப் போல் தலை நரைக்கவில்லை. கருகருவென்று சிற்றலை ஓடிற்று. வெடவெடவென்று உடல், தென்னம்பூ நிறம். சற்று உயரம் தான். முகத்தில் அளவுமீறிய அமைதி. சதைப் பிடிப்பு இறுக்கம் விடாத அந்த அங்கங்களில்கூட அந்த அமைதி விரவியிருந்தது. நாகம்மாளின் இலேசான தளர்ந்த பருமனுக்கும் ஆவல் நிறைந்த கண்ணுக்கும் பேச்சுக்கும் நேர் எதிராக இருந்தன. இந்த அமைதியும் மென்மையும், சாத்துக்குடியையும் கமலாப் பழத்தையும் எதிரெதிரே வைத்தாற்போல் இருவரும் உட்கார்ந்து கொண்டிருந்தார்கள். அந்த மாதிரிதான் நாகம்மாளுக்குத் தோன்றியது. அதை மனம் விட்டுச் சொல்லியும்விட்டாள்.

"நான் குடகாரஞ்சு மாதிரி கொளகொளன்னு உட்கார்ந்திருக்கேன். நீ சாத்துக்குடி மாதிரி உரிக்க முடியாமல் உட்கார்ந்திருக்கே !" என்றாள் அவள்.



சென்னை சம்ஸ்கிருதக் கழகத்தினர் நடத்திய மறைமலையடிகள் சாகுந்தலம் கட்டுரைப் போட்டியின் பரிசு விவேகானந்தா கல்லூரி மாணவர் திரு எஸ். சீனிவாசனுக்குக் கிடைத்துள்ளது. இப்பரிசுப்போட்டியை ஐயாயிரம் ரூபாய் நன்கொடை வழங்கி நிறுவியவர் காஞ்சி காமகோடி ஸ்ரீ சங்கராச்சாரிய சுவாமிகள் என்பது நினைவிருக்கும். சென்னை சம்ஸ்கிருதக் கல்லூரியில் நடந்த இவ்விழாவுக்கு, திரு கே. பாலசுப்பிரமணிய அய்யர் தலைமை தாங்கிப் பரிசை மாணவருக்கு வழங்கினார்.

" இல்லையே. நீதான் சாத்துக்குடி மாதிரி அழுத்தமாக இருந்தே. கிறுகிறுப்பு, மயக்கம் என்று இத்தனை நாழியா இன்பேஷண்டு மாதிரி பேசிக் கொண்டிருந்தே."

" திருவாரூர்லெ ரயில் ஏறினேன்னு சொன்னவுடனே இவராகத்தான் இருக்கணும்னு என் மனசிலே ஸ்திரமாயிடுத்து. உன்னை உள்ளேயிருந்து இழுத்திண்டு வந்து, 'இவதானா பாரும்'னு கேக்கலாமான்னு பறந்தது உடம்பெல்லாம் !"

ருக்கு பதில் சொல்லவில்லை. மறுபடியும் தரையைப் பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருந்தாள். அந்தக் கண்ணில் ஓர் அச்சம்; விட்டுவிட்டு வந்த பழைய பாதையில் மறுபடியும் ஓடிப் போய் எங்கேயோ நின்ற ஒரு தொலைவு.

நாகம்மாள் அவள் புற அழகைப் பார்த்து லயித்திருந்தாள். ஒரு காலத்தில் உருண்டிருந்த அந்த முகம் கன்னச் சதைகள் குறைந்து, நீண்டு விட்டது போல ஒரு தோற்றம். அந்தத் தேய்வு முகத்தின் அழகைச் செதுக்கியும் குழித்தும் இன்னும் அழகுபடுத்தி யிருந்தது. சற்றுத் தூக்கினாற் போன்ற நாசிநுனி பக்கவாட்டில் பார்க்கும்போது, கத்தியால் வழித்து விட்டாற்போல் வளைவு சரிவின்றி நறுக்கென்று தெரிந்தது. அவள் முகத்துக்கு அழகு கொடுத்ததே அதுதான். அந்த நறுக்கின அமைப்பால் தான் சாதாரணமாக அமைந்த அந்த மேலுதடும், அதற்குச் சமமாக இல்லாமல் சற்று உள்ளே தள்ளியிருந்த கீழுதடும் ஒளியை அதிகமாக வாங்கி இன்னும் அழகுபோல் தோன்றின. நெற்றியில் நேர்வகிடு, பள்ளமில்லாத நெற்றி, சற்றுப் பெரிய அடிக் காது — எல்லாம் தனித்தனியாகப் பார்த்தா

னும், சேர்ந்து பார்த்தாலும் அமைச்சலாக இருந்ததைக் கவனித்தாள் நாகம்மாள். தூர இருந்து பார்க்கிறபொழுது, ஓர் எடுப்பும், அருகில் வந்து பார்க்கையில் தனித்தனியாக, ஒட்டாமல் விண்டும் நிற்கிற அங்க அமைப்பில்லை இது. உதட்டின்கீழ் ஒரு பள்ளம், குழிவாய். அதிலே ஓர் அழுத்தம். அகன்ற வழிந்த தோள் — தென்னை அடிமட்டை போல், இல்லை, பரசுராமன் கோடரிபோல் சட்டென்று இடையை நோக்கிச் சரிகிற முதுகு.

அப்பா! என்ன அழகு! ஆனால் கொஞ்சம் பயப்படுத்துகிற அழகுதான்.

இந்த முதுகின் கோடரி அழகையும் வாயைக் கட்டிப் போடுகிற இந்த முகவாயையும் கண்டு பயந்துதான், சொல்லிக் கொள்ளாமல் புறப்பட்டு விட்டாரா அனந்தசாமி!—நாகம்மாளுக்கு ருக்குவின் உடலை விட்டுக் கண்ணை எடுக்க முடியவில்லை.

ருக்குவின் முகத்தில் ஓர் அச்சம்! இப்பொழுது ஒரு புன்முறுவலின் நிழல் படர்ந்தது.

''எனக்கு ருக்கு......?''

ருக்கு திரும்பினான். அந்த நறுக்கு மூக்கைக் கடிக்க வேண்டும் போலிருந்தது நாகம்மாளுக்கு. அதைப் பார்க்கப் பார்க்க அவளுக்குத் தாங்கவில்லை.



"சண்டாளி! இவ்வளவு அழகாயிருக்கியேடி நீ!" என்றாள்.

"என்னது இது!"

"கிட்ட வந்து பார்க்கப் பார்க்கத் தாண்டி உன் அழகு ஒவ்வொண்ணுகக் கிளம்பறது."

"கிளம்பி என்ன பண்ணும்?"

"அதைத்தான் நானும் யோசிச்சிண்டிருக்கேன்......" மறுபடியும் ருக்கு இலேசாகச் சிரித்தாள்.

"என்னத்துக்கு இந்தச் சிரிப்பு, மந்தஹாசம் எல்லாம்! சொல்லித் தொலையேன். பிரமாதமா கண்ணை நெட்டுக் குத்தி யோசிச்சிண்டிருந்தியே! என்னத்தைப் பார்த்துண்டிருந்தே சொல்லேன்."

"அன்னிக்கி நடந்த ரகளையைத் தான். மாப்பிள்ளை அழைக்கிறதுக்காக எல்லாம் கிளம்பியிருக்கு. மாப்பிள்ளையைக் காணும். குளம் குட்டையெல்லாம் தேடினுர்கள். தோப்பு, சத்திரம் எல்லாம் சல்லடை போட்டுச் சலித்தார்கள். போட்டது போட்டபடியே கூடம் சமையலறைன்னு அங்கங்கே பலர் உட்கார்ந்து விட்டார்கள். அம்மா பிரமை பிடித்தாற்போல் உட்கார்ந்திருந்தாள். காஸ்விளக்கு 'புஸ்'ஸுனு சத்தமிட்டு எரிஞ்சிண்டிருந்தது. நான் அதையே கேட்டுக்கொண்டு உட்கார்ந்திருந்தேன். அழுகை வரவில்லை எனக்கு. குழந்தைகள் எல்லாம் தூங்கிக் கொண்டிருந்தன. நான் ஒவ்வொன்றுகப் பார்த்துக் கொண்டு அமர்ந்திருந்தேன். சம்பந்திகள் இறங்கியிருந்த ஜாகையிலும் யாரும் தூங்கவில்லையாம். இன்னும் தேடிக் கொண்டிருந்தார்கள். திடீர் என்று ஒருபயம் வந்து, எங்காவது ஆற்றில் குளத்தில் விழுந்து — கொஞ்ச நேரம் இப்படி பயந்து நடுங்கினேன். அப்புறம் தோணித்து! யாருக்கு யார் என்ன சம்பந்தம்! திடீரென்று இந்த ஊருக்கு வந்து நிம்மதியாக, சந்தோஷமாக இருந்தவர்களை இப்படிக் கதிகலங்க அடிச்சு, அவமானப்படுத்தி ஊரெல்லாம் பார்த்து இரக்கப்பட்டு முச்சுக்கொட்டும்படியாப் பண்ண இவர்கள் யார்? அநாகரிகம் பிடித்த கும்பல் என்று ஆத்திரம் வந்தது. அவர்கள் என்ன செய்வார்கள்? நம்மைப்போல் அவர்கள் தவிக்கிற தவிப்பு! அவர்களையும் பார்த்து இரக்கப்படத்தான் வேண்டியிருந்தது...."

ருக்கு நிறுத்தி விட்டாள். நாகம்மாளும், தானே பேச்சு தொடர்ந்து வரும் என்று மேலே பேசாமல், குறுக்கிடாமல் அவளைப் பார்த்தவாறு உட்கார்ந்திருந்தாள். அவள் கண்ணும் அந்தக் காட்சியை, 'புஸ்' என்று எரியும் காஸ் விளக்கையும், தூங்கும் குழந்தைகளையும், பிரமை பிடித்த பெரியவர்களையும், அரிக்கேன் விளக்குடன் ஊரில் குளம் குட்டைகளில் தேடும் உருவங்களையும் பார்த்துக் கொண்டிருந்தது.

"தூக்கம் எப்படி வரும்?" – ருக்கு மீண்டும் பேசினுள். "நடுநிசி இருக்கும். தாத்தா வந்தார். அம்மாவுக்கு அப்பா; அம்மாவிடம் வந்தார். 'காமு; பேசாமல் எழுந்திரு, நான் முடிவு பண்ணிப்பிட்டேன். நாளைக்கு முகூர்த்தம் தவறப்படாது. அதே முகூர்த்தத்திலே கலியாணம் நடக்கத்தான் போகிறது. நம்ம நடேசனை மணையிலே உட்கார வைச்சுத் தாலி கட்டச் சொல்லப் போகிறேன். என்ன சொல்லறே?' என்ருர்.

நடேசன் தாத்தாவுக்கு அத்தை பேரன், கலியாணத்துக்கு வந்திருந்தான்.

"என்ன சொல்லறே, காமு! இந்தப் பிள்ளைக்கு அவன் என்ன குறைச்சலாப் போயிட்டான்? படிப்பு அவ்வளவு இல்லை. எட்டு கிளாஸ்தான் படிச்சிருக்கான். ஆனு மளிகைக் கடையிலே தினம் இருநூறு ரூபாய்க்கு வியாபாரம் பண்ணுகிருன். தினம் இருபது ரூபாய் மீக்கருன். உறவுக்கு உறவாச்சு, அன்னி - அசல், எப்படியோ என்னவோன்னு பயமில்லே. என்ன சொல்லறே?' என்று கெடுபிடியாகக் கேட்டார். அம்மாவுக்கு ஒன்றும் புரியவில்லை. பேசாமல் உட்கார்ந்திருந்தாள். தாத்தா கிட்டி கட்டினுர். 'எனக்கும் ஒண்ணும் புரியலேயேப்பா! அவாகிட்டே சொல்லுங்கோ' என்று அப்பாவைக் காண்பித்தாள். அப்பா அங்கு இல்லே. மாப்பிள்ளையைத் தேடப் போயிருந்தார்போலிருக்கிறது. அரைமணி கழித்து அம்மாவிடம் வந்தார் தாத்தா. 'தாத்தா, நாளைக்கு முகூர்த்தம் நடக்காது!' என்று சுவரோரமாக உட்கார்ந்திருந்த நான் கத்தினேன்.

'ஏன் நடக்காது? ஏன் நடக்கப் படாது?' என்ருர் தாத்தா.

'நடக்காது. நடக்கவும்படாது!' என்று நான் அழுத்தமாகப் பதில் சொன்னேன்" என்ருள் ருக்கு.

"அப்ப உன் முகவாயைப் பார்த்து நடுங்கிப் போயிருப்பாரே, உங்க தாத்தா!'' என்றாள் நாகம்மாள்.

"இல்லே. 'குழந்தே! உன் இஷ்டத்துக்கு மாறா ஒண்ணும் நான் சொல்லலே. ஆளேயே காணோம், இது என்ன அவமானம்! இதை எப்படிச் சகிச்சுக்கிறது? இதே முகூர்த்தத்திலே கலியாணத்தை நடத்திக் காண்பிக்க வேண்டாமா அவர்களுக்கு. இளிச்சவாயன்னு பட்டம் கட்டிக்கிறதா?' என்றார் தாத்தா. நான் அப்பொழுது துணிச்சலாகத் திருப்பிக் கேட்டேன். நிசிப்பிசகாகத்தான் இருந்தது; சடேரென்று சொல்லணும்னு தோணித்து, கொட்டிப்புட்டேன்.''

"சொல்லேன், நானும் கேக்கறேன்.''

"'இது என்ன தாத்தா, மரத்துப் போன பசுமாடா? திடீர்னு இதே வேளையில் வேறொருத்தனைக் கொண்டு தாலி கட்டச் சொல்றேங்கறேளே — இது என்ன, மனுஷாக் கல்யாணமா? மாட்டுக் கலியாணமா?' என்று கேட்டு விட்டேன். தாத்தாவுக்கு மூஞ்சி சின்னதாகப் போயிட்டுது. தலையைக் குனிஞ்சிண்டே வெளியிலே போயிட்டார்.''



"நீ கேட்கிறவள் தாண்டி அப்படி!'' என்று நாகம்மாள் சிரித்தாள். ஆனால் அந்தச் சிரிப்பில் நெஞ்சையடைக்கிற கருணையும் நிறைந்துதான் கிடந்தது.

மறு நாள் தாத்தா அரற்றிக்கொண்டாற்போல் அதே முகூர்த்தத்தில் ஒன்றும் நடந்துவிட வில்லை. காணாமற் போன மாப்பிள்ளை வரலாம், வரலாம் என்று முகூர்த்த நேரம் வரை பார்த்து விட்டு ஏமாந்து போய், சம்பந்தியாக வந்தவர்கள் மூட்டையைக் கட்டினார்கள். அனந்தசாமியின் தகப்பனார் மட்டும் எல்லோரும் கிளம்பி மறைந்ததும் பெண் வீட்டுக்குள் வந்து எல்லோருக்கும் கூடத்தில் நெடுஞ்சாண்கிடையாக விழுந்து வணங்கி, 'என்னை எல்லாரும் மன்னிச்சுக்கணும். இவ்வளவு அவமானத்தை இப்படித் தலையிலே கட்டிவிட்டுப் போனானே, அவனுக்காகவும் மன்னிப்புக் கேட்டுக்கறேன். இந்தக் குழந்தை எங்கள் வீட்டுக்கு வரணும் வரணும் என்று மனப்பால் குடிச்சேன். அதுக்கு நீ பாக்கியம் பண்ணலேன்னு பகவான் நினைக்கிறான் போலிருக்கு. ஆனால் இவ்வளவு தாமசமாக நினைத்திருக்க வேண்டாம். நீங்கள் ஒண்ணும் மனசிலே வெச்சுக்கப்படாது' என்று மேலே பேச முடியாமல் உதடும் கன்னமும் கோண வெளியே வந்தார். இரண்டு நாட்கள் கழித்து அவரிடமிருந்து ஐந்நூறு ரூபாய் பணம் வந்தது. வாங்கிக் கொண்ட பணத்தை ஏற்கெனவே கொடுத்து விட்டார் அவர். அபராதமாக இந்தப் பணத்தைக் கொடுப்பதாக என்று பணத்தோடு வைத்திருந்த கடிதம் சொல்லிற்று. ருக்குவின் தகப்பனார் அதை உள்ளூர்க் கோவிலின் ஜீரணோத்தாரண கைங்கரியத்துக்காகச் சேர்த்து விட்டார்.

ருக்குவுக்கும் அந்த முகூர்த்தத்தை விட்டபிறகு கலியாணம்ஆவதாக இல்லை. ஒரு வருஷம், இரண்டு வருஷங்கள் ஆகிவிட்டன. வீட்டில் எல்லோருக்கும் திக் திக்கென்றது. இவ்வளவு பெரிய பெண்ணைக் கலியாணமாகாமல் வீட்டில் வைத்துக் கொண்டிருப்பது, ஏதோ திருட்டுச் சொத்தை வைத்திருப்பது போல, விஷ மருந்தைக் காப்பாற்றுவது போல் இருந்தது. பேச்சுக்கும் வம்புக்கும் அவ்வளவு பயந்து நடுங்கின காலம். அப்பாவும் தாத்தாவும் வேறு எங்கெங்கோ வரன் தேடிக் கொண்டிருந்தார்கள். மற்றப் பெண்கள் பலருக்குக் கலியாணமாகி விட்டது, ஆகியும் கொண்டிருந்தது.

"கடைசியில் பிள்ளையின் அப்பா சொல்லிவிட்டுப் போனாரே நமஸ்காரம் பண்ணிக் கொண்டே, அது என்னைக் கொட்டி விட்டது. பூச்சி கடித்தால் கொடுக்கு மட்டும் தோளில் மாட்டிக் கொள்ளுமாமே, அந்த மாதிரி அவர் சொன்னது என் மனசில் மாட்டிக் கொண்டு விட்டது. நினைத்து நினைத்து மனசு அரிக்கும். அது நாளாக ஆக பெரிய வீக்கமாகிவிட்டது'' என்று ருக்கு மறுபடியும் பேசிக் கொண்டிருந்தாள்.

"நீ சொன்னே பாரு—என் முகவாயைப் பார்த்து அவர் பயந்து ஓடிப்போய் விட்டாரோ என்று. அப்படி ஒன்றும் நெஞ்சுரப்போடு, அழுத்தமாக இல்லை. உள்ளுக்குள்ளே அதிர்ந்து கலங்கி

"என்ன அழகு....என்ன குளுமை....
என்ன மென்மை...இதை அணிய
எனக்கும் ஆசைதான்..."

மன்னிக்கவும், பால்போல் வெண்மையுடன் காணப்படும் கான்கறர் ஷர்ட்டிங்கும், மலர் இதழின் மென்மையான கான்ஸல் ஸாடின் டிரில்லும் ஆண்களுக்கென்று பிரத்தியேகமாகத் தயாரிக்கப் பட்டவை. இதை அவர்கள் அணிந்தால் பொலிவுடனும், நேர்த்தியுடனும் விளங்குவார்கள். இவ்விரு துணிகளும் நீண்ட நாள் உழைக்க வல்லதோடு வண்மையானதும்கூட.

**கான்ஸல்***
ஒயிட் ஸாடின் டிரில்

**கான்கறர்**
உயரிய பாப்ளின் ஷர்ட்டிங்




உங்களுக்குத் தேவையான பின்னி துணிகளை இந்த அடையாளம் காணப்படும் அனுமதி பெற்ற கடைகளிலிருந்து கண்ட்ரோல் விலைக்கே வாங்கவும்.

·SANFORIZED·

"ஸான்பொரைஸ்டு" என்பது க்ளுயட் பீபாடி & கம்பெனியாரின் ரிஜிஸ்டர்டு டிரேட் மார்க்.

பக்கிங்ஹாம் & கர்னாடிக் கம்பெனி லிமிடெட்
உரிமையாளர்கள்: பின்னி & கம்பெனி (மதராஸ்) லிமிடெட்

IWT/SC/CC/1304

விட்டேன். இன்னதென்று தெரியாத ஒரு பயம் என் மனசில் புகுந்து விட்டது. யாராவது இரைந்து பேசினால்கூட என் மனசு நடுங்கும். அப்பா யாராவது ஆளோடு கத்துவார். அம்மா வேலைக்காரியைப் பார்த்துக் கொஞ்சம் உஷ்ணமாக ஏதாவது சொல்லுவாள். இதெல்லாம்கூட எனக்குக் கேட்க முடியவில்லை. யாரும் இரையக் கூடாது. இரைந்து சிரிக்கக் கூடாது. டமால் டமால் என்று பக்கெட்டைக் கீழே வைப்பது, பாத்திரங்களை வேகமாக வைப்பது, கதவுகளைச் சத்தம் போட்டுச் சாத்துவது - இவையெல்லாம் என்னை திக்திக்கென்று அரளச் செய்யும்.

"இரண்டு வருஷங்கள் கழித்து ஒரு மாத லீவில் ஒன்றுவிட்ட பெரியப்பா டில்லியிலிருந்து வந்திருந்தார். அவர் பெண் டில்லியில் படித்துக் கொண்டிருந்தாள். வந்த இடத்தில் அம்மை போட்டுத் திடீரென்று குளிர்ந்து விட்டாள். ஒரு மாதம் கழித்து அவர் ஊருக்குப் போவதற்கு முதல் நாள் நான் அவரோடு தனியாகப் பேசிக் கொண்டிருந்தேன். 'பெரியப்பா! எனக்கு இரண்டு தங்கைகள் இருக்கிறார்கள், ஆறு வயதிலும் மூன்று வயதிலும்' என்றேன் திடீரென்று.

'ஆமாம்.'

'உங்களுக்கு லீலா ஒருத்திதான் இருந்தாள். ஸ்வாமிக்கு அதுகூட அதிகம் என்று பட்டு விட்டது...'



பெரியப்பாவுக்கு நினைவெல்லாம் மீண்டும் பொங்கி உடல் குலுங்கியது. பல்லைக் கடித்துச் சாந்தப் படுத்திக் கொள்ள இரண்டு நிமிஷமாயிற்று.

'பெரியப்பா! நானும் டில்லிக்கு வரேனே. உங்களோடு வந்து இருக்கிறேனே' என்றேன் நான்.

ஒன்றும் புரியாமல் என்னை நிமிர்ந்து பார்த்தார். நான் வாய்விட்டுச் சொல்லவில்லை. ஆனால் என் மனசில் அப்பொழுது ஓடின எண்ணம் அவருக்குத் துளியாவது புலப்பட்டுத் தானிருக்கும்.

'பெரியப்பா! நான் உங்களோடே இருக்கிறேன். பெற்றவர்கள் வீட்டில்தான் ஒரு பெண்ணுக்கு இருப்பது சிரமம் - இந்த வயசில் அவளுக்கு இங்கே இருக்கும் உரிமை கிடையாது. அவர்களும் சரி, ஊரும் சரி - அதைப் பார்த்துக் கொண்டிருக்க மாட்டார்கள். பெறாத பெற்றவர்கள் வீட்டில் இருப்பதை யார் என்ன சொல்ல முடியும்?' என்று நான் அப்பொழுது அவரை மனசுக்குள்ளேயே கேட்டுக் கொண்டிருந்தேன்.

'ருக்கு, உன்னை அழைத்துப் போகணும் என்று தோன்றவில்லை எனக்கு. நடக்க முடியாத காரியம் எப்படி மனசுக்குப் படும்? நிச்சயமாக நீ வருகிறாயா? நீ அங்கேயே இருக்கலாம்; படிக்கலாம். டில்லி உனக்கு ரொம்பப் பிடிக்கும். இப்படி அடைந்துபோய்க் கிடக்க வேண்டாம் அங்கே.'

பெரியப்பாவுக்குத் திடீரென்று முகம் மலர்ந்துவிட்டது. நான் வருகிறேன் என்று சொன்னதே, இத்தனை நாளாக யாரும் பார்க்காத ஒரு கதவைத் திறந்து 'இதெல்லாம் உன்னுடையது' என்று ஒரு பெரிய தோட்டத்தைக் காண்பித்தால் எப்படியிருக்கும்? அந்த மாதிரி ஒரு பரபரப்பும், ஒரு புதுப் பூரிப்பும் பெரியப்பாவின் உடலுக்குள் புகுந்து விட்டன. சந்தோஷத்தில் அவர் என்னென்னமோ பேசிக் கொண்டிருந்தார்.

'ஒரே ஒரு மாதம் வந்திருக்கட்டும்.... அப்புறம் கொண்டு வந்து விட்டு விடுகிறேன்' என்று பெரியப்பா அப்பாவையும் அம்மாவையும் சம்மதிக்கச் செய்து விட்டார்.

சில குழந்தைகள் யார் கூப்பிட்டாலும், எங்கே கூப்பிட்டாலும் கிளம்பி விடுமே, அந்த மாதிரி புடவை, துணிமணி எல்லாவற்றையும் எடுத்துக் கொண்டு கிளம்பி விட்டேன். அந்தச் சமயத்தில் விட்டு விட்டுப் போய் விட்டால் குழந்தை மாதிரி கத்தி அழுதுகூட இருப்பேனோ என்னவோ."

நாகம்மாள் அதைக் கேட்டுச் சிரித்தாள். அவள் கண்கள் ருக்குவின் முகத்தை விட்டு அசையவில்லை. ஒவ்வொன்றாக அனுபவித்து, முப்பது வருஷங்களுக்கு அப்பால் நின்று, மனசு ஒட்டியும் ஒட்டாமலும் அவள் சொல்லிக் கொண்டிருந்ததைக் கேட்டு லயித்து விட்டாள். மையைப் பார்த்துக் கொண்டே சொல்லும் மந்திரவாதியைக்




மனிதர்களின் இன்றையத் தேவைகளில் ரப்பர் ஒரு முக்கிய அங்கமாகி விட்டதென்பது தெரிந்த விஷயம். ஆனால் அது மனிதனுடைய இழந்து போன அங்கத்தையே ஈடு செய்யக் கூடும் என்பது பலருக்குத் தெரியாத விஷயம். குழாய் ரப்பரிலிருந்து, நுரை ரப்பர் வரை அதில் எத்தனையோ ரகம். இவை போன்ற தெரியாத பல ருசிகர விஷயங்களை விளக்கும் ரப்பர் கண்காட்சியை ஏப்ரல் 7ந் தேதியன்று தொழில் மந்திரி ஸ்ரீ ஆர். வேங்கடராமன் சென்னையில் திறந்து வைத்தார். கண்காட்சிக்கு ஏற்பாடு செய்தவர்கள் மதராஸ் ரப்பர் பாக்டரியாரும், எம். எம். ரப்பர் கம்பெனியாருமாவர்.

---

கேட்பது போலிருந்தது அவளுக்கு. ருக்கு பேசிக் கொண்டேயிருந்தாள். ருக்குவோடு நாகம்மாள் நெருங்கிப் பழகுவது இதுதான் முதல் தடவை. அதாவது இவ்வளவு நெருங்கிப் பழகுவது. நாகம்மாளுக்கும் ஒரு புதுக் கதவைத் திறந்து விட்டது போல்தான் இருந்தது, ருக்குவோடு பேசுவது.

டில்லிக்கு அழைத்துப் போன பெரியப்பா ஒரு மாசம் கழித்து ஊருக்கு அவளைக் கொண்டுவிட வில்லை. அங்கேயே ஒரு பள்ளிக்கூடத்தில் சேர்த்து விட்டார். கொஞ்சம் கொஞ்சமாகத் தமக்குப் பெண்ணில்லாத குறையை அவர் தீர்த்துக் கொண்டிருப்பதாக எழுதினார். அந்த வருஷக் கடைசியில் கோடை விடுமுறைக்குத்தான் ஊருக்கு வந்தாள் ருக்கு.

* * *

ருக்குவின் கல்யாணப் பேச்சை மறுபடியும் தொடங்கினார்கள் பெற்றோர்கள். 'இன்னும் ஒரே வருஷம் மட்டும் படித்து விடுகிறேன்' என்றாள் ருக்கு. டில்லிக்குத் திரும்பி விட்டாள். ஒரு வருஷம், இன்னும் ஒரு வருஷம் என்று ஐந்து, ஆறு, ஏழு என்று வருடங்கள் வேகமாகப் போய்க் கொண்டேயிருந்தன.

ஆறாம் வருஷம் ஊருக்கு வந்தபோது அவள் பூரித்து உயர்ந்து குலுங்கினாள். அம்மாவுக்கு என்னவோ கொடி கொம்பின்றி, அணைப்பின்றிக் கிழே புரளுவது போலிருந்தது. அவள் அழகைக் கண்டு பிரமித்தாள்; பெருமூச்சு விட்டாள்.

"இப்படியே இடுதண்டியா எத்தனை நாள் நிற்கப் போறே? கல்யாணம்னு வாயைத் திறந்தால், 'பார்த்துக்கலாம்னு, பார்த்துக்கலாம்னு' அந்தண்டை ஓடிப் போய் விடுகிறாயே!"

"கல்யாணம்னு கழுத்தை நீட்டின போது ஓடிப் போய்ட்டான் ஒருத்தன். இனிமேல் நான் கழுத்தை நீட்டறபோது தான் வரட்டுமே?"

"தானா வருவானா?"

"என்னமோம்மா, நீ பேசறதே ஒண்ணும் பிடிபடலே எனக்கு."

எட்டாவது வருஷம் ஆன பிறகு, ருக்கு கல்லூரியில் ஆசிரியையாகி விட்டாள் என்று கடிதம் வந்தது. அந்த வருஷம் டிசம்பர் மாதம் அப்பாவுக்கு ரத்த அழுத்தத்தினால் பாரிச வாயு வந்து விட்டது என்று டில்லிக்குத் தகவல் போயிற்று. ருக்கு அவசரம் அவசரமாக ஓடி வந்தாள். அப்பாவுக்கு வெறும் பாரிசவாயு இல்லை. மயக்கமாக விழுந்து கிடந்தார். ஒரு வார மயக்கம். அவளைக் கூடக் கண்ணைத் திறந்து பார்க்கவில்லை. அவள் வந்த மூன்றாம் நாள் அவர் கண்ணைத் திறக்காமலேயே அடங்கிவிட்டார்.

"எனக்கு வேலை கிடைச்சு நானும் பணம்னு சம்பாதிச்சு, சுதந்திரமாயிருக்க ஆரம்பிச்ச பிறகு அப்பா என்னைப் பார்க்கவில்லை. நான் சம்பாதிச்ச பணத்திலே என் தங்கைக்குக் கல்யாணம் பண்ணி வைக்கணும், அவர் அதைப் பார்க்கணும்னு கோட்டை கட்டிண்டேயிருந்தேன். ஆனா, அப்பா கடைசியாகப் பார்க்கக்கூடக் கண்ணைத் திறக்கவில்லை. அதை நினைச்சுத்தான் எனக்கு மனத்துக்குச் சிரமமாயிருந்தது..."

ருக்கு பேசிக்கொண்டே வந்தவள் சற்று நிறுத்தினாள். நாகம்மாளுக்கு அவளைப் பார்க்கப் பார்க்கப் பிரமிப்பாக இருந்தது. (தொடரும்)

---

இந்தக் கதையில் வரும் ஒரு காட்சியைத்தான் அட்டைப்படமாகச் சித்திரித்திருக்கிறார் ஓவியர் விஜயா.

பிரபல பல்வைத்திய நிபுணர்கள் நிரூபித்துள்ளனர்

# கால்கேட் குளோரோபில்




## ஈறுகளை பலப்படுத்துகிறது

**வாய் நாற்றத்தை அதி தீவிரமாய் ஒழிக்கிறது!** "ஆல் மோஸ்கோப்" பரிசோதனைகளில், கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்ட், வேறெந்த சாதாரண பற்பசையையும்விட மிகத்தீவிரமாக வாய் நாற்றத்தை ஒழிக்கிறது என்பது நிரூபணமாயுள்ளது.

**சொத்தையாக்கும் கிருமிகளை ஒழிக்கிறது!** கால்கேட் குளோரோபில் டூத் பேஸ்டை ஒவ்வொரு முறையும் சாப்பிட்டவுடன் தேய்ப்பதால், பற்களை சொத்தையாக்கும் கிருமிகள் அழிகின்றன.

கால்கேட்டின் பிரத்தியேகமான சேர்க்கை முறையைக் கொண்ட குளோரோபிலின் பூரண பலனை அடையுங்கள்.... கால்கேட் குளோரோபில் டூத் பேஸ்ட் அல்லது கால்கேட் குளோரோபில் டூத் பவுடர் வாங்குங்கள்!

கால்கேட் குளோரோபில் டூத் பேஸ்டை தினமும் தேய்ப்பதால், தீவிரமான குளோரோபிலின் பூரண தன்மையை அடைந்து, ஈறுகள் உறுதியாகவும் ஆரோக்கியமாகவும் இருக்க ஏதுவாகிறது. உன்னதமான இந்த குளோரோபில் டூத்பேஸ்ட், சிறந்த பற்பசை, பற்பொடி முதலியவை தயாரிப்பதில் மிக்க அனுபவங்கொண்ட உலகிலே மிகப்பெரிய ஸ்தாபனத்தால் தயாரிக்கப்படுகிறது!

வேறு எந்த பற்பசையிலும்
இதைவிட அதிக வீரிய குளோரோபில்
இல்லை — குழந்தைகள் அதன்
பெப்பர்மின்ட் வாசனையை மிகவும்
விரும்புகிறார்கள்!







CTPA-G-10 TAM.



# நரி வேட்டை

கதை: ஜெயந்தி

சித்திரம்: விநு

2

காலிம்பாங்கில் 'நரி' வேட்டையாட வந்த குமார் புதுதில்லியில் தனக்கு நேர்ந்த ஆபத்து பற்றிச் சிந்திக்கிறான்...










வாசலில் விழுந்து கிடக்கும் கணவனைக் காண்கிறாள் ஷியாமா.
ஐயோ! உங்களுக்கு என்ன?


எல்லோருமாகச் சேர்ந்து குமாரை உள்ளே தூக்கி வந்து படுக்கையில் கிடத்துகிறார்கள்.
மயங்கி விழக் காரணம் என்ன?
டாக்டருக்குப் போன் செய்யவா?


தயவு செய்து என்னை அவருடன் சற்றுத் தனிமையிலிருக்க விடுங்கள்.


குமார் கண் விழிக்கிறான்.
என்ன நடந்தது?
நானும் அதைத் தான் கேட்கிறேன்


என்னைச் சிநேகிதிகளின் உதவியுடன் தூக்கிக் கொண்டு வந்ததாகவா சொல்கிறாய்?
ஆமாம்!


திடீரென்று ஏதோ நினைவுக்கு வந்தவனாக பாக்கெட்டுகளைத் தேடுகிறான் குமார்.
ஆ! மேலதிகாரி பல்தேவ்சிங் கொடுத்த குறிப்புகளைக் காணோமே!


இருவரும் தோட்டத்திற்கு வந்து தேடுகிறார்கள்.
அந்தத் தடியன் திருடிக் கொண்டு போய்விட்டான்.
என்ன செய்வதாக உத்தேசம்?
நாளை காலிம் பாங் போகவேண்டியதுதான். இங்கு நடந்தது பற்றி மூச்சு விடாதே!


நான் அந்தக் குறிப்புகளைப் படிக்கவில்லை என்பது அந்தக் குள்ளநரிகளுக்குத் தெரியாது. நமக்குக் கவலை இல்லை.


அரை மணி நேரத்துக்குப் பிறகு....
இன்னும் என்ன யோசனை? பால் சாப்பிட்டு விட்டுப் படுங்கள்.


என் கடிகாரத்தை ஞாபகார்த்தமாக வைத்துக்கொள்ளுங்கள்!


நான் ஏதாவது சிக்கலில் அகப்பட்டுக் கொண்டால் 'கயிறு இறுகுகிறது' என்று உனக்குத் தந்தி கிடைக்கும்.


ஷ்யாமா!
குமார்!


மறுநாள் காலையில்
என்ன செய்கிறான் இவன்?
தாங்க்யூ!


போக்கிரிப் பயலே! ஓடவா பார்க்கிறாய்?


தப்பித்து விட்டான்! எதற்கு என்னைப் போட்டோ பிடித்தான்?


காஸிம் பாங்கில் வீதியோடு நடக்கும் குமாரின் சிந்தனை முற்றுப் பெறுகிறது.....
அந்தப் போட்டோ தான் சீனக் கிழவனிடம் கிடைத்திருக்குமோ? குள்ளநரிகள் விழிப்போடு தான் இருக்கின்றன.
தயவு செய்து சற்று இருங்கள்

தொடரும்

# அவல் பாயசம்





வெறும் வாயை மெல்லும் பிரிட்டிஷ் பாராளுமன்ற அங்கத்தினர்களுக்கு, நிஜ அவலே கிடைத்தால் விடுவார்களா? விருந்துண்ட மந்திரியின் சேதி விவாத அரங்கத்துள் வட்டாட வந்து விட்டது. எதிர்க் கட்சித் தலைவர் எழுந்து ''கனம் மந்திரி அவர்கள் அவல் பாயசத்தின் அருமை பெருமைகளைப் பாராட்டியதைப் பத்திரிகைகளில் பார்த்தோம். இவ்வாறு இவர் பாராட்டியது தமது உத்தியோகப் பொறுப்பிலா? பதவியின் காரணமான பாராட்டுரைகளா? அல்லது வெறும் சாப்பாட்டுராமன் என்ற முறையிலா?'' எனக் கேட்டார். அவ்வளவுதான் சபையில் சரமாரியாகக் கேள்விகள் எழுந்தன; விழுந்தன.

புத்தாண்டு தினத்தன்று விருந்துண்ட மந்திரி, ''என் சொந்தப் பொறுப்பில் சொன்னேன்'' என்பதாக ஒப்புக் கொண்டார். எதிர்க்கட்சி அங்கத்தினர் ''தனியார் துறையும் சர்க்கார் துறையும் அவல் பாயசம் தயாரிப்பதில் கருத்து வைக்க வேண்டுமெனச் சொன்னதின் நோக்கம் என்ன?'' என்று வினவினர்.

உடனே தனிப்பட்டவர்களிடமிருந்தும், சர்க்கார் துறை அங்கத்தினர்களிடமிருந்தும், கைதட்டல்கள் எழுந்தன. என்றோ விருந்துக்குப் பாராட்டுரை வழங்கிய மந்திரி இடித்த அவலாக இருந்தார். மந்திரியைக் காப்பாற்ற எழுந்த கட்சித் தலைவர் சொல்லுவார்:

''எச்கப் பாட்டியம்மையார் தயாரித்த விருந்தை எவர் உண்டிருந்தாலும் அவல் பாயசம் தயாரிப்பதைத் தேசியமயமாக்க வேண்டுமெனச் சொல்லுவார்கள். எதிர்க் கட்சித் தலைவரும் அதையே சொல்லி விருப்பார். (கைதட்டல்) நானும் அதையே புகன்றிருப்பேன். விருந்துண்ட என் சக மந்திரியவர்களால் விருந்தை மறக்க முடியவில்லை. ஆனந்த நிலையில் ஆற்றிய உரையாகவே தேசியமயமாக்க வேண்டுமென்றார் போலும். விவாதத்தைப் பார்த்தால் யுனெஸ்கோவுக்கு இச்சேதி பரவி, உலகப் பொதுச் சொத்தாக அவல் பாயசம் மாறுமிருந்தால் போதுமே.''

யார்க்ஷயர் அங்கத்தினர்: தேசியமயமாக்கும் திட்டம் பிரிட்டிஷ் சர்க்காருக்கு இருக்கிறதா?

தலைவர்: நிச்சயமாகச் சொல்வதற்கில்லை. கவனிக்கப்படும்.

பாராளுமன்றத்து நிகழ்ச்சியில் அவல் பாயசம் இடம் பெற்றது குறித்து ரஸிகத் தன்மையுள்ள ஒருவர் நாக்கைச் சப்புக் கொட்டினார். இவர் தமிழகம் வந்து இட்லி-சாம்பார் ருசி கண்டவர். தமிழரின் தனிக் கலையான உணவில் ஈடுபட்டு ருசித்த தாளத்திற்கு இன்னும் இரண்டொருவர் கருதி கூட்டினார்கள். சப்புக் கொட்டுக்கள் பல இணைந்தன. சபாநாயகர் குறுக்கிட்டு, ''அவல் பாயசம் பற்றிச் சட்டசபையில் விவாதமிடலாமே தவிர அப்பாயசத்தை நினைத்துக் கொண்டு 'சப்'பென்று நாக்கினால் சப்புக் கொட்டுதல் சட்டசபை நடவடிக்கைக்குப் புறம்பானது. இதை நினைவு படுத்துதல் என் தலையாய கடமை'' எனச் சற்றுக் கடுமையாகவே பேசி முடித்தார்.

''அங்கத்தினர்கள் கொட்டிய சப்தத்துக்கும் சபாநாயகர் 'சப்'புக்கொட்டிய சப்தத்துக்கும் ஒலி வடிவில் அஜகஜாந்திர வேற்றுமை இருப்பதால், யார் கொட்டிய விவரம் சரியெனப் பவ்யமாகச் சுதந்திர அங்கத்தினர் கேள்விக் கொக்கியை மாட்டி வைத்தார். பரிகாசத்தோடு பாயஸ விவகாரம் முடியும் என்று எதிர்பார்த்ததற்கு மாறாக வேறு திக்கில் விவகாரம் வளர்ந்தது. தொழிற்கட்சி அங்

கத்தினர், ''நம்முடைய நாட்டு புட்டிங் என்ற முறைக்கு எதிராக, கல்தோன்றாத மண்தோன்றிக் காலத்துத் தமிழர்கள் தயாரித்த அவல் வழிப் பாயஸத்தை ஏற்பது அவசியமா? இதனால் மற்றைய வகை உணவுப் பிரச்னையில் எத்தனை சத விகிதத்தில் பிரிட்டிஷ் தொழிலாளர்கள் அவதிப்படுவார்கள்?'' என்று கேள்வி தொடுத்தார்.

சுவாரசியமான கட்டத்தில் சபை ஒத்தி வைக்கப் பட்டது. அவல்பாயஸம் இந்திய ஒட்டல்களில் கிடைக்குமாவென அங்கத்தினர் பலர் டெலிபோன் வழியாகப் பேசி ஏமாந்தார்கள்! எந்த இந்திய விடுதியிலும் அவல் பாயஸம் இல்லையென்று அறிந்தார்கள்.

மறுநாள் பிரபல பிரிட்டிஷ் பத்திரிகைகள் அனைத்தும் சூடு கொடுத்திருந்தன. ''அரசியல் விவாதத்திற்குப் புறம்பான அரிசியல் விவகாரம் செய்தது பிரிட்டிஷ் ஏழை மக்கள்




வரிட்டணத்துக்குச் செய்யும் தீங்கு! அவலை மறப்போம்; அரசியலை நினைப்போம்'' என்று கோஷமிட்டன! ராய்ட்டர் இச்செய்திகளை உலகமெங்கும் கம்பி நீட்டின!

எச்சப்பாட்டிக்கு, ஹைட்பார்க்கு, பிரிட்டிஷ் மியூஸியம் போன்ற இடங்களைக் காண வேண்டுமென ஹேமா சொல்லி யிருந்தாள். பாட்டியைக் காண்பதற்குச் சதா சர்வதா பெரிய கூட்டம் அவர்கள் வீட்டைச் சுற்றி நாலா பக்கமும் நின்றது. மே வெஸ்டு, இரிகிரிப்பக் போன்ற உலக நட்சத்திரங்களைக் காண்பவர்கள்போல ஒவ்வொருவரும் பாட்டியின் தலையைக் காணத் தவித்தனர். விசேஷ போலீஸ் ஜவான்களைக் கொண்டு காவல் காக்கும் பொறுப்பைப் போலீஸ் கமிஷனர் உத்தரவிட வேண்டியதாயிற்று.

பி. பி. ஸி. நிலையத்தில் தமிழ்ப் பகுதியில் நடைபெற்ற பேட்டியைக் கேட்ட நிகழ்ச்சித் துறை அமைப்பு நிபுணர்கள் பாட்டிக்கு இந்திய பாஷைகள் வேறு எவையேனும் தெரியுமாவென ஆராய்ந்தனர். ஆனால் டெலிவிஷன் பகுதியினர் பத்து நிமிடம் 'பாட்டியும்-அவல் பாயஸமும்' என்ற தலைப்பில் நிகழ்ச்சிக்கு ஏற்பாடு செய்து வசனம் டைரக்ஷன் இவற்றை ஆர். ஆர். ஆமன் கையில் ஒப்படைத்தனர். பங்கு பெற்றவர்கள்: ஹேமா-ஆமன் பாட்டி பாத்திரங்கள்: சமையல் பாத்திரங்கள். டெலிவிஷன் நிகழ்ச்சியில் தமிழ் இடம் பெற்றது இதுவே முதல் தடவையென அறிவிப்பும் தந்தனர்.

டெலிவிஷன் நிகழ்ச்சிகளைக் கண்டு ஆனந்தித்த எண்ணிக்கையற்ற மக்களில் நமக்குத் தெரிய வேண்டுமிதவர்கள் பக்கிங்ஹாம் அரண்மனையிலுள்ள சமையலர் தலைவர் மிஸ்டர் ஸ்பூனர் (2) பிரிட்டிஷ் ராணியார் (3) பால் பண்ணைச் சொந்தக்காரரான லார்டு புல் (4) ஜெர்மானிய தத்துவப் பேராசிரியர் கிம்னர் (5) பிரிட்டனில் பெருமளவில் பீர் தயாரிக்கும் மிஸ்டர் பாரல்.

பிரபல பிரிட்டிஷ் - வியாபாரியான பாரல் பீர் விற்பனையை ஒழித்து அதற்குப் பதிலாக அவல் பாயஸத்தைத் தயாரிக்கத் திட்டமிட்டார். இவருக்குத் தேவையான அவல் மூட்டைகளை ஏற்றுமதி செய்து தர ஸ்காண்டிநேவியன் கப்பற் கம்பெனிகள் டெண்டர் செய்தன. மிகக் குறைந்த செலவில் நிஜ அவல் மூட்டைகளைத் தூத்துக்குடி துறைமுகத்து வழியே கப்பலோட்டித் தருவதாக முன் வந்தது ஜப்பான். கூடுமானால் போலி அவலோ அல்லது பிளாஸ்டிக் அவல் மூட்டையோ தங்கள் நாடே அனுப்புமென்றது ஜப்பானிய வர்த்தக சங்கம்.

பிரிட்டிஷ் உணவு கவுன்ஸில் கூட்டிய அவசரக் கூட்டத்தில் "இந்நாட்டுக்கு அவல் பாயஸத்தைத் தேசிய பானமாக ஆக்கினால் விஞ்ஞான ரீதியில் கைபடாமல் தயாரிக்கப் படவேண்டும். இந்நாட்டவர் அன்றாடத் தேவையைப் பூர்த்தி செய்ய மூந்நூறு சமையல்காரர்கள் தேவைப்படுவார்கள். குறுகியகாலச் சமையல் பயிற்சித் திட்டத்தை எச்சப்பாட்டி நடத்தித் தந்தால் அவரிடம் சான்றிதழ் பெற்றவரே பாரல் தொழிற் சாலைக்கு அருகதை யுடையவர். அதுவரை தமிழகத்திலிருந்து அவல் பாயஸ பரிசாரக நிபுணர்களை இறக்குமதி செய்யலாம், அதுவும் ஒரு விதிக்கு உட்பட்டு! ஓராண்டுக் காலத்திற்குள் இறக்குமதி செய்யப்பட்ட பாயஸக் காரர்கள் ஏற்றுமதி செய்யப்பட வேண்டும். இதனைப் பொருளாதார நிபுணர்களைக் கலந்து இருநாட்டுக்கும் எவ்வளவு பொருள் அழிவு-ஆக்கம் ஏற்படுமென அறிவது முதற்கடன் என அறிக்கை விட்டது.

கிளாஸ்கோ உணவு கவுன்ஸில் இதற்கொரு திருத்தம் செய்தது. பிரிட்டிஷ் உணவுக் கவுன்ஸில் நாலாயிரம் பவுன் சம்பளம் வருடத்துக்குக் கொடுத்தால் போதாது; என்றென்றும் பாட்டியின் பெயர் இங்கிலாந்தில் நிலைத்திருக்கப் பாட்டிக்கு ஒரு சிலையை இத்தாலிய நாட்டுச் சிற்பியால் செதுக்குவது ஒன்று; மேலும், கல்லூரியில் சமையல் கலைப் பரீட்சையில் தேறும் மாணவ-மாணவிகளுக்கு 'எச்சப் பாட்டியின் நினைவுக் கோப்பை' ஒன்றும் ஏற்படுத்துவது அறிவுடைமை என்றும் தெரிவித்தது.

இந்திய ஹைகமிஷனர் காரியாலயம் பாட்டியின் சம்பள விகிதம் பற்றி, எவ்வித யோசனையும் தாங்கள் சொல்ல விரும்பவில்லை; என்றாலும் ஆக்ஸ்போர்டில் பட்டம் பெற்ற பேராசிரியர் ஆங்கிலம் - தமிழ் - இரண்டிலும் கைவந்த ஒருவர் பாட்டிக்கு பிரைவேட் செகரெட்டரியாகவும் துபாஷியாகவும் நியமனம் செய்யப்படுவது அவசியமென வலியுறுத்தி யிருந்தது.

பாட்டிக்கு வீட்டை விட்டு வெளியில் இறங்க முடியாத கஷ்டங்கள். சதா பேட்டி காணவும், யோசனைகள் கேட்கவும் நிபுணர்கள் வந்தார்கள். பிரிட்டிஷ் தொழிலதிபர் பாரல் தேடி வந்தபோது பேட்டிக்கு நேரமில்லை யென்றாள். பாற்பண்ணைத் தொழில் அதிபர் மிஸ்டர் புல், தமது காணிக்கையாக இரண்டு சினைப் பசுக்களை ஏற்றுக் கொள்ள வேண்டும் என்றும் வேறு எவ்விதமான சலுகைகளும் தமக்கு வேண்டாமென்றும் கோரிப் பேட்டி கேட்டார். பாட்டி, 'பசுவைத்தானம் செய்வதையே தாம் விரும்புவதாகவும் தானம் ஏற்பதற்கு இல்லையென்றும் மறுத்தார். மிஸ்டர் புல் உண்ணாவிரதம் என்ற சொல்லை உச்சரித்ததும் "நான் ஊருக்குத் திரும்பும் போது கொடுங்கள்" என்றார். ஜெர்மானியத் தத்துவஞானி டாக்டர் கிப்னர் பேட்டிக்காகக் காத்து நின்ற போது பங்கிங்ஹாம் அரண்மனைச் சின்னம் தாங்கிய மோட்டார் வந்தது.

வெளியே வந்தவர் சாட்சாத் ஸ்பூனர். அவர்தாம் அரண்மனைப் பிரதம மடையர். (அதாவது சமையலர்)

தொழிலதிபர் ஆமன்—ஹேமா இருவரும் வியர்த்து விறுவிறுத்துப் போனார்கள். அரண்மனையிலிருந்து என்ன சேதி வந்திருக்குமோ வென விதிர்விதிர்த்தனர்.

மிஸ்டர் ஸ்பூனர் தமது சொந்தப் பொறுப்பில் பாட்டியைப் பேட்டி காண வந்திருப்பதாகச் சொன்னவுடன்தான் அவர்களுக்கு வந்த உதறல் திரும்பிப் போயிற்று.

மிஸ்டர் ஸ்பூனர் பாட்டியின் பாதங்களைப் பிடித்துக் கொள்ளாத குறையாகக் கேட்டுக் கொண்டார்: ஒரு மாதமாவது லண்டனில் தங்கியிருந்து தன்னை அவல் பாயஸ 'அப்ரண்டிஸாக' ஏற்றுக் கொள்ள வேண்டுமென்று மன்றாடினார்.

பாட்டியோ எனில் எட்டு நாளில் வர இருக்கும் ஏகாதசி விரதத்தை அனுஷ்டிக்கத் தான் அவசியம் ஊர் திரும்பியாக வேண்டும் என்று சொல்லி, 'அவல் பாயஸம் அப்ரெண்டிஸ் அப்ளிகேஷனை ரிஜக்ட்' செய்தாள்.

இந்தச் சந்தர்ப்பத்தில் அங்கு வந்த பொதுச் சபை அங்கத்தினர் மிஸ்டர் 'காமன்சென்ஸ்' பாட்டியின் ஏகாதசி விரதத்தை லண்டனிலேயே அனுஷ்டிக்க வேண்டிய ஏற்பாடுகளைத் தான் செய்து தருவதாக உற்சாகத்துடன் உறுதி கூறினார். ஆனால் எச்சப் பாட்டிதான் 'திருவல்லிக்கேணிப் பெருமாளைப் பார்க்காமல் ஏகாதசி விரதமென்ன வேண்டியிருக்கு' என்று கூறி அவருடைய வேண்டுகோளைத் தட்டிக் கழித்து விட்டாள். எல்லோருக்கும் டிமிக்கி கொடுத்து விட்டு ஏகாதசிக்கு இரண்டு நாள் முன்னதாகவே விமானத்தில் ஏறி விட்டாள் எச்சப் பாட்டி.

லண்டன் விமான நிலையத்தில் ஓட்டல் முதலாளிகள் தொழிலாளிகள் கூட்டமாக நின்று, 'மீண்டும் வருக! மீண்டும் வருக!' என்று கோஷமிட்டனர். பாட்டி இங்கிலாந்துக்கு மீண்டும் வரவேண்டுமென செயின்ட் பீட்டர்ஸ் கதீட்ரலில் பீர் சக்கரவர்த்தி பாரல் பிரார்த்தனை செய்தார். தமது சொந்தச் செலவில் இரண்டு சினைப் பசுக்களைக் கன்றுகளுடன் பாட்டிக்கு மிஸ்டர் புல் அன்புக் காணிக்கையாகக் கொடுத்தார்.

பத்திரிகை நிருபர்கள் பாட்டி 'மீண்டும் எப்போது வருவீர்கள்?' என்று கேட்ட போது 'அவசியப்பட்டால்யோசிக்கப்படும்' என்றாள். விமானத்தின் கதவுகள் மூடின. காற்றாடிகள் இயங்கின. விமானம் எம்பிற்று. உயரே உயரே பறந்தது.

ஏகாதசியன்றைக்கு மீனம்பாக்கம் விமான நிலையத்தில் எச்சப் பாட்டி இறங்கியபோது அவல் பாயஸத்தை வெளிநாட்டில் அறிமுகம் செய்து வெற்றியுடன் திரும்பியதற்காக அவளை வரவேற்கத் தமிழகத்து ஓட்டல் தொழிலாளர்களின் பிரதிநிதிகள் துளசி மாலையும் கையுமாக நின்றார்கள். பாட்டி ஏகாதசி விரதத்துக்குப் பங்கம் ஏற்படாமல் லண்டனிலிருந்து க்ஷேமமாக ஊர்திரும்பினாள்.

பாட்டியின் விஜயத்தினால் லண்டனில் ஆர். ஆர். ஆமன் மூன்றாண்டுகளாகச் சந்திக்க முடியாமலிருந்த பெரிய தொழிலதிபர்களை மூன்றே வாரங்களில் சந்திக்க நேர்ந்தது. எச்சப் பாட்டி வாழ்க! அவல் பாயஸம் நீடூழி வாழ்க! ★★★



சிறுவர்கள்
முகம் மலர
சிறந்த பரிசு



Nutrine

மிட்டாய்கள்

நியூட்ரைன் கன்பெக்ஷனரி கம்பெனி பிரைவேட் லிமிடெட்
சித்தூர் (ஆந்திரப் பிரதேசம்)

---

# மிக அழகிய ...

## அடர்ந்த நீண்ட ஒளியுள்ள கூந்தல்!

பிரதிதினமும் கால்கேட் பெர்பியூம்டு காஸ்டர் ஹேர் ஆயில் தடவி வந்தால், கூந்தலானது அடர்த்தியாகவும், நீளமாகவும் வளருவதுடன் இளமையின் ஒளியுடனும், அற்புத ஜ்வலிப்புடன் விளங்குவதைக் கண்டு நீங்கள் பரவசமடைவீர்கள். அது உங்கள் கூந்தலின் இயற்கை அழகை எடுத்துக்காட்டி எல்லோரையும் பிரமிக்கச்செய்யும்.

மகிழ்ச்சியூட்டும் நறுமணம்—
உங்கள் குடும்பம்
முழுவதும் விரும்புவது!




# கால்கேட்

## பெர்பியூம்டு காஸ்டர்

## ஹேர் ஆயில்

எக்கானமி சைஸை வாங்கி பணததை ப்படுதது ள்!

# பிள்ளையார் பட்டிப் பிள்ளையார்

தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான்

**ப**ல்லவ மன்னன் மகேந்திரவர்மனிடம் சேனாதிபதியாக இருந்தவர் பரஞ்சோதி. மகேந்திரவர்மனுக்குப் பின் நரசிம்மவர்ம பல்லவனிடமும் சேனாதிபதியாக இருந்திருக்கிறார். சளுக்கிய மன்னன் புலிகேசிமேல் நரசிம்மவர்மன் எடுத்த படையெடுப்பில் முன்னின்று சேனையை நடத்தி யிருக்கிறார். சளுக்கிய மன்னன் தலைநகரமான வாதாபி மீது படையெடுத்து அந்தப் போரில் வெற்றி கண்டு அந்த நகரைத் தீக்கிரையாக்கி யிருக்கிறார். வாதாபி நகரம் பற்றி எரிகிறபோது, அந்த நகரில் அகப்பட்டதையெல்லாம் சுருட்டிக் கொள்ளத் தன் படை வீரர்களுக்கு அனுமதி கொடுத்திருக்கிறான் நரசிம்மவர்மன். எல்லாப் படைவீரர்களும் பொன்னையும் பொருளையும் கொள்ளை கொண்டு போகிற போது, பல்லவ சேனாதிபதி பரஞ்சோதி மட்டும் பொன்னிலும் பொருளிலும் மோகம் கொள்ளாமல், அந்த நகரத்தின் கோட்டை வாயிலில் இருந்த கணபதி விக்கிரகத்தை மட்டும் தம்முடன் எடுத்துச் செல்ல மன்னனிடம் அனுமதி கேட்டிருக்கிறார். மன்னனும் அனுமதி கொடுக்கத் தயங்கவில்லை. அவ்வளவுதான்; வாதாபிக் கோட்டையிலுள்ள கணபதி பெயர்த்தெடுக்கப்பட்டார். நாடு திரும்பிய வெற்றிவீரர்களோடு வீரராக—ஏன் ஊர்வீரர்கள் தலைவராகவே தமிழ்நாடு நோக்கிப் புறப்பட்டு விட்டார்-பரஞ்சோதி. நேரே இந்த விநாயகரைத் தம் சொந்த ஊரான திருச்செங்காட்டாங்குடிக்கே கொண்டு வந்து விட்டார். அங்குள்ள சிவன் கோயிலில் பிரதிஷ்டை செய்து வைத்து விட்டார். வாதாபிகணபதி-தமிழ் நாட்டுக்குள் வந்து நிலை பெற்றது இப்படித்தான்.

திருச்செங்காட்டாங்குடியில் - வாதாபி கணபதியைப் பரஞ்சோதியார் (ஆம்! பின்னர் தம்மைச் சிறுத்தொண்டன் என்று அழைத்துக் கொண்டவர்) பிரதிஷ்டை செய்த திருநாளன்று பல்லவ மன்னன் நரசிம்மவர்மனும் வந்திருக்கிறான். பரஞ்சோதியாருடைய கைங்கரியத்தைப் பாராட்டியிருக்கிறான். ஆனால் பரஞ்சோதியாருக்கு மட்டும் ஒருசிறு கவலை. தம்மைப்போல் கணபதியின் பேரில் காதல் கொள்ளுபவர்கள் யாராவது, தாம் வாதாபியிலிருந்து பெயர்த்தெடுத்து வந்தது போலவே, செங்காட்டாங்குடியிலிருந்தும் பெயர்த்து எடுத்துச் செல்லலாம் அல்லவா என்பதுதான். பரஞ்சோதியாருடைய கவலையை உணர்ந்திருக்கிறான் நரசிம்மவர்மன். 'அப்படி நடக்காது. கவலையே வேண்டியதில்லை' என்று அவருக்கு ஆறுதல் கூறியிருக்கிறான்.

என்றாலும், இந்த எண்ணம் அவன் உள்ளத்தில் ஊன்றி நின்றிருக்கிறது. தென்னாடு வந்த பல்லவ மன்னன், தன் தந்தை மகேந்திரவர்மன், திருச்சி, சித்தன்னவாயில் முதலிய இடங்களில் கட்டிய குடைவரைக் கோயில்களையும் தீட்டிய சித்திரங்களையும் காண விரைந்து ஒரு சுற்றுப் பிரயாணத்தைத் தொடங்கியிருக்கிறான். அந்தப் பிரயாணத்திலேதான், இன்றைய காரைக்குடியை அடுத்த குன்றக்குடியிலிருந்து மேற்கு நோக்கி நடந்திருக்கிறான். அப்படி நடந்தவன் வழியில் ஒரு சிறிய குன்றைக் கண்டிருக்கிறான். ஆம்! இந்தச் சிறிய குன்றில் ஒரு கணபதியைச் செதுக்கி வைத்து விட்டால், அசைக்க முடியாதவராக அமர்ந்து விடமாட்டாரா அவர் என்று எண்ணியிருக்கிறான். அவ்வளவுதான்; அவன் எண்ணத்தை உருவாக்க முனைந்திருக்கிறார்கள் உடன் வந்த சிற்பிகள். மலையைக் குடைவது என்பதுதான் அவர்களுக்கு எளிதான காரியம் ஆயிற்றே. குடைவரைக் கோயில் ஒன்று உருவாகி விட்டது. அங்கு தேசிக விநாயகப் பிள்ளையார்—கற்பக விநாயகர், அசையாத பிள்ளையாக, அசைக்க முடியாத கணபதியாக அமர்ந்து விட்டார். திருவீங்கைக்குடி மகாதேவரும் உருவாகி விட்டார். இருவருக்கும் இடையில் சிற்பிகள் நரசிம்மவர்ம பல்லவனது திருவுருவையுமே செதுக்கி நிறுத்தி விட்டார்கள். அன்றுமுதல் இங்கு பிள்ளையார் ஆதிக்கம் செலுத்த முற்பட்டு விட்டார். சக்காட்டூர், மருதங்குடி, திருவீங்கைக்குடி என்றெல்லாம் அழைக்கப்பட்ட அந்தச் சிற்றூரின் பெயர் அன்றுமுதல் பிள்ளையார் பட்டி என்றே நிலைத்து விட்டது. பிள்ளையார் பட்டிப் பிள்ளையார் உருவான கதை இப்படித்தான் இருக்கவேண்டும். இல்லாவிட்டால் தமிழ் நாட்டில் குடைவரைக் கோயிலில், பிள்ளையார் திரு உருவம் அசைக்கமுடியாத திரு உருவம் தான், அமைக்கின்ற வாய்ப்பு ஏற்படாதல்லவா?



பிள்ளையார்பட்டிப் பிள்ளையார்



கோயில் ராஜகோபுரம்

அந்தப் பிள்ளையார் பட்டிக்கே செல்கிறோம் நாம் இன்று.

பிள்ளையார்பட்டி ஒரு சிறிய ஊர். ராமநாதபுரம் ஜில்லாவில், காரைக்குடியிலிருந்து திருப்புத்தூர் செல்லும் வழியில், காரைக்குடிக்கு மேற்கே எட்டு மைல் தூரத்தில் இருக்கிறது. வழியில் தான் குன்றக்குடி முருகன் கோயிலும் இருக்கிறது. பெயரிலிருந்தே தெரிந்து கொள்ளலாம், குன்றக்குடி முருகன், மலைமேல் நிற்பவன் என்று. மயில்போல் சரிந்து நீண்டிருக்கும் மலைமேல் கோயில் இருக்கிறது. ஏறுவது சிரமமாக இராது. ஆதலால் அண்ணனைத் தரிசிக்கப் போகும் இடத்தில் தம்பியையும் தரிசித்து விட்டே மேல் நடக்கலாம். பிள்ளையார் பட்டிக்குத் திரும்பும் வழியில் பலகை நட்டு வழி காட்டி யிருப்பார்கள் நெடுஞ்சாலைப் பொறியர். ஊருக்கு மத்தியில் கோயிலும் குளமும், குளத்தைச் சுற்றி அகன்ற வீதி. நரசிம்மவர்மன் காலத்தில் உருவான குடைவரைக் கோயிலே மூலக் கோயிலாகக் கொண்டு பின்னர் இந்தக் கோயில் விரிந்து வளர்ந்திருக்கிறது. இப்படி விரிந்த கோயில்தான் இன்று மகாமண்டபம், ராஜகோபுரம் முதலியவைகளுடன் பெருங் கோயிலாக இருக்கிறது. இக்கோயிலில் கோயில் கொண்டிருப்பவர்தான் மருதங்குடி நாயனர். இந்த மருதங்குடி நாயனர் கோயிலை விரிவாகவும் அழகாகவும் கட்டி முடித்தவர்கள் நாட்டுக்கோட்டை நகரத்தார். கோயிலைக் கட்டிக் கோயிலுக்கு முன் ஒரு நல்ல குளத்தையும் வெட்டி, இவற்றைச் சுற்றி நல்ல நல்ல விடுதிகளையும் அமைத்து, தக்க முறையில் பாதுகாத்து வருகிறார்கள். பதினறு காரியக்காரர்கள், இக் காரியக்காரர்கள்தான் பிள்ளையார் பட்டியான திருவேட்பூருடையார் என்ற கோத்திரத்தவர். இவர்களே கோவில் பூசை, படித்தரம் முதலியவை சிறப்பாக நடைபெற (கோயில் வருமானம் போதாமல் இருப்பதால்) தங்கள் சமுதாய நிதியிலிருந்து கொடுத்து உதவுகிறார்கள்.

இந்தக் கோயிலில் நடைபெறும் விழாக்களில் இரண்டு பிரசித்தம். ஒன்று மார்கழித் திருவாதிரைத் திருநாள். இரண்டு விநாயக சதுர்த்தி. திருவாதிரை நாளன்று சிவகாம சுந்தரி சமேதராக நடராஜர் வீதி உலா வருவார். அன்று சிவகாமசுந்தரியின் ஊடலைத் தீர்க்க, நடராஜர் எழுதிக் கொடுக்கும் பிடிபாடு மிக்க அழகானது. அதாவது தனக்கு எவ்வளவு சொத்திருக்கிறது என்பதை எல்லாம் அடுக்கடுக்காய் எடுத்துக் கூறிச் சிவகாமியின் ஊடல் தீர்க்க விரைவார். சிவகாமியின் ஊடல் தீர்கிறதோ இல்லையோ, கோயிலின் நிலபுல விவரம் முழுதும், ஆண்டுதோறும் அறுவடை காலமான மார்கழியில் ஊரார் எல்லாம் அறியப் படிக்கப் பெறுவது என்பது வரவேற்கத்தக்க தொன்றுதானே. இந்தக் கோயிலின் பெருந் திருவிழா விநாயக சதுர்த்தியே. ஆம்! பிள்ளையார் ஆதிக்கம் நிறைந்திருக்கும் இந்தக் கோயிலில் சதுர்த்தி பெரிய விழாவாகக் கொண்டாடப்படுவது ஆச்சரியமில்லைதான். விழா மற்ற ஊர்க் கோயில்களில் எல்லாம் நடைபெறுவதுபோல, பத்து நாட்களும் சிறப்பாக நடைபெறுகிறது. பத்தாம் நாள் நடக்கும் விழாதான் இந்தக் கோயிலுக்கே உரிய தனிச் சிறப்போடு நடத்தப்பெறுகிறது.

விழாவைப் பற்றிச் சொல்லுமுன் சதுர்த்தி விரதத்தைப் பற்றியும் அவ்விரதம் ஏற்பட்ட விதத்தைப் பற்றியும் ஒரு வார்த்தை.

ஒருநாள் விநாயகர், தேவர்கள் எல்லாம் கண்டு களிக்கக் கைலாயத்திலே நர்த்தனம் செய்திருக்கிறார். சரிந்த தொந்தி. மோதகம் ஏந்திய கை, குறுகிய கால்கள் இவைகளுடன் ஆடிய விநாயகரது அல்லது விநாயகரைப் போன்ற உருவம் படைத்தவர்கள் நடனம் ஆடுவதைக் கண்டால் சிரிக்காமலிருக்க முடியுமா? ஒன்று சந்திரன், சிரிப்பை அடக்கியிருக்க வேண்டும். இல்லை, அப்படி சிரித்ததற்கு ஒரு பொய்யையாவது கற்பனை பண்ணிச் சொல்லத் தெரிந்திருக்க வேணும். இரண்டும் செய்யவில்லை. வாய்விட்டே சிரித்து விட்டான் அவன். அவ்வளவுதான்; கோபம் பொத்துக்கொண்டு வந்து விட்டது விநாயகருக்கு. அதனால் பிடி சாபம் என்று கோபமாகச் சந்திரனைச் சபித்தே விட்டார். சாபமோ, 'அன்று முதல் சந்திரன் உருவை ஒருவருமே பார்க்க மாட்டார்கள். கண்டவரும் நிந்தை செய்து ஒதுக்கி விடுவார்கள். அத்தகைய நீசனாக அவன் ஆகட்டும்' என்பது தான். நல்ல கலை பொருந்திய உருவம் கொண்ட சந்திரனோ, அன்று முதல் கலை இழந்து தேய்ந்து தேய்ந்து மெலிந்தான். கண்டவரும் வெறுத்து ஒதுக்கினர். வெட்கத்தால் உருவம் குன்றிய சந்திரன் பிரமனிடம் சென்று முறையிட்டான். சாபமிட்டவர்தான் சாப விமோசனத்தையும் அருள வேண்டும் என்று சொல்லிச் சந்திரனை விநாயகரிடத்தில் அழைத்துச் சென்றான் பிரமன். சந்திரனும் விநாயகர் திருவடியில் விழுந்து வணங்கி,

தெரியாது செய்த பிழையை மன்னித்தருள வேண்டினான். பிரம்மாவும் அவனுக்காகப் பரிந்து பேசினார். 'தவறு செய்ததற்குத் தண்டனை செய்ய வேண்டியதுதான்; ஆனால் அது நிரந்தரத் தண்டனையாக இருக்க வேண்டாமே; வருஷத்தில் ஒரு சில நாட்கள் மட்டுமே அந்தத் தண்டனையை அவன் அனுபவிக்குமாறு அருள் புரியலாமே' என்றார் பிரமன். விநாயகரும் மனம் இரங்கிச் 'சுக்ல சதுர்த்தியில் உன்னைக் காண்பவர்களெல்லாம் வீண் அபவாதம் அடையட்டும். ஆனால் ஆவணி மாதம் சுக்ல சதுர்த்தியில் என்னைப் பூஜித்தால் அந்த அபவாதம் நீங்கட்டும்' என்றும் சாபத்தை மாற்றி அருளினார். இது காரணமாகத்தான் வளர்பிறையில் சதுர்த்தியன்று இன்றும் மக்கள் சந்திரனைப் பார்க்காது ஒதுக்குகிறார்கள். அப்படித் தப்பித் தவறிப் பார்ப்பவர்களும், ஆவணி மாதம் சுக்ல சதுர்த்தியில் விரதம் அனுஷ்டித்து விநாயகரை வணங்கிச் சாப விமோசனம் பெறுகின்றனர்.

இப்படித்தான் சதுர்த்தி விரதம் அன்று முதல் அனுஷ்டிக்கப்பட்டு வருகிறது என்று கூறுகின்றன புராணங்கள். அதிலும் இந்த விரதம் பெண்கள் அனுஷ்டிக்க வேண்டிய முக்கிய விரதம் என்றும் சொல்கிறது. காரணம் இந்த உலகத்தில் ஆண்களை விடப் பெண்களே காரணம் இல்லாமல் வீண் அபவாதத்துக்கு உள்ளாகிறார்கள். ஆதலால் அவர்கள் மேல் ஏற்படும் வீண் அபவாதங்கள் நீங்கவும், அவர்கள் மிகவும் விரும்பும் பிள்ளைப்பேறு முதலிய எண்ணங்கள் சித்தி பெறவும் சித்தி விநாயகரை அவர் விரும்பிய சதுர்த்தி அன்று விரதம் அனுஷ்டித்து வணங்குதல் வேண்டும். வருஷம் முழுதும், இருபத்து நான்கு சதுர்த்தியிலும் விரதம் அனுஷ்டிப்பதோடு, ஆவணி மாதம் சுக்ல சதுர்த்தியில் விரத பூர்த்தி செய்து விநாயகரைத் தொழுதல் பெறற்கரிய பேறுகளையெல்லாம் பெறலாம் என்பதுதான் மக்கள் நம்பிக்கை.

பிள்ளையார்பட்டியில் சதுர்த்தி விரதம் எல்லோராலும், சிறப்பாகப் பெண்களாலும் அனுஷ்டிக்கப்பட்டு வருகிறது. வருஷம் முழுதும்—ஆம். இருபத்து நான்கு சதுர்த்தி தினமும் விரதம் அனுஷ்டித்தவர்கள் எல்லாம், வருஷக் கடைசியில், ஆவணி மாதம் சுக்லபக்ஷ சதுர்த்தியன்று விரத பூர்த்தி செய்கிறார்கள். அன்று பிள்ளையார்பட்டிப் பிள்ளையார் சந்நிதியில் வருஷம் முழுதும் விரதம் அனுஷ்டித்த பெண்கள் ஒன்று கூடுகிறார்கள். விரத பூர்த்தி செய்ய வந்திருக்கும் பெண்கள் எத்தனையோ அத்தனை குடங்கள். ஆம் நானூறு ஐந்நூறு பேர்கள் வந்தாலும், அத்தனை பேருக்கும் ஆளுக்கு ஒன்று என்று குடங்கள் வைத்து ஒவ்வொரு குடத்தினுள்ளும் ஒவ்வொரு வெள்ளிப் பிள்ளையாரையும் போட்டுக் குடத்தில் தண்ணீர் நிரப்பிப் பூசனை புரிகிறார்கள். அதன் பின்னர் ஒவ்வொரு பெண்ணும் ஒவ்வொரு குடம் எடுத்து அந்தக் குடத்தில் உள்ள தண்ணீரால் அபிஷேகம் செய்து கொள்கிறார்கள். நனைந்த உடலோடும், உடையோடும் பிள்ளையார் சந்நிதியிலே விழுந்து வணங்கி, எழுந்து நின்று தீப ஆராதனையைக் கண்டு களிக்கிறார்கள். அன்று கோயிலில் கொடுக்கும் பிரசாதமாகிய மோதக நைவேத்தியத்தை மட்டுமே அருந்துகிறார்கள். இப்படி விரதம் அனுஷ்டித்து விரத பூர்த்தி செய்கின்ற பெண்கள் எல்லாருக்கும் அவரவர்கள் பிரார்த்தனை செய்து கொண்ட நலங்களையும் பெறுகிறார்கள். பெண்கள் மட்டும் என்ன—ஆண்களுமே இந்தச் சதுர்த்தி விரதம் அனுஷ்டித்தால் எண்ணிய எண்ணியாங்கு எய்துவர்.

சதுர்த்தி விரதம் மேற்கொள்ள விரும்பும் எல்லோரும் பிள்ளையார் பட்டிக்குப் போகலாம். அதோடு பல்லவர் காலத்தில் சிற்பக்கலை எப்படியெல்லாம் வளர்ந்தோங்கியது என்றும் கண்டறிய இயலும். அதற்கு மேல் இந்தக் குடைவரைக் கோயிலில் உள்ள பிள்ளையார் எப்படி மற்றத் தமிழ் நாட்டுப் பிள்ளையார் திரு உருவங்களில் இருந்து வேறுபட்டிருக்கிறார் என்பதும் தெரியும்.

இங்குள்ள விநாயகரது துதிக்கை வலம் சுழித்து அவருக்கு வலம்புரி விநாயகர் என்ற பெயரைத் தேடித் தருகிறது. எல்லா இடத்தும் நான்கு திருக்கரத்தால் நான்கு திக்கிலும் ஆட்சி செய்பவர் இங்கு இரண்டே திருக்கரத்தால் விண்ணையும் மண்ணையும் ஆட்சிக்குள் கொண்டு வந்து விடுகிறார். அங்குசமும், பாசமும், இல்லாமலே அடியவரை ஆட்சி கொள்ளும் சக்தி உடையவராக இருக்கிறார். வயிற்றை ஆசனத்தில் படிய விடாமல் அர்த்த பத்ம ஆசனத்திலேயே கால்களை மடித்திருக்கச் செய்து கொள்கிறார். வலக்கரத்தில் மோதகம் தாங்கி இடக்கரத்தை இடையில் பொருத்திப் பெருமிதத் தோற்றத்தோடு காட்சி கொடுத்திருக்கிறார். ஆம். ஆதி நாளிலே உருவானவர்- இப்படி இரண்டு திருக்கரங்களோடு இருந்துதான், பின்னர் நான்கு திருக்கரங்களோடு எழுந்து, நடந்து, நின்று, நடமாடி, மூஷிகத்திலும், சிம்மத்திலும், ஏறிச் சவாரி செய்து கலைஞன் சித்தனையிலே வளர்ந்திருக்கிறார் என்று ஆராய்ச்சியாளர் முடிவு செய்யலாம்.

இதோடு, இந்தக் கோயிலில் இருக்கும் இரண்டு செப்புச் சிலைகள் மிக்க அழகு வாய்ந்தவை. அவை தாம் சந்திரசேகரமூர்த்தியும் அவரது துணைவியும் நல்ல சோழர் காலத்துச் சிலை. ஆயிரம் வருஷ காலத்துக்கு முன்பே உருவாகி யிருக்க வேண்டும். நிற்கும் நிலையையும் மணிமகுடத்தையும் பார்த்ததுமே எளிதாகச் சொல்லி விடலாம். மானும் மழுவும் தாங்கிப் பிறையும் மகுடமும் அணிந்து அபய கரத்தோடு அருள்பாலிக்கும் திருவுருவாக அமைந்திருக்கிறார். ஆணுக்குப் பெண் அழகு என்பதுபோல், அன்னை பார்வதி அவரைவிட அழகாக இருக்கிறாள்.

கோயில் பிரும்மாண்டமான அளவில் சென்ற நூற்றாண்டின் பிற்பகுதியில் கட்டப்பட்டிருக்கிறது. ராஜகோபுரம் வேறு நீண்டு உயர்ந்திருக்கிறது. இன்றைய சிற்பிகளின் வேலைப்பாடுகளைத் தூண்களில், விதானங்களில் எல்லாம் காணலாம். இங்குள்ள பிள்ளையார் பேரருளைச் சொக்கலிங்க ஐயா அவர்கள் பாடி யிருக்கிறார்கள்.

நாமும் பிள்ளையார்பட்டிப் பிள்ளையாரை வணங்கிப் பெறற்கரிய பேறுகளையெல்லாம் பெற்றுத் திரும்பலாம்.

# உங்கள் அழகை அதிகரிக்கிறது
# பாதுகாக்கவும் செய்கிறது!



அற்புத நறுமண மூட்டப்பட்ட சார்மிஸ் ஸ்னோ
உங்கள் சருமத்தை அழகுறச் செய்கிறது, பாது
காக்கிறது. எல்லா பருவ காலங்களிலும்
சருமத்தை மிருதுவாகவும் வெல்வெட் போல
வழவழப்பாகவும் வைக்கிறது.
பவுடருக்கு ஆதாரமானது.
எண்ணைப்பசையில்லாதது.
சார்மிஸ் ஸ்னோ சொற
சொறப்பும், வரிகளும்,
கோடுகளும், புண்களும்
ஏற்படாமல் சிறந்தமுறை
யில் தடுக்கிறது. பூச்சிக்
கடிகள், வெடிப்புகளினின்றும்
பாதுகாக்கிறது.




## சார்மிஸ் ஸ்னோ

ஒரு கால்கேட்
உயர்தர சரக்கு

CSG/13R

---

# க்ளூகோவிடா




## அதிக சக்தியளிக்கிறது.

தினசரி ஆகாரத்தினூடே போஷகத்திற்கு
மிகச் சிறந்தது. உங்கள் உடம்பிற்கு
அவசியமான, ரத்தத்தில் கலந்துகொள்ளும்
சர்க்கரையை க்ளூகோவிடா அளிக்கிறது.
வேலை, விளையாட்டு, இவைகளில்
ஈடுபட்டிருக்கும் மக்களுக்கும், வளரும்
குழந்தைகளுக்கும், கர்ப்பந்தரித்திருக்கும்
போதும், பிரசவத்திற்குப் பின்
தாய்மார்களுக்கும் சிறந்த சக்தியளிக்க
வல்லது.

டீ, காப்பி, பால் மற்றும் குளிர்ந்த பானங்
களிலும் க்ளூகோவிடா அருந்துங்கள்,
ஒன்று முதல் மூன்று தேக்கரண்டி நிரம்பிய
அளவு ஒரு கப் அல்லது கிளாஸ் மேற்கூறிய
ஏதாவதொரு பானங்களுடன் நன்குக்
கலக்குங்கள், எளிதில் கரைந்துவிடக்
கூடியது.

அதிக சக்திக்கு அவசியமானது
**க்ளூகோவிடா**



கார்ன் ப்ராடக்ட்ஸ் கோ. (இந்தியா) ப்ரைவேட் லிட்.

இந்தியாவிற்கான ஏஜெண்டுகள்: பாரி அன்டு கோ. லிட்.

கார்த்திகை மாதம் மழை கொட்டிக் கொண்டிருந்தது. கையிலே குடையில்லை. உள்ளது ஒரு பழைய அங்கி. பல இடங்களில் பொத்தல் விழுந்திருந்ததால் இந்தப் பெரு மழையிலிருந்து என்னைக் காப்பாற்றும் சக்தி அதற்கில்லை.

மழை விடட்டும், போகலாம் என்றிருந்தேன். விடுகிறபாடாக இல்லை. கைக் கடிகாரத்தைத் திருப்பினேன். எட்டு அடிக்க இன்னும் பதினைந்து நிமிடங்கள் மட்டும் பாக்கி யிருந்தன. இந்த நிலையில்தான் கொழும்புப் பட்டணத்தைச் சிறிது நினைக்க வேண்டியிருந்தது. நிமிடத்துக்கு ஆயிரம் 'டாக்ஸி' கிடைக்கக்கூடிய நிலையில் இந்த யாழ்ப்பாணத்தில் ஒரு மாட்டுவண்டி கூடக் கிடைப்பது மிகவும் சிரமமாக இருந்தது. எட்டுமணிக்குள் எப்படியாவது பாடசாலையை அடைந்துவிட வேண்டும். இல்லாவிட்டால் தலைமையாசிரியரிடமிருந்து தப்பவே முடியாது. பாடசாலைக் கட்டிடத்தோடு சேர்த்து அமைக்கப்பட்ட அறையில் மனைவி மக்களுடன் குடியிருக்கும் அவருக்கு அரை மைல் தூரத்திலிருந்து கொட்டும் மழையிலும் கொளுத்தும் வெய்யிலிலும் நடந்து வரும் என்போன்றவர்களின் துன்பம் எங்கே தெரியப் போகிறது...?

பாவம்....!

அவரைக் குற்றம் சொல்லி என்ன பலன்? அவர் தம்முடைய கடமையைச் செய்து தானே ஆக வேண்டும்!

மேலும் தாமதிக்க விரும்பாமல் வேட்டியைத் தூக்கி முழங்கால் வரையில் மடித்துக் கட்டிக் கொண்டு பொத்தல் விழுந்திருந்த மழை அங்கியை இரண்டாக மடித்துத் தலையில் கட்டிக் கொண்டு தெருவில் இறங்கினேன்.

பக்கத்துப் பனந்தோப்பிலே நுழைந்து போனால் மூன்று நிமிடங்களில் பாடசாலையை அடைந்து விடலாம். தெருவைக் கடந்து போவதானால் குறைந்தது பத்து நிமிடங்களாவது பிடிக்கும். சுருக்கமான வழியைப் பிடிப்பதற்காகக் கலட்டிமுடக்கில் திரும்பிப் பனந்தோப்புக்குள் காலடி வைத்தேன்.

தண்ணீரைக் கிழித்துக்கொண்டு பாடசாலை மேட்டில் மிதந்தபோது பாடசாலை ஆரம்பமாவதற்கு இன்னும் சரியாகப் பத்து நிமிடங்கள் இருந்தன. பாடசாலையின் எதிர்ப்புறத்தே இருந்த செல்லனின் வாழைத் தோட்டத்துக் கிணற்றடிக்குச் சென்று முழங்கால்வரை காலைக் கழுவிக் கொண்டு பாடசாலையை அடைந்து வகுப்புக்குள் நுழைந்தேன்.

ஓலையால் வேயப்பட்டிருந்த வகுப் பறையின் ஒரு மூலையில் இரண்டு கைகளாலும் மார்பை இறுக்கிப் பிடித்துக் கொண்டு குளிரில் நடுங்கிக் கொண்டிருந்த சங்கர் என்னைக் கவர்ந்தான்.



இடுப்பில் அதுவரையில் கட்டியிருந்த துணியைப் பக்குவமாக மடித்துப் பக்கத்துக் கதிரையில் போட்டுவிட்டு சங்கர் நின்ற திசையை நோக்கி நடந்தேன்.

மழையில் தோய்ந்து போயிருந்த அவனது கருளான கேசத்திலிருந்து நீர் சொட்டிக் கொண்டிருந்தது. தெப்பமாக நனைந்திருந்த அவனுடைய உடை உடம்போடு ஒட்டிப் போய்க் கிடந்தது.

என் சட்டைப் பைக்குள் கைவிட்டுக் கைக்குட்டையை எடுத்து அவனுடைய முகத்தைத் துடைத்தேன். நன்றியறிதலுடன் அவன் என்னைப் பார்த்த பார்வை மின்வெட்டும் நேரத்தில் உள்ளத்தில் கடந்து போன ஒரு நிகழ்ச்சியை ஞாபகப்படுத்தி விட்டது.

மூன்றாண்டுகளுக்கு முன். நான் களுத்துறையில் ஒரு கத்தோலிக்க மிஷன் பாடசாலையில் ஆசிரியனாகக் கடமையாற்றிக் கொண்டிருந்தேன். அங்கே கடமையாற்றிய முப்பது ஆசிரியர்களில் என்னையும் சேர்த்து மூவரைத் தவிர ஏனைய அத்தனை பேரும் சிங்களச் சகோதரர்கள்.

ஆசைக்குத் தமிழ்மொழி கேட்பதே மிகவும் அரிதாக இருந்தது. இரண்டொரு மாதங்களில் ஓரளவுக்குச் சிங்களம் பேசவும் எழுதவும் கற்றுக் கொண்டேன். சிங்களம் தெரியாமல் அங்கு காலங் கழிப்பது மிகவும் கஷ்டமாக இருந்தது.

1957-ம் ஆண்டு இலங்கைச் சரித்திரத்தில் என்றுமே இடம் பெற்றிராத கோர சம்பவம் ஒன்று நடைபெற்றது. எங்கெங்கு தமிழர்கள் காணப் பட்டார்களோ, அங்கெல்லாம் அவர்கள் உயிரோடு சித்திரவதை செய்யப் பட்டார்கள்.

பாடசாலை விடுதியில் இருந்த எனக்கும் இந்தச் செய்தி எட்டத் தவறவில்லை.

சுபாவத்திலேயே நான் மிகவும் பயந்தவன். இந்தச் செய்தியைக் கேள்விப்பட்டதும் என் உடல் பதறியது. செய்வதென்ன வென்றறியாமல் திகைத்தேன். என்னோடு கடமையாற்றிய எனக்கு மிகவும் வேண்டிய சிங்கள நண்பர் ஒருவரின் உதவியோடு மேல்மாடியில் சென்று மறைந்து கொண்டேன்.

இரண்டு நிமிடங்கள் சென்றிருக்கும். நான் மறைந்திருந்த மாடியின் கீழ்த்தளத்தில் ஒரே ஆரவாரம். நான் இருந்த அறைக்கதவின் நீக்கலால் கீழே பார்த்தேன்.

ஒரு பெரிய கூட்டம் கத்தி, கோடரி துவக்கு, தடி ஏந்தி நின்றது.

'' தமிழர்களை வெளியே அனுப்பு '' என்று சிங்களத்தில் முழங்கினார்கள்.

என் உடலில் இருந்த உரோமம் ஒவ்வொன்றும் பயத்தினால் குத்திட்டு நின்றது. உடல் பதறியது. பயத்தினால் பல்லும் பல்லும் சேர்ந்து அடிபட்ட சத்தம் என் காதுக்குக் கூடக் கேட்டது.

செய்வதறியாது என் எதிரில் சோகமே உருவாக நின்ற நண்பன் எட்வேட்டைப் பார்த்தேன்.

'' மகே ! அம்மே! செல்லத்துரை இவரய்!''

சிங்கள மொழியில், செல்லத்துரை முடிந்து விட்டான் என்று அலறினான் நண்பன்.

உடல் 'படபட' வென்று நடுங்க ஓரடி முன் வைத்து மீண்டும் என் பார்வையைக் கதவு நீக்கலால் கீழே செலுத்தினேன். ஐயோ ! என்ன கோரக் காட்சி ! இப்படியும் மனிதாபிமானமற்ற கல்நெஞ்சர்கள் இந்த இருபதாம் நூற்றாண்டிலும் வாழ்கிறார்களே என்று நினைக்க நெஞ்சம் துணுக்குற்றது.

அங்கே செல்லத்துரையின் உயிரற்ற சடலம் இரத்த வெள்ளத்தில் மிதந்து கொண்டிருந்தது. பக்கத்தில் ஒரு பெரிய சிவப்புத் தலைப்பாக் கட்டுடன் நின்றான் ஒரு பெரிய இராட்சதன். அவன் கையில் இரத்தம் தோய்ந்த கட்டாரி ஒன்று இருந்தது.

என்னை மறந்து '' ஐயோ செல்லத்துரை !'' என்று கத்தி விட்டேன். அவ்வளவுதான் தெரியும் ! அடுத்து ' மளமள ' என்று கற்கள் பறந்து வந்தன மாடிக்கு.

'' மாடியில் இருப்பவன் கீழே வா ! அல்லது நாங்களே அங்கு வந்துவிடுவோம்.'' இன வேற்றுமை அதிபயங்கர ஒலிகள் மூலம் வெளிவந்தது.

பயத்தால் என்னுடைய முகம் வெளுப்பேறியது. கைகால்கள் உதறல் எடுத்தன. வாயடைத்துப் போய் விட்டது !

என் நண்பன் எட்வேட்டைப் பார்த்தேன் பரிதாபமாக. அவன் என்னைப் பார்த்தான். இருவரும் பேசவில்லை.

கடைசியில் என் கையைப் பிடித்துக் கரகர வென்று இழுத்துக் கொண்டு போய்ப் பின் புறக் கதவைத் திறந்து, '' எங்கேயாவது தப்பி யோடு!'' என்று அனுப்பிவைத்தான் நண்பன்.

உயிரைக் கையிலே பிடித்துக் கொண்டு படபடக்கும் நெஞ்சுடன் கடைசிப் படியில் கால் வைத்து விட்டேன். சுற்றுமுற்றும் பார்த்தேன். யாருமே என்னைக் காணவில்லை. ' பிழைத்தேன் ' என்ற துணிவோடு இரும்பிப் பார்த்து ஓட்டம் பிடித்தேன்.

புகையிரத நிலயத்தை அடைந்தபோது, எனக்குக் கீழ் மூச்சு வாங்கியது. பின்புறம் திரும்பித் திரும்பிப் பார்த்து ஓடியதில் கழுத்து வேறு அழுக்கிக் கொண்டது.

'' அப்பாடா !'' என்ற பெருமூச்சோடு நண்பன் எட்வேட்டை ஒரு முறை நெஞ்சார வாழ்த்திக் கொண்டேன்.

புகையிரத நிலயத்தில் கூடி நின்ற அந்தப் பெரிய கூட்டத்தைக் கண்டபோது ஒருகணப் பொழுது மறைந்திருந்த பயம் மீண்டும் என் உடலை உலுப்பியது. பக்கத்தில் நின்ற பத்திரிகை விற்கும் பையனிடம் ஒரு சிங்களப் பத்திரிகையை வாங்கி எடுத்துக் கொண்டு ரயில் பெட்டியில் சென்று உட்கார்ந்தேன். அங்கும் சாரம் கிழிபட்டும், கேசம் கலைந்தும், அடியின் உக்கிரத்தைத் தாங்க முடியாத துயரத்தோடும் என் போன்ற பல தமிழன் பர்கள் காட்சியளித்தார்கள்.

நான் ஒதுக்குப்புறமான இடத்தில் ஒரு சிங்களச் சகோதரரின் அருகில் போய் உட்கார்ந்து கொண்டேன். ரயில் புறப்படுவதற்கு ஆயத்தமாக 'ணை...ணை' என்று ஒலமிட்டது. அதைத் தொடர்ந்து ரயில் பெட்டியில் ஒரே ஆரவாரம்.

'' அங்கே என்ன சத்தம் ?'' என்று பக்கத்தில் இருந்த நண்பர் ஒருவரிடம் சிங்களத்தில் வினவினேன்.

'' தமிழர்களுக்கு அடி விழுகிறது!'' என்று கூறினார் அவர்.

நான் தமிழன் இல்லை என்று காட்டுவதற்கு மிகவும் பிரயாசை எடுத்துக் கொண்டேன். அடுத்த பெட்டியில் அட்டகாசம் முடிந்ததும் என்னுடைய பெட்டிக்குள் நுழைந்தது அந்தக் காலிக் கூட்டம்.

எனக்குப் பயம் அதிகரித்தது. இருந்தும் தைரியத்தைக் கைவிடாமல் பத்திரிகையில் கண்ணோட்டத்தைச் செலுத்திக் குனிந்த தலை நிமிராமல் இருந்தேன்.

''ஒயா தெமிழத...?'' கையில் இருந்த பத்திரிகையைப் பிடுங்கி விட்டுக் கேள்வி போட்டது ஒரு முரட்டுக் குரல்.

'' நான் சிங்களவன் !'' சிங்களத்தில் பதில் கொடுத்தேன். ஒருவித அசட்டுத் தைரியம் என்னை ஆட்கொண்டது.

அவர்களுக்கு அப்பொழுது நம்பிக்கை பிறக்கவில்லை. அடுத்துப் பரீட்சை ஆரம்பமாகியது.

பத்திரிகையில் ஒரு பத்தியைக் காட்டி வாசிக்கும்படி கட்டளையிடப்பட்டேன். அருமையாக வாசித்துத் தள்ளினேன்.

காதைப் பிடித்துப் பார்த்தார்கள்.

நல்ல காலம்! நான் ஒரு கிறிஸ்தவன். பேசாமல் திரும்பி விட்டனர். நான் ஆண்டவனை மனதார வேண்டிக் கொண்டேன்.

ரயில் புறப்பட்டது. கூடவே என் பயமும் அதிகரித்தது.

புகையிரத ஸ்தானத்தில் நடைபெற்ற கோரச் சம்பவங்களை நினைத்து நினைத்து நெஞ்சம் புண்ணாகிக் கொண்டிருந்தது.

மிகவும் விரைவாகச் சென்றுகொண்டிருந்த புகையிரதம் திடீரென்று நின்றது. எட்டிப் பார்த்தேன்.

அது ஒரு புகையிரத ஸ்தானம். பாணந்துறை என்று கொட்டை எழுத்தில் போடப்பட்டிருந்தது. ரயில் நின்றதோ இல்லையோ, திடும் என்று பெட்டிக்குள் பிரவேசித்தது ஒரு வெறியர் கூட்டம்.

அங்கேயிருந்த ஓரிரு தமிழருக்குக் கிடைத்த மரியாதையைப் பார்த்தபோது அடுத்து எனக்கு என்ன நடக்குமோ என்ற பயம் என்னைக் கவ்விக் கொண்டது. அந்த வெறியர் கூட்டம் கடைசியில் என்னிடம் திரும்பியது.

அவர்கள் சரமாரியாகக் கேட்ட கேள்விகளுக்கெல்லாம் சிங்களத்தில் தடையில்லாமல் பதிலளித்தேன்.

அவர்களுக்கு அப்போதும் என் மீது நம்பிக்கை பிறக்கவில்லை. ஒருவன் தன் கையை விட்டு என் சட்டைப் பைக்குள் இருந்த பொருள்களை வெளியே எடுத்தான். அவற்றோடு சேர்ந்து வந்தது என் நாட் குறிப்பு.

என் அந்திம காலம் நெருங்கி விட்டதை அறிவித்தது அந்த நாட்குறிப்பு. பக்கத்தில் நின்றவன் கீழே விழுந்த நாட்குறிப்பை எடுத்து விரித்தான். அவ்வளவுதான் தெரியும். என் உடலை அடியும் உதையும் பதம் பார்த்தன. இருவர் என்னைப்பிடித்து இழுத்து வெளியே தள்ளினார்கள். கீழே பிளாட்பாரத்தில் என்னை ஒரு பெரிய கூட்டம் சூழ்ந்து கொண்டது.

'எடு பெட்ரோலை' என்றது ஓர் அதிகாரக் குரல்.

என்னுடைய வாழ்க்கையின் கடைசி அத்தியாயம் முடியப் போகிறது என்ற நினைவில் என் பெற்றோரை ஒருமுறை மனதார நினைத்துக் கொண்டேன்.

என் தலையில் ஒரு 'டின்' பெட்ரோல் ஊற்றப்பட்டது...தலை மயிரிலிருந்து சொட்டுச் சொட்டாக வடிவதை என்னால் உணர முடிந்தது. இரண்டு கண்களையும் இறுக மூடிக் கொண்டு இரண்டு கைகளையும் குவித்து இறைவனை வேண்டிக் கொண்டேன்.

தீப்பெட்டி அவர்களில் ஒருவரிடமும்இருக்கவில்லையோ, அல்லது அந்தக் கூட்டத்தில்கூட இளகிய நெஞ்சம் உள்ளவர்கள் இருந்தார்களோ, தெரியவில்லை! அவர்கள் பேச்சிலிருந்து தீப்பெட்டி இல்லை என்பது மட்டும் திட்டவட்டமாகத் தெரிந்தது.

திடீரென்று 'கிரீச்' என்ற மோட்டார்ச் சத்தம் கேட்டது. அதைத் தொடர்ந்து 'டுமீல் டுமீல்' என்ற துப்பாக்கி வெடி பாய்ந்தது. பல திசைகளிலும் தடுமாறி ஓடும் காலடிச் சத்தம் கேட்டது.

இதமான ஒரு கரம் என்னைத் தடவிக் கொடுத்தது. கைக் குட்டையால் என் முகத்தைத் துடைத்து விட்ட கரத்தை அன்போடு பற்றிக் கொண்டு மூடியிருந்த கண்களைத் திறந்தேன். சில போலீஸ்காரர்கள் புடைசூழ என்னைக் கட்டியணைத்தபடி நின்றான் என் நண்பன் எட்வேட்.

அப்படியே அவன் பாதங்களில் விழுந்து அவனை வணங்கினேன். ''இதுதான் உலகம் அப்பா !'' என்று யாரோ அறிவுறுத்துவது போல் இருந்தது. விஷம் உடைய நாகத்திடம் தானே மாணிக்கமும் உண்டு?

என் நண்பன் எட்வேட்டின் உதவியோடு யாழ்ப்பாணம் அடைந்தேன். நான் பட்ட அடியின் வேகம் குறைய மூன்று மாதங்கள் சென்றன.

அடுத்த மூன்று மாதங்கள் வீட்டில் ஓய்வெடுத்தபின் எனக்கு யாழ்ப்பாணத்தில்

பழி ஓரிடம் !



செய்தி : ''நடுத் தெருவில் அடிதடி செய்த அவர்கள் இருவரும் போலீஸ் ஸ்டேஷனுக்கு அழைத்துச் செல்லப் பட்டார்கள். விலக்கப்போன நபர் ஆஸ்பத்திரியில் சேர்க்கப்பட்டார் !''

அளவெட்டி என்னும் இராமத்தில் வேலை கிடைத்தது.

சங்கரின் விம்மல் சிந்தனையைக் கலைத்தது.

"சங்கர்! அழாதேப்பா. வீட்டுக்கு ஓடிப் போய் உடையை மாற்றிக் கொண்டு வா!" என்றேன் அன்போடு.

அவன் சொன்ன பதில் என்னைத் திகைக்க வைத்தது.

அவனிடம் உடுத்தியிருந்த உடையைத் தவிர வேறு கிடையாதாம்!

இந்த உலகத்தை ஒரு முறை எண்ணிப் பார்த்தேன். பல உடைகளை வைத்துக் கொண்டு அடுத்த நேரம் எதை உடுப்பது என்று தடுமாறுகிறார்கள் ஒரு சாரார். போட்டிருக்கும் உடைக்கு மாற்றுடை இல்லையே என்று ஏங்குகிறார்கள் இன்னுமொரு சாரார்.

அவனை அழைத்துக் கொண்டு போய் எனது உத்தரீயத்தை எடுத்துக் கொடுத்தேன், மாற்றிக் கொள்ளும்படி.

அவன் மேல் எனக்கு வந்த நாளாக ஒரு தனி அன்பு. வகுப்பில் மிகுந்த கட்டி, அடக்க மாணவன், ஆனால் ஏழை என்பவைதான் நான் அவனைப் பற்றிப் புரிந்துகொண்டவை.

அன்றையப்பொழுது எப்படியோ கழிந்தது.

மூன்றும் நாள்! எங்கள் பாடசாலையில் ஒரே ஆரவாரம். அன்று பெற்றோர் தின விழாக் கொண்டாட ஆயத்தப்படுத்தியிருந்தார்கள். அன்று பரிசு பெறப் போகும் மாணவரின் பெயர்ப் பட்டியலைப் பார்த்தேன்.

அந்தப் பட்டியலில் சங்கர் என்ற பெயரும் அதன் பக்கத்தில் ஒரு சிறு இடைவெளி விட்டு ஆறு பரிசுகள் என்றும் எழுதப்பட்டிருந்தன. மாலை ஆறு மணிக்குப் பெற்றோர் தின விழா ஆரம்பமாகவிருந்தது. மணி ஐந்தாகியிருந்தது. பரிசு பெறும் மாணவர்களில் சங்கரைத் தவிர ஏனைய மாணவர்கள் எல்லாரும் பிரசன்னமாகியிருந்தார்கள். சங்கர் வருவதாகக் காணோம். நேரம் போய்க் கொண்டிருந்தது. அவன் வீட்டை நோக்கி நடந்தேன்.

மாமரங்கள் அடர்ந்திருந்த சோலையின் நடுவே ஓலையால் வேயப்பட்டிருந்த ஒரு சிறு குடிசையில் கிழிந்து போன பாய் ஒன்றின் மேல் அமர்ந்திருந்தான் அவன்.

"சங்கர்!" என்று குரல் கொடுத்தேன்.

"ஸார்! நீங்களா...?" என்று பதற்றத்துடன் கேட்டான் அவன்.

"ஆமாம், சங்கர்! நீ ஏன் இன்னும் வரவில்லை என்று பார்த்து விட்டுப் போகலாம் என்று வந்தேன்..."

"எனக்கு உடை நல்லாயில்லை சார்!" விம்மலுக்கிடையே பதில் வந்தது.

"பூ! இவ்வளவுதானா? இதை நீ ஏன் என்னிடம் நேற்றே கூறவில்லை?" என்று ஆறுதலாகக் கூறி அவனை அழைத்துக் கொண்டு ஒரு கடைக்குள் சென்றேன்.

அவனுக்குப் பிடித்த ஒரு கால்சட்டையும் அதற்கேற்ற ஒரு ஸில்க் சட்டையும் வாங்கிய பிறகு இருவரும் பாடசாலையை நோக்கி வேகமாக நடந்தோம்.

பெற்றோர் தின விழா அப்போதுதான் ஆரம்பமாகியிருந்தது. என் மனம் கவர்ந்த சங்கரின் குடும்ப வரலாற்றை அறிய மிகவும் ஆவலாக இருக்கவே, "சங்கர்!" என்றேன்.

"ஸார்!" என்றான் அவன்.

"உனக்கு அப்பா இல்லையா?"

"உண்டு ஸார்!"

"அப்பா உயிருடன் இருந்துமா நீ இந்த நிலையில் இருக்கிறாய்?"

"அது பெரிய கதை ஸார்! கசப்பானது கூட!" பெரிய மனிதனைப் போல் என் ஆவலைக் கிண்டி விட்டு அறுத்துக் கொண்டான் அவன்.

"பரவாயில்லை! உன் கதையை எனக்குச் சொல்லக் கூடாதா?" என்று அவனை ஆர்வத்தோடு பார்த்தேன்.

"நான் பிறந்த சில நாட்களிலேயே என்னையும் என் தாயாரையும் தவிக்கவிட்டு அவர் ஒரு பணக்காரப் பெண்ணை மணந்து கொண்டார். அவருக்கு மூன்று குழந்தைகள்கூட உண்டு ஸார்!"

என் நெஞ்சு துடித்தது. இப்படிக்கூட ஒரு தந்தை இருக்க முடியுமா என்ற எண்ணத்தில்.

"ஊரார் கூட இதை எதிர்க்கவில்லையா?" என்றேன்.

"ஊருக்கும் உலகத்துக்கும் என்ன ஸார்? அவர்களைப் பொறுத்த வரையில் அவர் பெரிய மனிதர். பணமும் பதவியும் இருக்கும்வரையில் ஒருவர் குற்றத்தை எடுத்துக் கூற உலகம் ஒருநாளும் துணிவதில்லை. இன்று என் அப்பா இந்த ஊருக்கே ஒரு தலைவர் போலத் திகழ்கிறார் ஸார்....!"

அநுபவப்பட்டவன் போல் ஒரு குட்டிப் பிரசங்கமே செய்துவிட்டான் சங்கர்.

"சங்கர்!" என்றேன் கடுமையாக. "ஒரு வேளை உங்கள் சரித்திரம் தெரியாத நிலையில் உலகம் அவரைக் கொண்டாடியிருக்கலாம்."

"இல்லை, ஸார்! முழுக்க முழுக்கத் தெரிந்து கொண்டுதான் உலகம் அவருக்குப் புகழ்மாலை சூட்டுகிறது. அவரை எதிர்க்க, அவர் சொல்லைத் தட்ட இந்த ஊராருக்கு நெஞ்சுத் துணிவும் நேர்மைத் திறனும் கிடையாது ஸார்! கிடையாது."

ஏமாற்றத்தின் எதிரொலி குரலில் தொனிக்கக் கூறினான். அந்தப் பதினான்கு வயதுப் பையனின் கதை என் உள்ளத்தை உருக்கியது.

"உன் அப்பா யார்....? அவர் பெயர் என்ன?" என்று கேட்டேன் கதையோடு கதையாக.

"அதோ....!" அவன் சுட்டிக் காட்டிய திசையை எட்டிப் பார்த்தேன்.

என் இதயமே ஒருமுறை நின்றுவிடும் போல் பயங் காட்டியது.

நான் மறுவார்த்தை பேசவில்லை. "இது தான் உலகம்! வா, சங்கர்! நாம் போகலாம். அந்தத் தீயவனின் கையால் நீ பரிசு கூடப் பெற வேண்டாம்....வா, ராஜா!" விம்மும் அவனை அணைத்தபடியே சென்று கொண்டிருந்தேன்.

அங்கே அன்றையப் பெற்றோர் தின விழாவுக்குத் தலைமை தாங்கிப் பரிசு கொடுக்க முன் வந்திருந்த பெரியார்தான் சங்கரைப் பெற்ற அப்பா என்பது நான் கூறாமலே உங்களுக்கு விளங்கியிருக்குமே?

## அத்தியாயம் முப்பத்து மூன்று

யாரோ தனக்கு அறிமுகமில்லாத ஒரு பெண் அந்த அறைக்குள் வருவதாக எண்ணிக் கொண்ட சாரங்கன் உடம்பை ஏழு கோணலாக நெளித்து நாற்காலியில் ஒடுங்கிச் சாய்ந்தவாறு கையிலிருந்த ஆரஞ்சுப் பழத்தின் தோலை நீக்கிச் சுளை எடுப்பதில் கவனம் செலுத்தினான்.

பொன்மணிகள் குலுங்குவது போன்ற மென்னகை யொலி எழுந்தது.

சட்டென்று நிமிர்ந்த சாரங்கன், "ஓ....நீதானா?... அடையாளமே தெரியவில்லையே!" என்று வியப்பால் கரையும் குரலில் இழுத்தான்.

"ஆமாம், அண்ணா! இன்றுதான் கண்ணாடியில் பார்த்தேன். எனக்கே என்னை அடையாளம் தெரியவில்லை" என்று புன்முறுவலுடன் கூறிக் கொண்டே மேஜையருகில் வந்து தலைகுனிந்து நின்றாள் கோமதி.

அவளது புன்னகைக்குப் பின்னால் பொங்கிக் குமுறிய துயரத்தை அந்தக் கணமே அறிந்து கொண்ட சாரங்கன், முன்பின் யோசியாமல் இசைபிசகான கேள்வியைக் கேட்டு விட்டோமே என்று துணுக்குற்று வருந்தினான். அவளை நேராகப் பார்க்க அவனுக்குத் தைரியம் வரவில்லை. எதிரே சுவரோரம் நின்ற பீரோவின் தூசு படிந்த நிலைக் கண்ணாடியில் மங்கலாகத் தெரிந்த அவளது உருவத்தை ஓரக் கண்ணால் பார்த்தவாறு "இல்லை, கோமதி! ஏழெட்டு நாட்களுக்குள் பாதி உடம்பாக இளைத்து விட்டிருக்கிறாயே என்றுதான் கேட்டேன். படுக்கையில் கிடந்தபோது இந்த வித்தியாசம் எனக்குத் தெரியவே இல்லை!" என்றான் சாரங்கன் அசட்டுச் சிரிப்புடன்.

"நானும் அதைத்தான் சொன்னேன் அண்ணா!" என்று கூறி மெல்ல நகைத்தாள் கோமதி.



# சொர்க்கத்தின் நிழல்



# ஜெகசிற்பியன்

"பின்னே ஏன் இதற்குள் படுக்கையிலிருந்து எழுந்து நடமாட ஆரம்பித்து விட்டாய்? இன்னும் இரண்டொரு நாட்கள் காலைக் கட்டிப்போட்டு வைத்திருக்கக் கூடாதா?"

"நீங்கள் சொல்வது போலத்தான் என் அம்மாவும் சொல்லுகிறார்கள்!" என்று குறும்புக் குரலில் பதில் சொன்னாள் கோமதி.

"அம்மாவா? அது யார் உன் அம்மா?" என்று சற்றே வியப்புடன் கேட்டான் சாரங்கன்.

கோமதி இதற்கு உடனே பதில் சொல்லாமல் மேஜை விளிம்பை நகத்தால் கீறிக் கொண்டிருந்தவள் ஒரு விநாடிக்குப் பின் கம்மிய குரலில் கூறினாள்: "என் அம்மா சிவகாமியைத்தான் சொல்கிறேன், அண்ணா! செத்துப்போன அவள், சுந்தரியம்மாளின் உருவில் உயிர்த்தெழுந்து வந்துவிட்டாளே, உங்களுக்குத் தெரியாதா?"... மேஜையின் விளிம்பில் இரு சொட்டுக் கண்ணீர்த் துளிகள் உதிர்ந்து சிதறின.

"ஓகோ!...விவேகானந்தனின் அக்காவைச் சொல்கிறாயா?" என்று பெரிதாகத் தலையசைத்தான் சாரங்கன்.

"ஆமாம், அண்ணா! அந்த அம்மாளின் அன்பும் ஆதரவும் இல்லையானால் நான் உயிர் பிழைத்து நடமாடி யிருப்பேனா என்பது சந்தேகமே!" என்றாள் கோமதி நன்றி யுணர்ச்சியால் குரல் குழைந்து நடுங்க.

"அப்படியானால் அவர்கள் சொன்னபடி நீ ஏன் நடக்கவில்லை?" என்று பொய்க் கோபத்துடன் கேட்டான் சாரங்கன்.

சிறிதே தயங்கிச் சிரித்த கோமதி தணிந்த குரலில் சொன்னாள்: "கோபித்துக் கொள்ளாதீர்கள், அண்ணா! இன்று காலை டாக்டர் மாசிலாமணி வந்து என் முகத்தில் போட்ட கட்டுக்களை அவிழ்த்தபோது இன்னும் இரண்டொரு நாட்கள் படுக்கையிலேயே இருந்து ஓய்வெடுத்துக் கொள்ள வேண்டும் என்றுதான் சொன்னார். ஆனால், அதற்கு மேல் ஒரு நிமிஷம் கூட என்னால் படுக்கையிலிருக்க முடியாது போலாகி விட்டது. காரணம், எனக்காக இரண்டு பேர்கள் கடந்த ஏழெட்டு நாட்களாய் உணவு உறக்கமின்றிக் கவலையில் ஆழ்ந்து வாடிக் கொண்டிருப்பதைக் காண, எனக்கு என் முகத்தில் ஏற்பட்ட ரணங்களை விட அதிக வேதனை அளிப்பதாக இருந்தது. அதனால்தான் டாக்டரும் சுந்தரியம்மாளும் சொல்லியும் கேளாமல் படுக்கையை விட்டு எழுந்து விட்டேன்."

சாரங்கன் இதைக் கேட்டுக் 'குபுக்' கென்று சிரித்தான். "நல்ல வேடிக்கைதான்! உனக்காக யார் அப்படி ஊண் உறக்கமின்றி உருகிக் கொண்டிருக்கிறார்களாம்?"

"அதோ பாருங்கள் அண்ணா, அந்த நிலைக்கண்ணாடியில்! என்னைவிட நீங்கள்தான் பாதி உடம்பாக இளைத்து, ஆளே உருத் தெரியாமல் மாறி விட்டிருக்கிறீர்கள்! கடந்த ஏழெட்டு நாட்களாக ஆபீஸுக்கும் போகாமல் என் அருகிலேயே உட்கார்ந்து கண்ணீர் வடித்துக் கொண்டிருந்ததை நான் காணவில்லை என்று எண்ணிக் கொண்டிருக்கிறீர்கள்?" என்று பொருமும் குரலில் கேட்டாள் கோமதி.

"பைத்தியம்! பைத்தியம்! உனக்காக நான் ஏன் கண்ணீர் வடிக்கப் போகிறேன்? கனவு கண்டு உளறுகிறாயா?" என்று ஒரு விசித்திர ஒலியெழுப்பிச் சிரித்த சாரங்கன் சட்டென்று கழுத்தை நீட்டி, "அது சரி;

உனக்காக உருகிக் கரையும் இன்னொரு பிரகஸ்பதி யார்?'' என்று கேட்டான் கேலிக் குரலில்.

கோமதியிடமிருந்து இதற்குப் பதில் ஏதும் வரவில்லை. மெள்ளத் தலை நிமிர்ந்த அவள் எதிரே யிருந்த அறை யொன்றின் சாத்தப் பெற்ற கதவுப் பக்கம் தன் பார்வையைத் திருப்பினாள். அந்த இரட்டைக் கதவுகளின் மேற் பகுதியில் பனிக்கட்டிப் பலகை போன்ற மங்கலான கண்ணாடி பதிக்கப் பெற்றிருந்தது. அந்தக் கண்ணாடிச் சட்டத்தின் உட்புறம் ஏதோ ஒரு நிழல் அங்குமிங்குமாக மெல்ல அசைந்து கொண்டிருப்பது இலேசாகத் தெரிந்தது. அந்த நிழலைப் பார்த்துப் பெருமூச்சு விட்ட கோமதி சோர்வுடன் தலை குனிந்தாள்.

மடியில் கிடந்த ஆரஞ்சுப் பழத்தோலை ஜன்னல் வழியே எறிந்து விட்டு வந்த சாரங்கன், ''சரி; அந்த இரண்டாவது நபரைச் சொல்ல உனக்கு விருப்பமில்லையென்றால் நானே சொல்கிறேன்!'' என்றான் மூக்கடைத்த குரலில். திடீரென்று அவனுக்குச் சிரிப்பு வந்து விட்டது. ஏதோ ஒரு பெரிய ஹாஸ்யத்தைத் தனக்குள்ளாகவே ரசித்துக் கொள்கிறவன்போல் தலையைச் சுழற்றிச் சுழற்றிச் சிரித்தான். மூச்சு முட்ட விலாவை அழுத்திப் பிடித்துக் கொண்டு பொங்கிப் பொங்கிச் சிரித்தான்.

இப்படிக் கோமாளித்தனமாக அவன் சிரிப்பதைக் கண்ட கோமதிக்கும் சிரிப்பு வந்து விட்டது. ''சொல்ல நினைத்ததைச் சொல்லி விட்டுச் சிரியுங்களேன், அண்ணா!'' என்றாள் நகைத்தவாறு.

சாரங்கன் சட்டென்று எதையோ நினைத்துக் கொண்டவனாய் வாயைப் பொத்திச் சிரிப்பை அடக்கிக் கொண்டு சுற்றுமுற்றும் திரும்பிப் பார்த்துத் திருடனைப்போல் விழித்தான். பிறகு இரகசியக் குரலில், ''கோமதி! டாக்டர் ராமநாதன் உள்ளே இருக்கிறாரா? இது அவர் வீடு என்ற எண்ணமே இல்லாமல் நான் பாட்டுக்கு உரக்கப் பேசிச் சிரிக்கிறேனே!'' என்று படபடத்தான்.

''இல்லை, அண்ணா! அவர் மருத்துவ விடுதிக்குப் போயிருக்கிறார். சுந்தரியம்மாளும் வீட்டில் இல்லை. கமலி மட்டும்தான் மாடியில் இருக்கிறாள்'' என்றாள் கோமதி.

''அப்பாடா!'' என்று பெருமூச்சு விட்ட சாரங்கன் மீண்டும் சிரிக்க ஆரம்பித்துவிட்டான். சிரித்துச் சிரித்து அவன் தொண்டையும் கம்மிவிட்டது. பூனைக்குட்டி முனகுவது போன்ற 'ஙொய், ஙொய்' என்னும் ஒலி மட்டுமே எழுந்தது. அந்த ஒலியுடன் மூச்சொலியும் சேர்ந்து இரைப்பு வாங்க, திணறித் திணறிச் சொன்னான்: ''அதாவது... உனக்காக என்னைப்போல் உருகிக் கரைந்த இன்னொர் ஆத்மா கமலி என்கிறாய்; அப்படித்தானே?''

இந்தப் பதிலைக் கேட்ட கோமதிக்குச் சப்பென்றாகி விட்டது. தன் வாயைக் கிளறி வேடிக்கை பார்க்கவே அவன் இப்படி விஷமமாகப் பேசுகிறான் என்று எண்ணிய கோமதி, ''ஆமாம், அண்ணா! அவளும் எனக்காகப் பெரிதும் சிரமப்பட்டிருக்கிறாள். அவளது அன்புப் பணிகளை என்னால் மறக்கவே முடியாது!'' என்றாள் உணர்ச்சி வயப்பட்ட குரலில்.

'நீ சொல்வதைப் பார்த்தால் என்ணிக்கை மூன்று என்றல்லவா ஆகிறது?'' என்று வியப்படைந்தவன் மாதிரி கண்களை அகல விரித்தபடியே கேட்டான் சாரங்கன்.

இதற்கு மேலும் அந்த விஷயத்தைத் தொடர விரும்பாத கோமதி மெள்ளப் பேச்சை மாற்றி, ''ஏன் அண்ணா! அன்றைக்கு நான் அந்த ஆபத்தான நிலையில் கிடந்தபோது, கமலி உங்களை எங்கெல்லாமோ தேடி விட்டுக் கடைசியில் ரயில்வே ஸ்டேஷனில் கண்டு பிடித்து அழைத்து வந்தாளாமே, அது உண்மைதானா?'' என்று வினவினாள்.

சாரங்கன் பதிலேதும் சொல்லாமல் மூக்கை உறிஞ்சி முகத்தைத் துடைத்துக் கொண்டு வெறும் வாயை அசை போட்டபடி மௌனமாயிருந்தான்.

''நீங்கள் சொல்லாவிட்டாலும், அப்போதைய உங்கள் முடிவு என்னவாயிருந்திருக்கும் என்பதை என்னால் யூகிக்க முடிகிறது, அண்ணா! என்னைப் பற்றிய தகவல் கிடைக்காததால் மனமுடைந்த நீங்கள் இந்த ஊரையே வெறுத்து வேறெங்காவது போய்விடத் தீர்மானித்திருப்பீர்கள். அல்லது பம்பாய், கல்கத்தா முதலான நகரங்களுக்குப் போய் என்னைத் தேடிப் பார்க்கலாம் என்று கிளம்பியிருப்பீர்கள் - அப்படித்தானே?'' என்று கேட்டாள்.

சாரங்கன் இதற்குப் பதில் சொல்லாமல் தலையை அப்படியும் இப்படியுமாக ஆட்டியபடி பேசாதிருந்தான். கோமதி உணர்ச்சி நிறைந்த குரலில் தனக்குள் பேசிக் கொள்கிறவளைப்போல் சொன்னாள்: 'ஏழைகளின் மீதே எப்போதும் இறைவனின் நிழல் சாய்ந்து நிற்கும் என்பதில் எனக்கு அசைக்க முடியாத நம்பிக்கை உண்டு. அன்று அந்த வெறி பிடித்த ஜமதக்கினியின் வீட்டில் நான் அடைந்து கிடந்தபோது நீங்கள் மட்டும் அங்கு வராதிருந்தால் என்னுடைய நிலைமை என்ன ஆகியிருக்குமோ?

அது ஆண்டவனுக்குத்தான் தெரியும். நீங்கள் வந்து விசாரித்தபோது ஒன்றுமே தெரியாத மாதிரி பேசி உங்களை அனுப்பிவிட்ட ஜமதக்னி உள்ளூற உதறலெடுத்து விட்டார். நீங்களோ அல்லது கமலியோ போலீஸில் புகார் செய்து விட்டால் என்ன செய்வது என்ற பயம் அவருக்கு! ஆத்திரத்தில் செய்த காரியம் தன்னை ஆபத்தில் சிக்க வைத்து விடுமோ என்று அஞ்சி நடுங்கிய அவர், மெள்ள வந்து நான் அடைக்கப்பட்டிருந்த அறைக்கதவைத் திறந்து விட்டுச்—சடாரென்று மாடிக்கு ஓடிக் கதவைச் சாத்திக் கொண்டார். அக்கணமே அந்த வீட்டை விட்டு வெளியேறினேன். எனக்கு இழைக்கப்பட்ட தீங்குக்கு நான் பரிகாரம் தேட முயன்றால் அது எனக்கே பல வகையிலும் பாதகமாய் முடியுமென்பதை உணர்ந்து, அம்மாதிரி முயற்சிகளில் நேரத்தை வீணாக்காமல் நேரே உங்கள் நண்பரின் வீட்டுக்குப் போனேன். அங்கு என்ன நடந்திருக்குமென்று எதிர்பார்த்துப் போனேனோ, அந்த அநியாயச் செயல் அப்போதுதான் என் கண் எதிரேயே நடக்கவிருந்தது. அதைத் தடுக்கும் சக்தியை இறைவன் எனக்கு அளித்து, எனது ஆத்மக் கனவின் மூலவேரை அழித்து விடாமல் காப்பாற்றினார்...''

கோமதி தன் பேச்சை முடிப்பதற்குள்ளாகவே பொறுமையிழந்த சாரங்கன் கையைத் தலைக்கு மேலே தூக்கி ஆட்டி, "போதும்! போதும்! எத்தனை முறைதான் அந்தக் கசப்பான சம்பவங்களைச் சொல்வாய்? இனிமேல் அவற்றை என் காதிலேயே போடாதே! நெஞ்சு பற்றி எரிகிறது!'' என்று கடுகடுத்தான்.

கோமதி தனது கால் பெரு விரலினால் தரையில் கோடு கிழித்தபடி சற்று நேரம் மௌனமாயிருந்தாள். பிறகு மெள்ளத் திரும்பி அந்த எதிர் அறையின் கதவுப் பக்கம் தன் பார்வையைச் செலுத்தினாள். அந்தக் கதவின் கண்ணாடிச் சட்டத்தில் இன்னமும் அந்த நிழலுருவம் அசைந்தபடிதான் இருந்தது. சட்டென்று ஏதோ நினைவு வரப்பெற்றவள்போல் சுவரிலே மாட்டித் தொங்கிய காலண்டரில் அன்றையத் தேதியைப் பார்த்து விட்டு அவசரமாக ஓரடி முன் சென்று, "ஏனண்ணா! நேற்று நடந்து முடிந்த உப-தேர்தலின் வோட்டு விவரங்கள் இன்றுதானே வெளியாகின்றன?'' என்று கேட்டாள்.

"ஆமாம்'' என்று அலட்சியமாகத் தலையசைத்தான் சாரங்கன்.

"அது பற்றிய விவரம் உங்களுக்கு ஏதாவது தெரியுமா, அண்ணா?''

**வழியடி வழியாக!**



"என் மனைவிக்கு மோட்டார் ஓட்டத் தெரிந்து விட்டது! எனக்கு எல்லாப் போலீஸ் ஸ்டேஷனுக்கும் வழி தெரிந்து விட்டது!''

"அந்தப் பெரிய விஷயங்களைப் பற்றியெல்லாம் சிறிய மனிதனான நான் எப்போதுமே கவலைப்படுவதில்லை!''

"வோட்டெடுப்பு நடந்த நிலவரங்களைக் கொண்டு உத்தேசமாகவேனும் ஒரு முடிவு தெரிந்திருக்குமே?''

"அந்த மாதிரியான முடிவு ஏழெட்டு நாட்களுக்கு முன்பே எனக்குத் தெரிந்து போய்விட்டது.''

"அப்படியானால் உங்கள் நண்பர்தான் வெற்றியடைவார் என்கிறீர்களா?''

"இன்னும் இரண்டு மணி நேரம் பொறுத்திருந்து பதில் பெற வேண்டிய கேள்வி இது!'' என்று சொல்லி மூக்கை வேகமாக இழுத்து உறிஞ்சிக் கொண்டான் சாரங்கன்.

கோமதியின் உடல் இலேசாகப் பதறியது. உதடுகளை மடித்துக் கடித்து அந்தப் பதற்றத்தை அடக்கிக் கொண்ட அவள், "இது பற்றி அவரிடம் நீங்கள் ஒன்றுமே கேட்கவில்லையா, அண்ணா?'' என்று பயந்த குரலில் வினவினாள்.

"ஓ,—உனக்கு அந்த விஷயம் தெரியாதா?'' என்று கேலியாக இழுத்த சாரங்கன் ஓர் அலட்சியச் சிரிப்பு சிரித்து, "என்னிடம் அவன் பேசி ஏழெட்டு நாட்களுக்கு மேல் ஆகிவிட்டன! என் முகத்தில் கூட அவன் விழிப்பதில்லை!'' என்றான். மீண்டும் அவன் தொடர்ந்து, "ஆமாம், கோமதி! அன்றிரவு அந்த நயவஞ்சகர்களின் சதித் தாக்குதலுக்கு உள்ளாவதிலிருந்து அவனை எச்சரிக்க வந்த உன்னைக் கன்னத்தில் அறைந்து விரட்டியதோடல்லாமல், என்னிடம் வந்து அதைப் பெருமையாகவும் சொல்லிக் கொண்டான். ஆத்திரமடைந்த நான், 'இனிமேல் நீ என் முகத்திலேயே விழிக்காதே' என்று சொல்லி வெளியே போய் விட்டேன். பெரிய இடத்துப் பிள்ளையல்லவா? ரோஷம் பொத்துக் கொண்டு வந்து விட்டது. அன்று முதல் அவன் என்னைத் திரும்பியும் பார்ப்பதில்லை. இதனால்தானோ என்னவோ,

அன்றிரவு உனக்கு நேர்ந்த ஆபத்தின் போதுகூட அவன் என் உதவியை நாடாமல் நேரே சிவப்பிரகாசத்திடம் போய்ச் சரணடைந்திருக்கிறான்'' என்று சொல்லி முகத்தை ஒரு விசித்திரமான கோணத்தில் சுளித்து முறுக்கினான்.

இந்த விவரங்களைக் கேட்ட கோமதி திகிலடைந்தவளாய் ஓசையின்றிப் பின்னால் நகர்ந்து நின்று கொண்டாள். நகமும் சதையும் போல் இருந்த நண்பர்களிடையே இப்படி ஒரு வினை மனக் கசப்பும் பிளவும் ஏற்படத் தான் காரணமாகி விட்டோமே என்று எண்ணி உள்ளம் குமைந்தாள் அவள். ''வருத் தப்படாதீர்கள் அண்ணா! உங்கள் மேல் அவருக்கு எவ்விதக் கோபமும் இருப்பதாக எனக்குத் தெரியவில்லை'' என்றாள் தணிந்த குரலில்.

''ஓகோ! அப்படி அவன் உன்னிடம் வந்து சொன்னானா?''

''இல்லை, அண்ணா! இந்த வீட்டுக்கு வந்து சுயப்பிரக்ஞை பெற்று எழுந்தது முதல் இன்னும் அவரை நான் பார்க்கவே இல்லை. அவர் எங்கே இருக்கிறார், என்ன செய்கிறார் என்பதும் எனக்குத் தெரியாது......''

''பின்னே எப்படி அவனுக்காகப் பரிந்து பேசுகிறாய்?''

''உங்கள்மீது அவருக்கு மனவருத்தமிருந்தால் இங்கு நீங்கள் என்னை வந்து பார்க்க அநுமதித்திருக்க மாட்டாரே என்பதால் சொல்கிறேன்.''

''ப்பூ! என்னை இந்த வீட்டுக்கு வர வேண்டாம் என்று சொல்ல அவன் யார்? என் தங்கையைப் பார்க்க நான் இங்கு வருகிறேன். கூடாது என்று தடுக்க யாருக்கும் உரிமை கிடையாது.''

''அண்ணா...'' என்று வாய் நிறைய அழைத்து மௌனமானாள் கோமதி.

## அத்தியாயம் முப்பத்து நான்கு

உணர்ச்சிக் கனலால் பொசுங்கிச் சிலைப்பால் நின்றிருந்த கோமதி சற்று நேரங் கழித்துக் கம்மிய குரலில், ''அண்ணா! இந்த எளிய சகோதரியை நீங்கள் உண்மையாகவே நேசிப்பதானால், உங்கள் அன்பு நண்பரான அவரை என் காதுபட வெறுத்துப் பேசாதீர்கள். அதைத்தான் உங்களிடம் நான் மன்றாடிக் கேட்டுக் கொள்கிறேன்'' என்று கூறினாள்.

''ஆமாம்; அடித்த கையை முத்தமிடத் தெரிந்த மகா பெரிய ஞானி நீ! எனக்குப் புத்திமதி சொல்ல வந்து விட்டாய்!'' என்று வார்த்தைகளைக் குதப்பிச் சிடுசிடுத்தான் சாரங்கன்.

''இல்லை, அண்ணா! அன்றிரவு அவர் என்னிடம் அத்தனை முரட்டுத்தனமாக நடந்து கொண்டது முற்றிலும் சரி என்றே எனக்குப் படுகிறது. உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசாதவர்களின் செயல்கள் எப்போதும் அப்படித்தான் இருக்கும். அதனால்தான் அவர் மீது நான் வைத்திருந்த மதிப்பு அன்று முதல் பன்மடங்காக உயர்ந்திருக்கிறது.''

சாரங்கன் அவளை வியப்புடன் பார்த்து நமட்டுச் சிரிப்பு சிரித்தான். பிறகு தனக்குள் முனகிக் கொள்கிறவன்போல், ''இருக்கட்டும், இருக்கட்டும்! எத்தனை நாளைக்கு அவன் இந்த முறைப்பும் திருப்புமாய் இருந்து விடுவான்? இன்று ஒருநாள் பார்த்துக் கொண்டு, நாளைக்கு நானே போய் அவனிடம் பேசுவது என்ற முடிவிலிருக்கிறேன். அப்போது என்ன செய்வானாம்? அசடு! பல்லை இளித்துக் குழைந்து கொண்டு பேச வருவான்! நானா பேசுவேன்? சும்மா ஒரு 'ஸ்மைல்' பண்ணி விட்டு நடந்து கொண்டே இருப்பேன். அப்படித்தான் அவனை மட்டம் தட்ட வேண்டும்!'' என்று ஒருவித அடைப்பும் துடிப்புமான குரலில் கூறிக் கொண்டே நாற்காலியில் விறைப்பாக நிமிர்ந்து உட்கார்ந்தான்.

அவனுடைய இந்த உளறல்களையும் சேஷ்டைகளையும் பார்த்த கோமதிக்குச் சிரிப்பும் வந்தது; துக்கமும் அடைத்துக் கொண்டது. விவேகானந்தனுடன் பேசாமலிருப்பதால் அவன் எந்த அளவுக்கு மனம் நொந்து விரக்தியடைந்திருக்கிறான் என்பதையும் அவளால் புரிந்து கொள்ள முடிந்தது. இப்படியொரு கசந்த நிலையிலே அவனது மனத்தை ஆழ்த்தி வைக்க விரும்பாத அவள் மெள்ளப் பேச்சை மாற்றி, ''எதற்கண்ணா, இவ்வளவு பழங்கள் வாங்கி வந்திருக்கிறீர்கள்? இதெல்லாம் உங்களுக்கு வீண் செலவு இல்லையா?'' என்று இதமான தொனியில் கேட்டாள்.

வெடுக்கென்று திரும்பி அவளை ஏறிட்டு நோக்கிய சாரங்கன், ''அப்படிப் பார்க்கப் போனால் நான் இங்கே வந்ததும் வீண்தான்! உன்னுடன் உட்கார்ந்து பேசிக் கொண்டிருப்பதும் வீண்தான்!'' என்று சுடச்சுடச் சொன்னான்.

கோமதி இதைக் கேட்டுக் களுக்கெனச் சிரித்தாள். ''கோபித்துக் கொள்ளா

தீர்கள், அண்ணா! சுந்தரியம்மாள் வாங்கி வந்து குவிக்கும் பழங்களைத் தின்னவே என்னால் முடியவில்லை. நீங்கள் வேறு இவ்வளவு நிறைய வாங்கி வருகிறீர்களே என்றுதான் சொல்கிறேன்.''

''நீ கொடுத்து வைத்தவள்! எல்லாருக்கும் இம்மாதிரி அன்பார்ச்சனைகள் கிடைக்குமா?'' என்று கேலி செய்தான் சாரங்கன்.

கோமதி நீண்டதொரு பெருமூச்சுவிட்டுச் சொன்னாள்: ''நீங்கள் நினைப்பது தவறு, அண்ணா! இந்தப் பெரிய பங்களாவில் நான் இருந்துகொண்டு ஒவ்வொரு நாளையும் கழிக்க எவ்வளவு சிரமப்படுகிறேன் என்பது உங்களுக்குத் தெரியாது. புத்தி தெரிந்த நாள் முதல் வறுமைத் தீயிலேயே வெந்து கருகிக் கிடந்த எனக்கு இங்கு திடீரென்று ஏற்பட்டிருக்கும் இந்த இராஜபோக வாழ்வை ஜீரணித்துக் கொள்ளவே முடியவில்லை. இங்குள்ள எல்லாரும் என்மீது அளப்பரிய அன்பைப் பொழிகிறார்கள். அந்த அன்புச் சுமையை என்னால் தாங்கிக் கொள்ளவும் இயலவில்லை. அளவு மீறிய அன்புக்கு உள்ளாவதுகூட ஒரு வகையான துரதிர்ஷ்டம் என்றுதான் இப்போது எனக்குச் சொல்லத் தோன்றுகிறது. இப்படியே இன்னும் சில நாட்கள் நான் இருந்து விட்டால் என்னிடமுள்ள தன்னம்பிக்கையே அற்றுவிடுமோ என்றும் அஞ்சுகிறேன். பழகிப் போன ஒரு வாழ்க்கை முறையைத் திடீரென்று மாற்றிக் கொள்வது அத்தனை எளிதானதல்ல என்பதையும் இப்போது உணர்கிறேன்.''

இன்னும் அவள் ஏதோ சொல்ல முயன்றாள். அதற்குள் சாரங்கன் குறுக்கிட்டு, ''அப்படியானால் இந்த வீட்டில் தங்கியிருக்க உனக்கு விருப்பமில்லையா?'' என்று கேட்டான்.

''விருப்பமில்லை என்று என்னால் எப்படிச் சொல்ல முடியும், அண்ணா?'' என்றாள் கோமதி அர்த்தபுஷ்டியான ஒரு புன்முறுவலுடன்.

''பின் ஏன் இங்கு இருக்கப் பிடிக்காதவள்போல் பேசுகிறாய்?''

''நான் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும், இன்றோ நாளையோ, இன்னும் சில தினங்களிலோ இந்த வீட்டைவிட்டு வெளியேறித்தானே ஆகவேண்டும்? அதனால்தான் இங்கிருந்து எவ்வளவு சீக்கிரம் முடியுமோ அவ்வளவு சீக்கிரம் போய் விட விரும்புகிறேன்!''

சாரங்கன் இதைக் கேட்டுக் கட கட வென்று சிரித்தான். சிரித்துக்கொண்டே, ''அப்படியானால் நீ அந்த மரண கண்டத்திலிருந்து உயிர் பிழைத்திருக்கவே வேண்டியதில்லை என்று எனக்குப் படுகிறது. நீ செத்துப் போயிருக்கலாம். நிம்மதியாக, நிரந்தரமாகக் கண்ணை மூடிவிட்டிருக்கலாம்!'' என்றான் சிறிதும் இரக்கமற்ற குரலில். மீண்டும் அவன் தொடர்ந்து, ''ஆமாம், கோமதி! நான் எந்த உண்மைகளையும் மூடிமறைத்துப் பேச விரும்பாதவன். என் மனத்தில் படுபவற்றைப் பச்சையாகச் சொல்கிறேன், கேள்: இப்போதிருக்கும் நிலையில் நீ இந்த வீட்டை விட்டு வெளியேறினால், எங்கு போய், எந்த ஆதரவைக் கொண்டு, எப்படி வாழ்வாய் என்பதைச் சற்றே சிந்தித்துப் பார்! என் உடன்பிறந்த சகோதரியாக உறுதியுடன் ஏற்றுக் கொண்ட உன்னைக் கடைசி வரை என்னால் காப்பாற்ற முடியும் என்றாலும், அந்த அன்பு நிழலில் மட்டுமே நீ தங்கியிருந்து ஆத்ம திருப்தியடைய மாட்டாய் என்பது எனக்கு நன்றாகத் தெரியும். அதைத் தவறு என்றும் நான் சொல்ல மாட்டேன். உனக்கென்று ஒரு தனி வாழ்க்கை உண்டு என்பதையும் அதை நீயே உருவாக்கி அமைத்துக் கொண்டு அதன் இன்ப துன்பங்களைக் கண்டுணரத் துடிக்கிறாய் என்பதையும் நான் அறிவேன். ஆகவேதான், இப்போதைய உனது நிலை எனக்குத் துயரத்தை அளித்து விட்டிருக்கிறது. இந்நாள்வரை ஏதோ ஒரு பெரிய மனக் கோட்டை கட்டிக் கொண்டு, உன் நடிப்புத் தொழிலைக்கூட உதறிவிட்டு நின்றாய். நானும் சில சமயங்களில் அஞ்ச

### ஆராய்ச்சி!



''முன்பெல்லாம் டாக்டர் தினம் இரண்டுவேளை சாப்பாட்டுக்குப் பிறகு மருந்து சாப்பிடு என்று சொன்னால் 'மருந்து' எங்கே கிடைக்கும் என்று கேட்பார்கள்! இப்போது 'சாப்பாடு' எங்கே கிடைக்கும் என்று கேட்கிறார்கள்!''




ரேடியோ கேட்டுக் கொண்டிருப்ப வர் : ரொம்ப மோசம்! இந்தப் பாட் டெல்லாம் யார் கேட்டார்கள் ?

ரேடியோ : இது வரை நடைபெற் றது " நீங்கள் கேட்டவை !"

உனது உறுதியையும் தன்னம்பிக்கையை யும் எண்ணி உள்ளூற வியந்து பாராட்டி யிருக்கிறேன். உன்னுடைய இலட்சியக் கனவு ஒருகால் நிறைவேறினாலும் நிறை வேறலாம் என்றும் நினைத்திருக்கிறேன். ஆனால் அந்த நம்பிக்கை இப்போது முற் றிலும் சிதைந்து விட்டது. இனிமேல் நீயே விரும்பி, உன் வயிற்றுப் பிழைப் புக்காகவோ அல்லது வேறெந்தக் கார ணத்துக்காகவோ அந்தப் பழைய நடிப் புத் தொழிலை மேற்கொள்ளப் போனா லும் அதற்குத் தகுதி இல்லையென்று உன் னைத் தள்ளிவிட அது இப்போது தயாரா யிருக்கிறது. அதன் காரணத்தை நான் விளக்க வேண்டியதில்லை. அது உனக்கே நன்கு தெரியும் !" என்று அமைதி யாகச் சொல்லிப் பெருமூச்சு விட்டான்.

கோமதியின் உடல் கிடுகிடுவென்று நடுங்கியது. அவள் கண்களில் அருவி யெனக் கண்ணீர் பொங்கி வழிந்தது.

"கோமதி! நீ உயிர் பிழைத்து எழுந்த தால் உனக்கு ஒரு பயனும் இல்லை. உன் உள்ளக் கோயிலில் வைத்துப் பூஜிக்கப் பட்டவனின் உயிரைக் காப்பதற்காக உன்னையே பலியிடத் துணிந்தாயே, அந்தத் துணிவின் தூய தியாகத்தோடு உன் வாழ்க்கை முற்றுப் பெற்றிருக்க வேண்டும். அந்த உன்னத தியாகத்தின் மதிப்பைக் கெடுப்பது போல் நீ உயிர் பெற்று எழுந்து விட்டாய். உனது மரணத்தால் ஏற்படக் கூடிய அபவாதத் திலிருந்து தப்புவதற்காக இந்த வீட்டி லுள்ளோர் மிகுந்த கரிசனத்துடன் மருத்துவம் செய்து உன்னைப் பிழைத் தெழச் செய்து விட்டார்கள். அதோடு அவர்கள் கடமை தீர்ந்தது. அதற்கு மேல் உன்னுடைய எதிர்கால வாழ்க் கைக்கு உத்தரவாதமளிக்க அவர்களால் முடியுமா ? அப்படி எதிர்பார்ப்பது பைத்தியக்காரத்தனம். ஏனென்றால் அதற்குரிய எந்தவிதத் தகுதியும் இப் போது உன்னிடம் இல்லை. தகுதி இருப் பதாயிருந்தால், எவனுக்காக உன் அழ குச் செல்வத்தைத் தியாகம் செய்தாயோ அவன், இந்த ஏழெட்டு நாட்களில் ஒரு முறையாவது உன்னை வந்து பார்த் திருக்கமாட்டானா? செம்மலரோன் கைம்மலரால் செதுக்கி எடுத்த பொற் பாவைபோல் இருந்தபோதே ஏறெடுத் துப் பார்க்கவும் அருவருப்படைந்த அவனா, இப்போது குரூபியாய் நிற்கும் உன்னை வந்து பார்க்கப் போகிறான்? பணத்திலும், பதவியிலும், படிப்பிலும், அழகிலும், அந்தஸ்திலும், ஆடம்பரத் திலும் மயங்கி நிற்கும் உலகம் தங்கச்சி இது ! உள்ளத்தின் தூய்மையை உரித் துப் பார்த்து அதற்கு உரிய மதிப்பளிக்க ஒரு போதும் அது முன்வராது. இன் னொரு விஷயத்தையும் உன்னிடம் சொல்ல விரும்புகிறேன் : நீ இந்த விபத் துக்கு ஆளாகாத முன்வரை உனது காதல் வெற்றிக்காக எடுத்துக் கொண்ட முயற்சிகள் ஓரளவு நியாயமானவை யாய் இருந்திருக்கலாம். ஆனால், அந்த நியாய பலத்தையும் விதி இப்போது உன்னிடமிருந்து பறித்துவிட்டிருக்கிறது. ஆமாம், தங்கச்சி! அந்தப் பழைய முயற்சிகளை இனியும் நீ தொடர்ந்து செய்ய முடியாது. அப்படி முயன்றால், நீ செய்த தியாகத்துக்குக் கூலி கேட் கிறாய் என்ற அவப் பெயர்தான் உனக் குக் கிடைக்கும். அந்தமாதிரி ஓர் அவப் பெயருடன் நீ உயிர் வாழ்வதைவிடச் செத்துப் போவதே மேல் !"

" அண்ணா !" என அலறிக்கொண்டே ஓடிப் போய்க் கட்டிலில் குப்புற வீழ்ந் தாள் கோமதி.

எவ்வளவு நேரம் அவள் அப்படித் தேம்பித் தேம்பி அழுது கொண்டிருந் தாளோ, அது அவளுக்கே தெரியாது. முகமெல்லாம் வீங்கிப் புடைக்க மாலை மாலையாகக் கண்ணீர் வடித்தபடி உட் கார்ந்திருந்த சாரங்கன் அங்கிருந்து எப்போது எழுந்து போனான் என்பதும் அவளுக்குத் தெரியாது.

இப்படி ஒரு சவநிலையில் படுத்துக் கிடந்த கோமதி தன் புண்பட்டு ஆறி வரும் கருகிய வலக் கன்னத்தில் சூடான உப்புநீர்த் துளிகள் விழுந்து ஊறலெடுப் பதை உணர்ந்து வாரிச் சுருட்டி எழுந் தாள். அவள் பக்கத்தில் அமைதியே வடிவாய்த் தலைகுனிந்து அமர்ந்திருந் தான் விவேகானந்தன். (தொடரும்)

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs Bharathan Publications Private Limited at the Kalki Press, Kilpauk, Madras-10.
Managing Editor, T. Sadasivam.

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon






'வானவில்லின்
4 வித
வண்ணங்களில்
என் லக்ஸ் !
வெண்மையிலுங் கூட!'

என்கிறுர் எம்.என்.ராஜம்

LTS.93-50 TM

இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு